ஸ்ரீ:

# விஜ்ஞாபநம்

*ஶரண்யனுடைய ஸங்கல்பப்படி பாகவதோத்தமர்களால் நியமிக்கப்பட்டு ஜிஜ்ஞா ஸாதிகரணத்திற்கு வ்யாக்யானம் எழுத ஆரம்பித்துள்ளேன். நிர்விக்னமாகவும் தவறின்றியும் எழுதி பூர்த்திசெய்துவைக்கவேணுமாய் திவ்யதம்பதிகளை ஸதா ப்ரார்த்தித்து வருகிறேன். சில ஸௌகர்யங்களை உத்தேசித்து ஜிஜ்ஞாஸாதிகரணத்தை நாலு ஸஞ்சிகைகளாக வெளியிட உத்தேசித்துள்ளேன் ஸுமார் நூறு பக்கங்கள்வரையில் ஒரு ஸஞ்சிகை வெளியிடப்படும். முதல் ஸஞ்சிகையில் லகுபூர்வ பக்ஷம்வரை ப்ரசுரிக்கப்பட்டுள்ளது. அடுத்தபடியாக லகுபூர்வபக்ஷம், லகு ஸித்தாந்தம், மஹாபூர்வபக்ஷம் வரை வெளியிடப்படும். ஆறுமாதங்களுக்கு ஒரு ஸஞ்சிகை வீதம் ப்ரசுரிக்கப்படும், அதிகமாக காப்பிகள் வெளியிடாததால் கூடிய சீக்கிரம் காப்பிகளை வாங்கிக் கொள்வது நல்லது. நாலாவது அத்யாயம், பகவத்கீதை காப்பிகள் கைவசமில்லை. மூன்றுவது அத்யாயமும் ஸ்வல்ப காப்பிகளே உள்ளன. ஸ்ரீராமானுஜ தர்சனத்தைச் சேர்ந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் க்ருஹங்கள்தோறும் இந்த ஸ்ரீபாஷ்ய க்ரந்தம் இருக்கவேண்டு மென்று ஆசைப்படுகிறேன்.*

புரிசை நடாதூர் கிருஷ்ணமாசாரியர்

|| श्रीः ||

# ஸ்ரீ பாஷ்யம்

## श्री भगवद्रामानुजविरचितं शारीरकमीमांसाभाष्यम्

### முதல் அத்யாயம்

vol 1 1



श्रुतिशिरसिविदीप्तः श्रीनिवासः

ஸ்ரீ அஹோபிலமடம் ஆஸ்தாந வித்வான், ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா ஸம்பாதகர், தேசிக தர்சந சூடாமணி, ந்யாய சிரோமணி, புரிசை நடாதூர் ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸநம் ஸ்ரீபாஷ்யஸாராம்ருதவர்ஷீ

ஸ்ரீ உ.வ. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி

இயற்றிய

# ஸுபோதினி

Subodini.

என்கிற தமிழ் வ்யாக்யாநத்துடன் கூடியது

வெளியிடுவோர் :

## ஸ்ரீ விசிஷ்டாத்வைத ரிஸெர்ச் ஸெண்டர்

ஸ்ரீமுக வருஷம் சித்திரை மாதம் திருவாதிரை

27—4—1993

விலை : ரூ. 30/- ] [தபால் செலவு தனி

॥ श्रीः ॥

श्रीमते लक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः

श्रीमते रामानुजाय नमः




# श्रीभाष्यम्

## श्री भगवद्रामानुजविरचितं शारीरकमीमांसाभाष्यम्

अखिलभुवनजन्मस्थेमभङ्गादिलीले
विनतविविधभूतव्रातरक्षैकदीक्षे ।
श्रुतिशिरसिविदीप्ते ब्रह्मणि श्रीनिवासे
भवतु मम परस्मिन् शेमुषी भक्तिरूपा ॥

அகிலபுவநஜந்மஸ்தேமபங்காதிலீலே
விநத விவிதபூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே ।
ச்ருதிசிரஸிவிதீப்தே ப்ரஹ்மணி ஶ்ரீநிவாஸே
பவது மம பரஸ்மிந் ஶேமுஷீ பக்திரூபா ॥

श्रीः

श्रीमते वात्स्य वरदार्य महागुरवे नमः

श्रीमते निगमान्त महादेशिकाय नमः

श्रीमते श्री लक्ष्मीनृसिंह दिव्यपादुकासेवक श्रीवणशठकोप

श्री श्रीरङ्गशठकोप यतीन्द्र महादेशिकाय नमः

श्रीमते श्रीवणशठकोप श्री वीरराघवशठकोप यतीन्द्र महादेशिकाय नमः

# ஸுகபோதினி

*முதல் அத்யாயத்தில் முதல் பாதம்*
*ஜிஜ்ஞாஸாதிகாணம்*

वरदं द्विरदाद्रीशं श्रीनिधिं करूणानिधिम् ।
शरण्यं शरणंयामि प्रणतार्तिहरं हरिम् ॥
अविस्तृताः सुगम्भीरा रामानुजमुनेर्गिरः ।
दर्शयन्तु प्रसादेन स्वं भावमखिलं दृढम् ॥

அகிலபுவநஜந்மஸ்தேமபங்காதிலீலே
விநதவிவிதபூதவ்ராதரக்ஷைகதீக்ஷே ।
ஶ்ருதிஶிரஸிவிதீப்தே ப்ரஹ்மணி ஶ்ரீநிவாஸே
பவது மம பரஸ்மிந் ஶேமுஷீ பக்திரூபா ॥

**கருத்து** :— *ஸகல தேஶ கால வர்த்திகளான-அண்டஜாதங்களுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாராதிகளை லீலையாக உடையவனும், வணங்கின பக்தர்களையும், ப்ரபன்னர்களையும், அவர்களுடைய ஸம்பந்தம் பெற்றவர்களையும் ரக்ஷிப்பதில் த்ருடமான வ்ரதத்தை உடையவனும், ஶ்ருதி ஶிரஸ் எனப்படும் வேதாந்தத்தில் விஶேஷித்து ப்ரகாஶிப்பவனுமான ப்ரஹ்மம் எனப்படும் ஸ்ரீநிவாஸனிடத்தில் எனக்கு பக்திரூபமான ஜ்ஞானம் உண்டாக வேண்டும்.*

**விரிவுரை** :— *பெரும்பூதூர் வந்த வள்ளல் ஏரணிகீர்த்தி இராமாநுசர் ஸ்ரீஆளவந்தார் திருவுள்ளக் குறிப்பை முதலிகள் மூலம் அறிந்து அப்பொழுது ப்ரதிஜ்ஞை பண்ணியபடி வ்யாஸ மஹர்ஷியால் அருளிச் செய்யப்பட்ட ஶாரீரக ஸூத்ரங்களுக்கு பாஷ்யம் செய்தருளத் திருவுள்ளம் பற்றி இஷ்டதேவதா நமஸ்கார ரூபமான மங்களத்தை 'அகிலபுவந' என்னும் ஶ்லோகத்தால் அருளிச் செய்கிறார். ஒருவர் ஒரு க்ரந்தத்தை அருளிச் செய்யும்போது அந்த க்ரந்தமானது நிர்விக்னமாக வும், சீக்ரமாகவும் பூர்த்தி அடைவதன் பொருட்டு இஷ்டதேவதா நமஸ்காரரூபமான மங்களாசரணத்தை ஆரம்பத்தில் பண்ணவேண்டும். ஆகையால் முதலில் இஷ்ட தேவதா நமஸ்காரரூபமான மங்களாசரணத்தை அருளிச் செய்கிறார்.* ★**மங்களாசாரயுக்தாநாம் நித்யம் ச ப்ரயதாத்மநாம் ஜபதாம் ஜுஹ்வதாம் சைவ விநிபாதோ ந வித்யதே**★ *(மங்களாசாரத்தோடு கூடினவர்களும், எப்பொழுதும் பரிசுத்தமான மனப்ரவ்ருத்தியை உடையவர்களும், மந்த்ரங்களை ஜபித்துக் கொண்டும், ஶாந்திக பௌஷ்டிகாதி யாகங்களைச் செய்து கொண்டும் இருப்பவர்களுமான ஸாத்விகர்களுக்கு எவ்விதமான அநர்த்தமும் உண்டாகாது) என்று ஸ்ம்ருதி கூறுவதால் ஸ்ம்ருத்யாசார ஸித்தமான மங்களத்தைப் பண்ணவேண்டும்.*

**நநு**— *மங்களத்தை மாநஸிகமாக அநுஷ்டித்தால் போதாதா? க்ரந்தத்திலும் சேர்க்க வேண்டுமா?*

**பரிஹாரம்** :— *மங்களத்தை மாநஸிகமாக அநுஷ்டித்தால் பிற்காலத்தவர்கள் பூர்வாசார்யர்கள் மங்களாசரணம் பண்ணிவில்லை என்று எண்ணுவார்கள். ஆகையால் ஶிஷ்யர்களை ஶிக்ஷிப்பதற்காகவும், அவர்களின் க்ஷேமத்தின் பொருட்டும், ஸ்ம்ருத்யாசாரத்தைக் கொண்டும் மங்களத்தை க்ரந்தத்தில் சேர்த்துள்ளார்கள்.*

*மேலும் ஒரு க்ரந்தத்தை எழுதும் பொழுது விஸ்தாரமாக எழுதப்படும் அந்த க்ரந்தத்தில் என்ன சொல்லப்படுகிறது என்பதை முதலில் சுருக்கமாகச் சொல்லுவது உலகில் வழக்கத்தில் உள்ளது.* ★**இஷ்டம் ஹி விதுஷாம் லோகே ஸமாஸ வ்யாஸதாரணம்** ★ *(உலகில் சுருங்கச் சொல்லி விரித்துரைப்பது பண்டிதர்களுக்கு இஷ்டமாகும்-ஸம்மதமாகும்) ஆகையாலும் க்ரந்தத்தை எழுதுபவர்கள் அந்த*

க்ரந்தத்தில் கூறப்போகும் அர்த்தத்தை மங்கள ஶ்லோகத்தில் சுருக்கமாகச் சொல்லுவார்கள். இதற்கு வஸ்து நிர்தேசம் என்று பெயர். ஆகையாலும் மங்கள ஶ்லோகத்தை க்ரந்தங்களில் சேர்க்கிறுர்கள் என்று கொள்ள வேண்டும்.

மங்களம் ஆஶீர்வாதரூபமாயும் வஸ்து நிர்தேஶரூபமாயும், நமஸ்காரரூபமாயும் இருக்க வேண்டும். இம்மூன்றில் ஏதாவது ஒன்று மங்களத்தில் சொல்லப்பட்டு இருந்தாலும் அதுவும் மங்களமாகும். மூன்றையும் சேர்த்து மங்களம் பண்ணவேண் டும் என்பதில்லே. இங்கு ஸ்ரீபாஷ்யகாரர் மூன்றையும் சேர்த்து இந்த மங்கள ஶ்லோகத்தை அருளிச் செய்துள்ளார். அதாவது இந்த ஶ்லோகத்தில் மேலே க்ரந்தத்தில் கூறப்போகும் முக்ய விஷயத்தை சுருக்கமாக சொல்லி இருப்பதால் வஸ்து நிர்தேசம் பண்ணப்பட்டதாகிறது. **பவது**— உண்டாகட்டும் என்பதால் ஆசீர்வாதமும், 'விநத'– (வணங்குதல்) பக்திரூபா என்பதாலும் நமஸ்காரமும் பண்ணப்பட்டதாகிறது.

**நநு**-ஶபர பாஷ்யத்திலும், ஶங்கர பாஷ்யத்திலும் இஷ்ட தேவதாநமஸ்காரரூப மங்களாசாரத்தைப் பண்ணவில்லையே. நம் பாஷ்யகாரர் எதற்காக மங்களத்தைப் பண்ணி க்ரந்தத்தில் சேர்க்கவேண்டும்?

**பரிஹாரம்** :- த்ரமிட பாஷ்யத்தில் ★நம: ப்ரவர குணைகராஶயே ★ என்று தேவதா, குரு, நமஸ்காரத்தைப் பண்ணி இருப்பதால் அவருடைய மதத்தை அநுஸரித்து பாஷ்யகாரர் மங்களம் பண்ணி உள்ளார். ஶபரர் கர்மாவைத் தவிர்த்து ஒப்புக் கொள்ளாதவர். ஆகையால் தேவதா நமஸ்கார விஷயத்தில் அவர்களுக்கு ஆதரவு இல்லை. இவ்விடத்தில் நம் ஸித்தாந்தாநுரூபமாக மங்களம் பண்ணியது அத்யந்தம் உபபந்நமேயாகும். ஶங்கர பாஷ்யத்திற்கு வ்யாக்யானம் இந்த க்ரந்தமானது குக்ரந்தம் என்று ஆஶங்கை பண்ணி ''யுஷ்மத் - அஸ்மத்'' என்று க்ரந்தாரம்பத்தில் சொல்லி இருப்பதால் ''ப்ரத்யகர்த்தாநுஸந்தானத்தால் **மங்களாசரணம் பண்ணியதாகும்**'' என்று ஶங்கரபாஷ்யத்தில் வ்யாக்யானம் செய்திருப்பதையும் காணலாம்.

**ஆக்ஷேபம்**:- கீழே கூறிய ஸ்ம்ருதி வசனமானது க்ரந்தாரம்பத்தில் 'மங்கள ஶ்லோகத்தைப் பண்ண வேண்டும் என்று சொல்லவில்லை. கண்ணாடியைத் தூங்கிஎழுந்ததும் பார்ப்பதால் அநிஷ்டங்கள் நிவ்ருத்தமாகும் என்கிறார்கள். ஜப, ஹோமாதிகளிலும் அவ்விதமே அநிஷ்டங்களைப் போக்கடிப்பதைக் காண்கிறோம். அதே போன்று மங்களாசரணமானது விநிபாத நிவ்ருத்திக்கு ஹேதுவாகிறது என்று சொல்வதற்கில்லை. ஆகையால் மங்களாநுஷ்டான விஷயத்தில் இந்த ஸ்ம்ருதிவசநம் ப்ரமாணமாகாது. ஆசாரம்தான் ப்ரமாணம் என்று சொல்ல வேண்டும்.

**பரிஹாரம்**:- விநிபாதம் என்பது ஸ்வ அபீஷ்டஸித்தி விகாதம்தான்-தன் இஷ்ட ஸித்தி நிறைவேறாமல் நாசத்தைப் பண்ணுவதுதான். அதாவது விநிபாத ஶப்தமானது ஸமாப்தி ப்ரதிபந்தத்தைச் சொல்லும். ஆகையால் மங்களாசரண

மானது விக்நத்தைப் போக்குகிறது என்று தெரிவதால் இந்த ஸ்ம்ருதிவசநம் ப்ரமாணமேயாகும்.

நநு-நிர்விக்நமாக க்ரந்தம் பூர்த்தியடையவேண்டும் என்கிற பலனை விரும்பி இஷ்டதேவதா நமஸ்காரம் பண்ணுவதானால் அதைக் காம்ய பலனாகவே சொல்லவேண்டும். காம்யபலனை விரும்பாத நிவ்ருத்தி தர்மநிஷ்டர்கள், நிர்விக்நபரி ஸமாப்திக்குக் காரணமான இஷ்டதேவதா நமஸ்காரரூபமான மங்களத்தை அநுஷ்டிக்கவேண்டியதில்லையே?

பரிஹாரம்:- க்ரந்தகர்த்தாக்கள் எல்லோருமே அவரவர்கள் செய்யும் க்ரந்தம் நிர்விக்நமாக பூர்த்தி அடைவது அவர்களுக்கு இஷ்டமாகையாலே அதைப் ப்ரார்த்திப்பது காம்யமாகாது. ஆகையால் நிர்விக்ந பரிஸமாப்தி ஸித்யர்த்தம் இஷ்டதேவதா நமஸ்காரத்தை அவச்யம் பண்ண வேண்டும். நிவ்ருத்தி தர்மநிஷ்டர்க ளான ஸம்ஸாரி சேதநர்களுக்கு இந்த ஜந்மத்தில் பாப ப்ரஸக்தியில்லாவிடினும், பூர்வ ஜந்மங்களில் செய்த பாபங்கள் இவ்விஷயத்தில் ப்ரதிபந்தகமாகலாம். ஆகையால் ப்ரதிபந்தக நிவ்ருத்திக்காக மங்களாசரணம் யுக்தமாகும். ஆகையாலேயே மங்கள ச்லோகத்திற்கு வ்யாக்யானம் பண்ணுகிறவர்கள் எல்லோரும் ப்ராரிப்ஸி தஸ்ய க்ரந்தஸ்ய நிர்விக்நேந பரிஸமாப்த்யர்த்தம்-செய்ய ஆரம்பித்த க்ரந்தமானது நிர்விக்நமாக முடிய வேண்டும் என்பதற்காக முதலில் மங்களத்தைப் பண்ணுகிறார் என்று வ்யாக்யானம் எழுதுவதை லோகத்தில் காண்கிறோம்.

அகில புவந ஜந்ம ஸ்தேம பங்காதி லீலே. 'அகிலாநாம் புவநாநாம் ஜந்ம ஸ்தேம பங்காதய: லீலா யஸ்ய ஸ:-அகில புவந ஜந்ம ஸ்தேம பங்காதி லீல: தஸ்மிந் லீலே. புவந சப்தமானது ரூடியினுல். விபுலதமமான மிகவும் பெரியதான, கார்யவர்க்கத்தைச் சொல்கிறது. பவதீதி-புவநம் என்று யோக வ்யுத்பத்தியால் கார்யத்தைச் சொல்லுகிறது என்றால் மண்குடமும், குயவனால் பண்ணப்படுவதால் அதுவும் கார்யவர்க்கத்தில் சேரும். அதை உண்டுபண்ணுபவ னான குயவனையும் சொல்லுகிறது என்று தோஷம் வரும். அதை வ்யாவர்த்திப்பதற் காக-போக்குவதற்காக ரூடியினால் பெரியதான கார்ய விசேஷத்தைச் சொல்லுகிறது என்று அர்த்தம் சொல்லப்பட்டது.

(பதங்கள்-ரூடம், யௌகிகம், யோகரூடம், யௌகிகரூடம் என நான்கு வகைப்பட்டவை. ரூடம்-ஸமுதாய சக்தியினால் அல்லது ஸங்கேதத்தினால் அர்த்தத்தை உணர்த்தும் சப்தத்தை ரூடம் என்பார்கள். அதாவது கடபதம் சக்தியினால் கம்புக்ரீவாதிமத்தானபதார்த்தத்தையும் சொல்லும். கோ பதம் சக்தியினால் ஸாஸ்நாதிமத்தான வ்யக்தியையும் ஸங்கேதத்தால்-ரூடியினுல் சொல் லும்.

2. அவயவ அர்த்தங்களின் சேர்க்கையால் பொருளை விளக்கும் சப்தம் யௌகிகம் எனப்படும். ப்ருஹதீதி ப்ரஹ்ம'-ஸ்வரூபத்தாலும் குணத்தாலும்

T RESEARCH
571 431

*ப்ரஹ்மமானது பெரியதாக இருக்கிறது என்பதால் அவயவ-யோக வ்யுத்பத்தியால் பரமாத்மாவைச் சொல்வது பொருத்தமுடையதாகிறது.*

*3. அவயவ ஶக்தியினாலும் ரூடியினாலும் ஒரே அர்த்தத்தை போதிப்பது யோகரூடம் எனப்படும். பங்காத் ஜாயத இதி என்கிற அவயவ ஶக்தியினாலும் ரூடி ஶக்தியினாலும் தாமரைபுஷ்பத்தைச் சொல்வதால் யோகரூடம் எனப்படும்.*

*4. யௌகிகரூடம்-யௌகிகத்தினாலும்-ரூடியினாலும் தனித்தனியான அர்த்தத்தை உணர்த்தும் பதம் யௌகிகரூடம். ஆகாஶ ஶப்தமானது ஆஸமந்தாத் காஶத இதி ஆகாஶ: என்ற அவயவ வ்யுத்பத்தியினால் பரமாத்மாவையும் ரூடி ஶக்தியினால் ப்ரஸித்த ஆகாஶத்தையும் சொல்வதால் யௌகிகரூடம். மேலே ரூடியினால்-யோகவ்யுத்பத்தியினால் இத்யாதி ப்ரயோகங்கள் அடிக்கடி வருவதால் அவற்றைப் பற்றி இங்கு விவரித்துக் கூறப்பட்டது).*

*உலகில் பங்கஜம் என்று ரூடி ஶக்தியினால்-ஸங்கேதத்தால்-தாமரைப் புஷ்பத்தைச் சொல்வதுபோல் இங்கும் புவந ஶப்தத்திற்கு ரூடி ஶக்தியினால் விபுலதமமான கார்ய விஶேஷத்தைத் குறிப்பதாகச் சொல்லப்பட்டது.*

*யத்யபி அகிலபுவந என்றதாலும் லீலா ஶப்த ப்ரயோகத்தாலும் ஸ்ருஷ்ட்யாதி களை லீலையாக உடையவன் என்று சொன்னதாலும் புவந ஶப்தத்திற்கு யோக வ்யுத்பத்தியினால் அர்த்தம் சொன்னாலும் குலால வ்யாவ்ருத்தி ஏற்படும். அதாவது முன் சொன்ன தோஷம் வராது. ததாபி-ஆகிலும் இதர பத நிரபேக்ஷமாக புவந ஶப்தமே குலாலாதி வ்யாவ்ருத்தியைப் பண்ணுவதற்காக ரூடி ஶக்தியினால் அர்த்தம் சொல்லப்படுகிறது.*

**அகில:-** *அகில ஶப்தத்தால் ஸகல தேச, கால வர்த்தி அண்டஜாதங்கள் விவக்ஷிதங்கள். அதாவது, எல்லா தேசங்களிலேயும் எல்லாக் காலத்திலேயும் இருக்கிற அண்டங்களில் உண்டான சேதநாசேதநங்கள் விவக்ஷிதங்கள். இதனால் ஏதோ ஒரு தேசத்தில் ஏதோ ஒரு காலத்தில் இருக்கிற சதுர்முக ப்ரஹ்மாதிகள் சொல்லப்படவில்லை என்று வ்யாவ்ருத்தி பண்ணியதாகிறது. அல்லது கிலம் நாஸ்தீதி அகிலம்-கிலம்-கிஞ்சித்-ஸ்வல்பம் அவ்விதமில்லாதது அகிலம் அதாவது பரமாத்ம ஸ்ருஷ்டிக்கு விஷயமாகாத கார்யவர்க்கங்கள் ஒன்றும் கிடையாது என்று தாத்பர்யம். இவ்விதம் வ்யதிரேகத்தால்-(சொல்லக் கருதிய விஷயத்தின் இல்லா மையை மறுத்துக் கூறுதல் வ்யதிரேகம் எனப்படுகிறது.) அனேகமாக எல்லாவற்றை யும் பகவான்தான் ஸ்ருஷ்டித்தான் என்று சொல்வதைத் தவிர்க்கிறது. அதாவது பகவானால் ஸ்ருஷ்டிக்கப்படாதது ஒன்றுகூடக் கிடையாது என்று அர்த்தம். இவ்விதம் வ்யதிரேகமுகத்தாலே அர்த்தம் சொல்ல வேண்டும் என்பதற்காகவே ஸகல புவந என்று சொல்லவில்லை.*

*நிகிலபுவந என்று சொன்னால் இவ்வர்த்தம் வருமே. நிகில என்று ஏன் சொல்லவில்லை என்று கேட்கலாம். பகவத் வாசகமான 'அ' என்னும் எழுத்து*

ஶ்லோகத்தின் ஆரம்பத்தில் இருக்கவேண்டும் என்பதற்காக 'அகில' என்று அருளிச் செய்தார். ★'அ' இதி பகவதோ நாராயணஸ்ய ப்ரதமாபிதானம்.★ ('அ' என்னும் எழுத்தானது பகவானான நாராயணனுக்கு முதன்மையான வாசகம் பகவத் வாசகம்) ★அகாரம் ப்ரயுஞ்சாநேந கிந்நாம மங்களம் ந க்ருதம்?★ (பகவத் வாசகமான அகாரத்தைப் ப்ரயோகிக்கின்ற க்ரந்தகர்த்தாவால் எந்த மங்களம்தான் அனுஷ்டிக்கப்ப டவில்லை? எல்லா மங்களத்தையும் அனுஷ்டித்தவராகிறார்.) என்று பூஜ்யர்களான பெரியோர்கள் அருளிச் செய்திருக்கிறார்கள்.

ஸ்வாமிந்! ஸ்ரீ பாஷ்யகாரர் அகாரத்தை முதலில் ப்ரயோகிக்க வேண்டும் என்கிற திருவுள்ளத்தினால்தான் ப்ரயோகித்தாரா? ஆம், அந்த அபிப்பிராயம் அவர் திருவுள்ளத்தில் இருந்திருக்கலாம். அவ்விதம் இல்லாவிட்டாலும், பகவா னைப் பொருளாக உணர்த்தும் ஶக்தி ஸம்பந்தம், அ என்னும் அக்ஷரத்திற்கு இருப்பதால் அகாரம் மங்களகரமானது. அ இ உண் என்ற ப்ரத்யாஹார ஸூத்ரத்தில் 'அ' என்பதுபோல் அமைந்துள்ளது.

ஸ்ரீ பாஷ்யகாரர் திருவுள்ளத்தில் இவ்வபிப்பிராயம் இருப்பதாக ச்ருதப் ப்ரகாசிகாசாரியார் ★ப்ரபத்யே ப்ரணவாகாரம் பாஷ்யம்★ என்பதால் ஸூசிப்பிக்கி றார். ப்ரணவத்தில் அ, உ, ம என்று மூன்று எழுத்துக்கள் உள்ளன. அதேபோல் 'அகில புவந' என்று ஆரம்பத்தில் அகாரமும், உக்தம் என்று மூன்றாம் அத்யாயம் மூன்றாம்பாத ஆரம்பத்தில் உகாரமும், 'ஸர்வம் ஸமஞ்ஜஸம்' என்று முடிவில் மகாரமும் சொல்லியிருப்பதால், ஸ்ரீபாஷ்யம் ப்ரணவத்தைப் போல் ஶேஷியான ஸ்ரீமந் நாராயணனை ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கிறது என்று அருளிச் செய்திருப்பதால் ஸ்ரீ பாஷ்யகாரர் விஷ்ணு வாசகமான 'அ'காரத்தை முதலில் ப்ரயோகிக்க வேண்டுமென்றே திருவுள்ளம் பற்றியுள்ளார் என்று சொல்வதில் யாதொரு ஸந்தேகமும் கொள்ளத் தேவையில்லை. ★அகாரார்த்தோ விஷ்ணு: ஜகதுதயரக்ஷாப்ளயக்ருத்★ என்று பட்டர் அருளிச் செய்திருப்பதைக் காணலாம்.

கிலம் நாஸ்தி இதி அகிலம் என்பதால் நிஷேத வாசகமான 'ந' என்பதை ஆரம்பத்தில் ப்ரயோகித்திருப்பது கூடுமோ? எனில், நிஷேத்யத்தைப் பொருத்து மங்களம்-அமங்களம் ஆகும். அதாவது, ஸந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு நிஷேதிக்கத் தக்க வஸ்துவைச் சாரந்ததாகயிருக்கும் என்று அர்த்தம். இங்கு சிலவற்றை பகவான் ஸ்ருஷ்டிக்கவில்லை என்கிற ஸந்தேஹம் வருமாகையால் இக்குறையை மறுத்து, சீர்மையைக் காட்டுவதில் தாத்பர்யமாகையால் இது சுபமாகவே ஆகும். 'நிஷ்ப்ரத்யூஹம் உபாஸ்மஹே' என்பதுபோல் இதுவும் மங்களமாகும்.

ஜன்ம- நித்ய, நைமித்திக, ப்ராக்ருதம் என ஸ்ருஷ்டிகள் மூன்று வகைப்பட்டவை.

ப்ரஸூதி: ப்ரக்ருதேர் யாது ஸா ஸ்ருஷ்டி: ப்ராக்ருதா ஸ்ம்ருதா।
நைமித்திகீ ததாப்ரோக்தாவாந்தர ப்ரளயாதநு ॥

பூதாந் யநுதினம் யத்து ஜாயந்தே முநிஸத்தம .
நித்ய ஸர்கோ ஹி ஸ ப்ரோக்தঃ புராணார்த்த விசக்ஷணைঃ । ஏவம் பங்கோபி ॥

(ப்ரக்ருத்யாதி க்ரமேண ஸ்ருஷ்டிப்பது ப்ராக்ருத ஸ்ருஷ்டி என்றும், சதுர்முக ப்ரஹ்மா உறங்கி எழுந்திருக்கும் பொழுது பண்ணப்படும் ஸ்ருஷ்டி நைமித்திக ஸ்ருஷ்டி என்றும் தினந்தோறும் உண்டாகும் பிறப்பு நித்ய ஸ்ருஷ்டி என்றும் புராணமறிந்த பெரியோர்கள் கூறுகிறார்கள். இவ்விதமே பங்க விஷயத்திலும் கொள்ள வேண்டும்).

ஸ்தேம-ஸ்திதிঃ-இருப்பு-ரக்ஷணம். இந்த ரக்ஷணம் பலவகைப்படும். அதாவது அந்தர்யாமியாக இருந்தும், விஷ்ணுவாக அவதரித்தும். லோகபாலர்களாகயிருந்தும், மன்வாதிகளாகவும், அரசர்களாகவும், மாதா பிதா முதலியவர்களாகவும் இருந்து அவர்கள் மூலமாகச் செய்யப்படுவதாகும்.

பங்கঃ-நாசம்-ஸம்ஹாரம் இதுவும். நித்ய, நைமித்திக, ப்ராக்ருத லயம் என்று மூன்று வகைப்பட்டவை. தினந்தோறும் ஸ்வாபகாலத்தில்-தூங்கும் பொழுது பரமாத்மாவினிடத்தில் சேர்ந்திருப்பது நித்யப்ரளயம் எனப்படும். சதுர்முகப் ப்ரஹ்மா உறங்கும்போது அதை நிமித்தமாகக் கொண்டு ஏற்படும் ப்ரளயம் நைமித்திகப் ப்ரளயம் எனப்படும். ப்ரபஞ்சம் முழுவதும் ப்ரக்ருதியில் லயித்து, அந்த ப்ரக்ருதியானது பரமாத்மாவினிடத்தில் ஏகீபாவத்தை அடைவது ஒன்றாகச் சேர்ந்து விடுவது-ப்ராக்ருத ப்ரளயமாகும்.

பங்க—ஶப்தத்தினால் மோக்ஷமும் சொல்லப்படுவதாக இருந்தபோதிலும், இந்த ஶாஸ்த்ரத்திற்கு மோக்ஷம் முக்ய ப்ரயோஜனமாகச் சொல்லப்படுவதால், அதை லய ஶப்தத்தில் உள்ளடக்கிச் சொல்வதாகக் கூறுவதற்கில்லை. ஆகையாலேயே 'பங்காதி' என்ற இடத்திலுள்ள 'ஆதி' பதத்தினால் சொல்லுவதாகக் கொள்வதும் உசிதமாகாது. 'ஆதி' ஶப்தமானது பொதுவாக எல்லாவற்றையும் குறிப்பிடுமாத லால், முக்கியமான மோக்ஷம் எனும் அர்த்தத்தை ஸ்பஷ்டமாகப் போதிப்பதற்குக் காரணமாகாது. பூர்வாசார்யர்கள் மோக்ஷத்தைத் தனியாகவே குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிறார்கள். ★ஜகதுத்பவஸ்திதி-ப்ரணாஶ ஸம்ஸாரவிமோசநாதயঃ★ (ப்ரணாஶ ஶப்தத்தால் லயத்தையும், ஸம்ஸாரவிமோசநம் என்பதால் மோக்ஷத்தை யும் சொல்லியிருக்கிறார்). ★ஜகத்ஜந்ம ஸ்திதி த்வம்ஸ மஹாநந்தைக ஹேதவே★ (த்வம்ஸ ஶப்தத்தால் நாசத்தையும் 'மஹாநந்த' ஶப்தத்தால் மோக்ஷத்தையும் குறிப்பிட்டுள்ளார்). ஸ்ரீ பாஷ்யகாரரும் வேதார்த்த ஸங்க்ரஹத்தில், ★உத்பவ ஸ்திதி ப்ரளய ஸம்ஸார நிவர்த்தநைக ஹேதுபூதঃ ★ (ப்ரளயத்தைச் சொல்லி ஸம்ஸாரநிவர்த்தனம் என்று மோக்ஷத்தைத் தனியாக அருளிச் செய்திருப்பதைக் காணலாம்). ஸ்ரீ பாஷ்யத்திலேயே, ★நிகிலஜகதுதய விபவ லய மஹாநந்தைககார ணம் ★ (லய என்பதால் லயத்தையும், மஹாநந்த ஶப்தத்தால் மோக்ஷத்தையும் தனியாக அருளிச் செய்துள்ளார்) ஆகையால் மோக்ஷத்தை பங்க ஶப்தத்தில் உட்படுத்தியோ ஆதி ஶப்தத்தால் கூறுவதாகவோ சொல்வது கூடாது.

**ஆக்ஷேபம்:-** ★ இவ்விடத்தில் மோக்ஷமானது சொல்லப்பட்டிருப்பதாகக் கொண்டன்றோ-ஸித்தவத்க்ருத்ய-அதை 'பங்க', 'ஆதி' ஶப்தங்களால் சொல்லக் கூடாது என்று சொல்லப்பட்டது. இவ்விதம் கூறுவது யுக்தமாகாது. இந்த ஶ்லோகத்தில் தனியாக மோக்ஷத்தைச் சொல்லவில்லையே?

**பரிஹாரம்:-** இந்த ஶ்லோகத்தில் **★விநத விவித பூத வ்ராத ரக்ஷைக தீக்ஷே★** என்று ரக்ஷா ஶப்தத்தால் மோக்ஷத்தை அருளிச் செய்துள்ளார்.

*பங்காதி என்னுமிடத்திலுள்ள 'ஆதி' ஶப்தத்தினால் ஸ்ருஷ்டி முதலானவைகளுக்கு உபயோகமான அந்தப்ரவேஶ நியமனாதிகள் சொல்லப்படுகின்றன. இதை ஸ்ரீபாஷ்யகாரர் தாமே, 'ஜகதுத்பத்தி ஸ்திதி ஸம்ஹார அந்தப்ரவேஶ நியமநாதிலீலம்' என்று ஸ்ரீ பாஷ்யத்தில் விவரித்து அருளிச் செய்துள்ளார்.*

*லீலா ஶப்தத்தினால்-பரிபூர்ணன் என்பதும், வேறொருவனால் ஏவப்படாதவன் என்பதும், தன் இஷ்டப்படி கார்யங்களைச் செய்கிறவன் என்பதும் தெரிவித்ததாகிறது. மஹாபாரதத்தில்,* **★அப்ரமேயஃ அநியோஜ்யச்ச யத்ர காமகமோ வஶீ । மோததே பகவான் பூதைஃ பால: க்ரீடநகைஃ இவ ★** *(அப்ரமேயஃ-கண்ணால் பார்க்க முடியாதவனும், பிறரால் நியமிக்கத் தகாதவனும், தடங்கலற்ற ப்ரவ்ருத்தியை உடையவனும், உலகனைத்தையும் தன் வஶத்தில் வைத்திருப்பவனுமான பகவான், பாலர்கள் மரப்பாச்சி முதலிய பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடுவது போல, உலகிலுள்ள பிராணிகளைக்கொண்டு விளையாடுகிறான் என்று கூறியிருப்பதைக் காண்க. இந்த ஶ்லோகத்தில், அப்ரமேயம்-அளவிட முடியாதது என்று சொன்னதனால் பகவான் பரிபூர்ணன் என்று தெரிகிறது. அநியோஜ்யன்-இதர சேதனர்களால் நியமிக்கப்படாதவன் என்று சொன்னதாகிறது. யத்ர காம கமஃ என்பதால் பகவான் தன்னிஷ்டப்படி போக்குடையவன் என்பதும் தெரிகிறது. அதாவது, பெருவெள்ளம், பெருங்காற்று இவைகளால் அடித்துச் செல்வதுபோல் இல்லாமல் ஸ்வச்சந்தமாகச் செல்கிறவன் என்று அர்த்தம். வஶீ-விஶ்வம் வஶே யஸ்ய ஸ வஶீ-என்பதால் ப்ரபஞ்சம் எவனுக்கு வஶமாகயிருக்கிறதோ-எவனுக்கு ஸ்வாதீனமாகயிருக்கிறதோ-அவன் வஶீ எனப்படுகிறான். ஆகையால், ஸ்வாதீன லீலோபகரணங்களை உடையவன் என்று வஶீ என்னும் ஶப்தம் தெரிவிக்கிறது. அல்லது இந்திரியங்களுடைய அதீனமாகக் கார்யங்களைச் செய்யாதவன் என்பதாவது வஶீ பதத்தின் அர்த்தமாகக் கொள்ளலாம். பாலக த்ருஷ்டாந்தத்தால், சிலர் பணம் கட்டி-பந்தயம் வைத்து-விளையாடும் த்யூதம்-பணபந்த த்யூதம் போலன்றிக்கே கேவலம் விளையாடுவதே ப்ரயோஜனமாக உடையது என்பதைக் காட்டுகிறது. க்ரீடநகை: என்று கார்ய வர்க்கங்களான சேதநாசேதநங்களைக் குறிப்பிட்டிருப்பதால் பகவானுடைய மஹிமை அளவிட்டுச் சொல்லமுடியாதது என்று ஏற்படுகிறது.*

**ஆக்ஷேபம்:-** *ப்ரயோஜகனுடைய-நியமிக்கிறவனுடைய வ்யாபாரத்தைத்தானே லீலை என்று சொல்ல வேண்டும்? இங்கு பகவானால் செய்யப்படும்*

'பங்கத்தை'-ஸம்ஹாரத்தை-லீலை என்று சொல்லலாம். ஆனால், இருப்பும் ஜன்மமும், ஸ்திதியும்-உற்பத்தியும் ப்ரயோஜ்யமான-ஏவப்படுகிற ப்ரபஞ்சத்தினுடைய வ்யாபாரமாகையால், அவைகளையும், பகவானுடைய லீலையில் சேர்ப்பது எவ்விதம் பொருத்தமுடையதாகும்?

பரிஹாரம்:- **லீலா நாம ஸ்வயம் ப்ரயோஜநதயா அபிமத: அநாயாஸ வ்யாபார:** ★ (லீலை என்பது ஸ்வயம் ப்ரயோஜனமாக அபிமதமான அநாயாஸ வ்யாபாரம்.) ஆகையால் தன்னுடைய வ்யாபாரமே தனக்கு லீலையாக ஆகிறது. பஹு'ஸ்யாம் ப்ரஜாயேய—பஹு'வாக ஆகிறேன்-என்று பகவான் ஸங்கல்பித்துக் கொண்டு சேதநாசேதநங்களாக ஆனான் என்று ஶ்ருதி கூறுவதால் ப்ரயோஜக வ்யாபாரம் போல ப்ரயோஜ்யங்களுடைய வ்யாபாரத்தையும் லீலை என்று சொல்வதில் தவறொன்றில்லை. இதனால் பகவானுக்கு உபாதானகாரணத்வம் ஸித்திக்கிறது. லீலை என்று சொன்னதினால் நிமித்தகாரணத்வமும் ஸித்திக்கிறது.

இவ்விதமாக, முதல் த்விகத்தில், ஜகத்காரணத்வம்- பகவானுக்குச் சொன்னதனால் அவனுக்கு பரத்வம் ஸித்திக்கிறது. காரண பூதனான அந்த பகவானை, அடையத் தக்கவனாயும் மோக்ஷ ப்ரதனாயும் இருக்கிறான் என்பதை உத்தரத்விகத்தில் சொல்கிறார். அதை 'விநத' என்று ஆரம்பித்துச் சொல்கிறார். இதனால் பகவானுக்கு அவனை ஆச்ரயிப்பதற்குத் தக்க ஸௌலப்ய குணம் சொன்னதாகிறது. கேவல பரத்வமும், கேவல ஸௌலப்யமும் பயனற்றதாகும். மேரு பர்வதத்திலிருந்து வேண்டிய அளவு தங்கத்தைக் கொண்டு வரலாம் என்றால் அந்த மலை ஒருவராலும் கிட்ட முடியாததாகையால் அங்கிருந்து தங்கத்தைக் கொண்டுவர ஒருவரும் ஆசைப்படுவதில்லை. ஓட்டாஞ்சல்லியும், மண்ணாங்கட்டியும் எல்லா இடங்களிலும் ஸு'லபமாகக் கிடைக்கக் கூடியதாக இருப்பதால் அவைகளை விரும்புபவர் ஒருவருமில்லை. ஆகையால் பரத்வம், ஸௌலப்யம் இரண்டுமிருந்தால்தான் எல்லோரும் ஆசைப்படக் கூடியதாக இருக்கும். அப்படிப்பட்ட குணம் இரண்டும் பரமாத்மாவினிடத்தில் இருப்பதாகச் சொல்கிறார்.

'விநத'—விசேஷேண நதா: விநதா:. ந்யாஸ உபாஸநாத்மக அசேஷ வித்யா நிஷ்டா:. ந்யாஸோபாஸன ரூபமான எல்லா வித்யா விசேஷ நிஷ்டர்கள்-அவைகளில் நிலைபெற்றவர்கள் சொல்லப்படுகிறார்கள்.

**விவித-வைவித்யம்.** பலவாறாகயிருத்தலாவது-'தது பர்யபி' (1-3-25) 'ஊர்த்வரேதஸ்ஸு'ச' (3-4-17) இது முதலானவைகளால் மேலே சொல்லப்போகிற தேவதா, மனுஷ்ய, வர்ண, ஆச்ரம, ஜன்ம, வ்ருத்த குணம் ஆகியவைகள். விவக்ஷிதங்கள், பகவச்சேஷத்வஜ்ஞானத்தாலே ஸத்தையைப் பெற்றவர்கள் 'பூத' ஶப்தத்தினாலே சொல்லப்படுகிறார்கள். ★**அஸ்தி ப்ரஹ்மேதிசேத் வேத ஸந்தமேநம் ததோ விது:**★ என்று ஶ்ருதி கூறுகிறது. ★**தேஷாமேவ அநுகம்பார்த்தம் அஹம் அஞ்ஜாநஜம் தம: நாஶயாமி ஆத்மபாவஸ்த:**★ (என்னை ஆச்ரயிப்பவர்களின் அஜ்ஞானமாகிற இருட்டைப் போக்கடிக்கிறேன்) என்றும், ★**ததாமி புத்தியோகம் தம்**★ (என்னை

அடைவதற்கு வேண்டியதான புத்தியோகத்தை அவர்களுக்கத் தருகிறேன்) என்றும், **★அஹம் ஸ்மராமி மத் பக்தம்★** (என்னை ஆச்ரயித்தவர்கள், அந்திம காலத்தில் என்னை நினைக்கும்படி நானே செய்கிறேன்) இது முதலானவைகளால் சேஷத்வ ஜ்ஞானம் பெற்றவர்களுடைய பகவத் ஸாக்ஷாத்காரத்திற்கு விரோதிகளான, அஜ்ஞானாதிகளை பகவானே, தன்னுடைய பரமாகக் கொண்டு போக்கடிக்கிறான் என்று ஏற்படுகிறது. இதனால் பகவத் சேஷத்வ ஜ்ஞானத்தையுடையவர்களுக்கு ஸ்வரூப ப்ரச்யுதியானது ஒருபோதும் ஏற்படாது என்று தெரிகிறது.

பூதவ்ராத:-பூதாநாம் வ்ராத: பூதவ்ராத: பகவானை ஆச்ரயித்தவர்களுடைய ஸம்பந்தமுடையவர்களையும் பகவான் ரக்ஷிக்கிறான் என்று இதனால் சொன்னதாகிறது. பகவானை ஆச்ரயித்தவர்களுடைய ஸம்பந்தம் உடையவர்களன்றோ அவர்கள்.

**நநு**-பகவானை ஆச்ரயித்தவர்களை ரக்ஷிக்கிறான் என்று சொல்லுவதே உசிதமாகும். பகவானை ஆச்ரயித்தவர்களின் ஸம்பந்தத்தைப் பெற்ற மாத்ரத்தாலேயே அவர்களும் ரக்ஷ்யர்களாகிறார்கள் என்று சொல்வது கூடுமோ? எனில், **★ஆஸ்போடயந்தி பிதர: ப்ரந்ருத்யந்தி பிதாமஹா:-வைஷ்ணவோ ந:குலே ஜாத: ஸ ந: ஸந்தாரயிஷ்யதி★** (ஒரு வைஷ்ணவக் குழந்தை பிறக்கும்போது அக்குழந்தையின் தகப்பனார் ஸந்தோஷமடைகிறார், குழந்தையின் தாத்தா கூத்தாடுகிறார் எங்கள் குலத்தில் வைஷ்ணவன் பிறந்திருக்கிறான்; இவனுடைய ஸம்பந்தத்தால் எங்களுக்கு நல்ல கதி உண்டாகப் போகிறது; எங்களைக் கரையேற்றப் போகிறான்) என்று வைஷ்ணவக் குழந்தை ஸம்பந்தப்பட்டவர்களுக்கும் பித்ரு பிதாமஹாதிகளுக்கும் நல்ல கதி உண்டாகப்போகிறதாக ப்ரமாணம் கூறுகிறது. **★பசுர் மனுஷ்ய: பக்ஷீ வா யே ச வைஷ்ணவ ஸம்ச்ரயா: தேநைவ தே ப்ரயாஸ்யந்தி தத்விஷ்ணோ: பரமம் பதம்★** (நான்கு கால் ஜந்துக்களான பசுக்களோ, மனுஷ்யர்களோ, பக்ஷிகளோ வைஷ்ணவர்களை ஆச்ரயித்து, அவர்கள், நம்மைச் சேர்ந்தவைகள் இவைகள் என்று எண்ணினார்களேயானால், அப்படிப்பட்ட ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய அபிமானத்தைப் பெற்றவர்களும் மோக்ஷத்தை அடைகிறார்கள்) என்று மற்றொரு ப்ரமாணம் கூறுவதையும் காணலாம்.

**நநு** வ்ராத ஶப்தத்திற்குக் கூட்டம்-ஸமுதாயம் என்று அர்த்தம். பூதாநாம் வ்ராத: பூதவ்ராத:-வணங்கினவர்களுடைய கூட்டம் என்று அர்த்தம் சொல்வதுதானே உசிதமாகும். அதாவது ஷஷ்ட்யந்த பதத்தினால் குறிப்பிடப்பட்டவர்களைக் காட்டிலும் வேறுபடாதவர்களையே-அநதிரிக்தர்களையே வ்ராத ஶப்தமானது சொல்லும். இதற்கு ஒரு உதாஹரணம் கூறுகிறோம். பிராஹ்மண ஸமாஜம் என்கிறவிடத்தில் ப்ராஹ்மணர்களின் கூட்டம் என்றுதானே சொல்கிறோம். ப்ராம்ஹணேதரர்களையும் சேர்த்து ப்ராஹ்மண ஸமாஜம் என்று சொல்கிறதில்லையே? அதேபோல் இங்கும் பகவானை ஆச்ரயித்தவர்களின் கூட்டம் என்றுதான் சொல்ல வேண்டுமே தவிர பகவானை ஆச்ரயித்தவர்களின் ஸம்பந்தப்பட்டவர்களுடையதுமான ஸமுதாயம் என்று அர்த்தம் சொல்லக்கூடாது.

**பரிஹாரம்:-** *ஸ்வாமிந்! நானும் ஒரு உதாஹரணம் கூறுகிறேன். கேளும். ராஜபரிஷத்-ராஜாவினுடைய ஸபை என்றவிடத்தில்-ராஜஸபையில் ராஜாக்களைத் தவிர மற்றவர்களும் இருப்பதைக் காண்கிறோமல்லவா? ஆகையால் இரண்டு விதமாகவும் லோகத்தில் ப்ரயோகம் இருப்பதைக் காண்கிறோம். ஸமாஜத்தில் உள்ளடங்கியிருக்கிற ஷஷ்டி விபக்திக்கு ஸம்பந்த மாத்ரத்தைச் சொல்ல வேண்டும். ஸமாஸாந்தர்கதாயா: ஷஷ்ட்யா: ஸம்பந்த மாத்ர விஷயத்வாத் ஷஷ்ட்யந்தத்தால் நிர்திஷ்டமானதைக் காட்டிலும் வேறுபடாததாகயிருக்க வேண்டுமென்கிற விஷயத்தில் ஶாஸனம்-நியமம்-ஒன்றுமில்லாமையாலும். ஆகையால், ஸமுதாய ஶப்தமானது படிக்கப்பட்டிருந்தால், எதனுடைய ஸமுதாயம் என்று கேள்வி எழுகிறது. அப்பொழுது ஸந்நிஹிதமாயிருக்கிற ஸமுதாயத்தைக் நாம் கூறுகிறோம். அதற்குத்தான் சீக்கிரப்ரதிபத்தி உண்டாகிறது. அதுதான் புத்தியில் உடனே தோன்றுகிறது. ப்ராஹ்மண ஸமாஜம் என்னுமிடத்தில் ப்ராஹ்மணேதரர்களைச் சேர்த்துக் கொள்ளாமல் ப்ராஹ்மணர்களுடைய ஸமுதாயம் என்கிறோம். அங்கு ப்ராஹ்மணேதரர்கள் இல்லாததால். ராஜபரிஷத்-அரச சபை என்கிற இடத்தில் அரசர்களைத் தவிர்த்து மற்றவர்களும் இருப்பதை நேரில் காண்கையால், அந்த இடத்தில் ராஜ ஸம்பந்தீ ஸபை என்று கூறுகிறோம். ஆகையால், பூத வ்ராத: என்கிற இடத்தில் பூத ஸம்பந்தீ வ்ராத: என்று அர்த்தம் சொல்வது உசிதமேயாகும்.*

*இவ்வர்த்தம் ஶ்ரீபாஷ்யகாரர் திருவுள்ளத்திற்கு உகந்த அர்த்தமேயாகும். அதாவது 'ப்ரஹ்மஜிஜ்ஞாஸா' என்றவிடத்தில் 'ப்ரஹ்மணோ ஜிஜ்ஞாஸா-ப்ரஹ்மஜிஜ்ஞாஸா''- என்று ப்ரஹ்மஜிஜ்ஞாஸா பதத்திற்கு அர்த்தம் சொல்லும் போது* **★ஸம்பந்த ஸாமான்ய ஷஷ்டீ பரிக்ரஹே ப்ரஹ்ம ஸம்பந்திநாமபி ஜிஜ்ஞாஸ்யத்வம் ஸித்யதி, ★** *என்ற அருளிச் செய்திருப்பதைக் காணலாம்.*

**ரக்ஷா-** *இஷ்டத்தை அடைவது பர்யந்தம் ஏற்படக் கூடிய அநிஷ்டத்தை (தடங்கலை) நிவர்த்தி செய்வதுதான் ரக்ஷையாகும். அவ்விஷயத்தில்* **ஏகதீக்ஷ:-** *த்ருடமான வ்ரதத்தையுடையவன். ரக்ஷைகதீக்ஷ-ஆச்ரிதர்களை ரக்ஷிக்கும்போது தனக்கு ஏதாவது ஆபத்து வந்தாலும், அதைப் பொருட்படுத்தாமல், ஆச்ரிதர்களை ரக்ஷித்தே தீருவது என்கிற த்ருடவ்ரதத்தையுடையவன். அதாவது ப்ரதானமாகக் வ்ரதத்தைக் கொண்டவன் என்று ஏக பதத்தின் தாத்பர்யம்.*

**अप्यहं जीवितं जह्यां त्वां वा सीते सलक्ष्मणाम्**
**न हि प्रतिज्ञां संश्रुत्य ब्राह्मणेभ्यो विशेषतः ॥**

*தண்டகாரண்யத்தில் மஹரிஷிகளின் ப்ரார்த்தனைக்கிணங்க அங்குள்ள ராக்ஷஸர் களை அழித்து, மஹரிஷிகளுக்கு க்ஷேமத்தை உண்டுபண்ணுவதாகப் பெருமாள் ப்ரதிஜ்ஞை பண்ணினார். அதன்பிறகு, ஸீதா பிராட்டி நான் ஒரு விஷயத்தை தேவரீருக்கு ஜ்ஞாபகப்படுத்துகிறேன். நான் சொல்லும் விதமாகவே தேவரீர் கார்யத்தைச் செய்ய வேண்டுமென்று உம்மை நிர்ப்பந்திக்கவில்லை. 'ஸ்மாரயே த்வாம் ந சிக்ஷயே' என்று சொல்லி-'ஆந்ருஶம்ஸ்யம் பரோ தர்ம: த்வத்த*

*ஏவ மயா ஶ்ருதம்'-பிறர்களை ஹிம்ஸிக்கக் கூடாது. அதுதான் உயர்ந்த தர்மம் என்று தேவரீரே எனக்கு உபதேசித்துள்ளீர். இவ்விதமிருக்க ராக்ஷஸப் பூண்டை அழித்து விடுவதாக இப்பொழுது ப்ரதிஜ்ஞை பண்ணியது யுக்தமாகுமோ? அதைச் செய்ய வேண்டாம் என்று ப்ரார்த்திக்க, அப்பொழுது பகவான் அருளிச் செய்த வார்த்தை இது. தேவி! என் ப்ராணனை விட்டாலும் விட்டு விடுவேன். என் ப்ராணனைக் காட்டிலும் மிகவும் அபிமதையான உன்னை விட்டாலும் விட்டு விடுவேன்.* **★தேஶே தேஶே களத்ராணி, தேஶே தேஶே ச பாந்தவா:। தந்து தேஶம் ந பஶ்யாமி யத்ர ப்ராதா ஸஹோதர:★** *-என்று சொல்கிறபடி, கிடைக்க அரியவனான-ப்ராதாவான லக்ஷ்மணனை விட்டாலும் விடுவேன். ஆனால் ''ப்ராஹ்மணர்களிடம் செய்த ப்ரதிஜ்ஞையை ஒரு போதும் விடமாட்டேன்'' என்று தன் ப்ராணனை விட்டாவது தன்னுடைய ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றி, அவர்களை ரக்ஷிப்பதே தன்னுடைய ப்ரதான வ்ரதமாகும் என்று அருளிச் செய்திருப்பதைக் காணலாம்.*

> **காமம் ஆத்மாநம் பார்யாம் புத்ரம் வா உபருந்த்யாத் ந த்வேவ தாஸ கர்மகரம்★** *(ஆபஸ்தம்ப-2 ப்ர-9க)*

*தாஸனாகி எவன் கைங்கர்யம்-வேலை செய்கிறானோ அவன் தாஸகர்மகரன். அவனை ந உபருந்த்யாத். அவனுக்கு பசிக்கும்போது அன்னமிட வேண்டும். அவன் பசியுடன் கஷ்டப்படும்படி செய்யலாகாது. தானோ தன் மனைவியோ தன் புத்ரனோ அன்ன பானாதிகளின் குறைவால் வருந்தலாம். தாஸர்கள்- ஊழியர்கள் ஒருபோதும் வருந்தும்படிச் செய்யலாகாது.*

**தீகேஷ:-** *த்ருட வ்ரதத்தையுடையவன் என்று சொன்னதனால் ஆச்ரித ஸம்ரக்ஷணமானது தனக்கு முக்யப் ப்ரயோஜனம் என்று சொன்னதாகிறது. ஒருவன் ஒரு வ்ரதத்தை மேற்கொண்டு அதைச் செய்யாமல் விட்டுவிட்டால் அதனால் வரும் அநர்த்தமும் அந்த வ்ரதத்தை ஸரிவர செய்து முடித்தால் அதனால் வரும் பலனும் வ்ரதத்தை மேற்கொண்டவனுக்கேயல்லவா? ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதன்றோ பகவானுடைய வ்ரதம்.* **★அபயம் ஸர்வபூதேப்ய: ததாமி ஏதத் வ்ரதம் மம★** *-என்று பகவானே சொல்லியிருக்கிறான்.*

*இந்த மங்கள ஶ்லோகத்தில் முதல் பாதத்தால் ஶாரீரக ஶாஸ்த்ரத்தின் முதல் த்விகத்தில் முதல் இரண்டு அத்யாயங்களில் சொல்லப்படும் அர்த்தம் சுருக்கமாகத் தெரிவிக்கப்படுகிறது. இரண்டாவது பாதத்தில் உத்தரத்விகத்தினுடைய-பின் இரண்டு அத்யாயங்களுடைய அர்த்தமானது சுருக்கமாகச் சொல்லப்படுகிறது. இதைச் சற்று விவரித்துக் கூறுகிறோம். முதல் அத்யாயத்தில் இரண்டாவது அதிகரணம், ''ஜன்மாத்யதிகரணம்''. அதில் ஜன்ம, ஸ்திதி லயங்களை பரமாத்மா செய்வதாகவும், அதனால் ஜன்ம ஸ்திதி லய காரணத்வம் பரமாத்மாவிற்கு லக்ஷணம் என்று அவ்வதிகரணத்தில் நிர்ணயித்துள்ளார். அதைச் சுருக்கமாக 'ஜன்ம ஸ்தேம பங்க' ஶப்தத்தினால் இங்கு காட்டியுள்ளார். அதனால் ஸமந்வயாத்யாயமான-முதல்*

*அத்யாயத்தின் அர்த்தம் ஸூசிக்கப்பட்டதாகிறது. லீலை என்பதால், 'அவிரோதாத்யா யம்' எனப்படும் இரண்டாவது அத்யாயத்தின் அர்த்தம் சுருக்கமாகச் சொல்லப்படுகி றது. அதாவது இரண்டாவது அத்யாயத்தின் முதல் பாதத்தின் கடைசி அதிகரணம்* **ப்ரயோஜனவத்வாதிகரணம்.** *அதில் அவாப்தஸமஸ்த காமனான பரமாத்மாவிற்கு ஜகத் ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரம் ஸம்பவியாது. பித்தனும் ப்ரயோஜனமற்ற கார்யத்தைச் செய்யமாட்டானாகையால் ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களை பரமாத்மா வைத் தவிர்த்து வேறொருவனே செய்வதாகச் சொல்ல வேண்டும் என்று ஆக்ஷேபித்து, அதற்கு* **★லோகவத்து லீலா கைவல்யம்★** *என்கிற ஸூத்ரத்தால் கேவல லீலைதான் ப்ரயோஜனம் என்று நிர்ணயித்துள்ளார். இவ்வர்த்தத்தை ஸூசிப்பித்து இங்கு 'லீலா' ஶப்தத்தைப் ப்ரயோகித்துள்ளார். ஆக இரண்டாவது அத்யாயத்தின் வஸ்து நிர்தேசம் இதனால் பண்ணப்பட்டதாகிறது. மூன்றாம் அத்யாயம் ''ஸாதநாத்யாயம்''. அதில் பகவத் ப்ராப்திக்கு ஸாதனமாக பக்தியாதிகள் சொல்லப்படுகின்றன. அவ்வத்யாயத்தின் அர்த்தத்தை 'விநத' என்னும் பதத்தால் ஸூசிப்பித்தார். ரக்ஷாபதத்தால் வித்வான்களுக்கு கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைக் கொடுத்து ரக்ஷிப்பதாகச் சொல்லும் நான்காவது அத்யாயத்தின் அர்த்தத்தைச் சுருங்கக் கூறியதாக ஆகிறது. இவ்விதமாக இரண்டு பாதங்களில் நான்கு அத்யாயங்களின் அர்த்தத்தைச் சுருக்கமாக விளக்கியுள்ளதால், ஶாரீரக ஶாஸ்த்ரத்தின் வஸ்து நிர்தேஶத்தை இந்த ஶ்லோகத்தில் தெரிவித்துள்ளார்.*

*இவ்விதமாக பகவானுக்கு ஜகத் காரணத்வ, மோக்ஷ ப்ரதத்வங்கள் சொல்ல ப்பட்டன. இவை இரண்டும் அரசர்களுக்கு சத்ர, சாமரங்கள் போல் ப்ரஹ்மத்திற்கு அஸாதாரண சின்னங்கள். பரத்வ, ஸௌலப்ய குணங்கள் பகவானை ஆச்ரயிப்பதற் குக் காரணங்களாக அறியத்தக்கன.*

*இனி, ப்ரமாணமில்லாமல் ப்ரமேயம் ஸித்திக்காதாகையால், இப்படிப்பட்ட ப்ரஹ்ம விஷயத்தில் ப்ரமாணத்தைக் காட்டுகிறார்-* **★ஶ்ருதிஸிரஸி★** *என்று.* **★ஶ்ரூயதே நித்யம் இதி ஶ்ருதி:★** *-எப்பொழுதும் கேட்கப்படுவதால் ஶ்ருதி எனப்படுகிறது. இதனால் வேதமானது மனிதனால் செய்யப்படாதது- அபௌருஷே யம் -எனப்படுகிறது. அதனால் வேதம் தோஷமற்றதாகிறது. புருஷ கர்த்ருகமாகயிருந் தால் அவனுடைய ஸத்வாதிகுண வைஷம்யத்தால் அவ்வோ குணங்களுக்குச் சேர அவர்கள் செய்யும் க்ரந்தங்களிலும் குண தோஷங்கள் ஏற்படுகின்றதாக அறிகிறோமல்லவா? அப்படிப்பட்ட தோஷமற்றது ஶ்ருதி-வேதம். ஶிரஸ் ஶப்தத்தால் அநந்ய பரத்வம் விவக்ஷிதம். அதாவது பரமாத்மாவையே ப்ரதானமாகத் தெரிவிக்கும் மந்த்ர-ப்ராஹ்மண பாகத்தையுடைய உபநிஷத் இங்கு ஶிரஸ் ஶப்தத்தால் சொல்லப்படுகிறது என்று அர்த்தம்.*

**விதீப்தே-** *விஶேஷேண தீப்தத்வம்-விதீப்தத்வம்-அதாவது பூர்வபாகமான கர்ம காண்டத்தில் அக்னி, இந்த்ராதி தேவதா ரூபமாக ப்ரஹ்மந்தான் ப்ரதிபாதிக்கப்படுகி றது.* **★ததேவாக்நி: தத்வாயு: தத்ஸூர்ய: தது சந்த்ரமா:★** *(அந்த ப்ரஹ்மந்தான் அக்னி, அதுதான் வாயு, அதுதான் ஸூர்யன், அதுதான் சந்த்ரன்) இது முதலான*

உபநிஷத் வாக்யங்களாலேயே தெரிகிறதாகையால் விசேஷித்து ப்ரகாசிக்கிறதாகிற தன்மையுடையது என்று, ஶ்ருதி ஶிரஸி விதீப்தே என்பதால் அருளிச் செய்துள்ளார். அதவா-அல்ப ஸுகத்திற்கு ஸாதனபூதமாயும், துக்கமாயும் இருக்கிற ப்ரவ்ருத்தி-நிவ்ருத்திரூபமான ப்ரயோஜனம் பூர்வ காண்டத்தில் தீப்தமாகயிருக்கிறது. (விஷயானுபவ இச்சையால் இந்திரியங்கள் மூலம் வெளிப்படும் மனத்தின் போக்கு ப்ரவ்ருத்தி எனப்படுகிறது). (விஷயானுபவங்களினின்று உண்டாகும் மனத்தின் நிவ்ருத்தி-விலகல்-நிவ்ருத்தி எனப்படும்). பரமாத்மா ஸ்வயம் நிரதிஶய ஆனந்தமய மாகையால் பரம புருஷார்த்தமானது மேலுள்ள பாகத்தில் உபநிஷத்தில் விசேஷேண தீப்தம் என்றாவது அர்த்தம் கொள்ளலாம்.

**ப்ரஹ்மணி**-இது ஸாமான்ய ஶப்தம். உபநிஷத்திலுள்ள ஸத், ப்ரஹ்மாதி ஸாமான்ய ஶப்தங்கள் இதனால் காட்டப்பட்டதாகின்றன. ★ **ஸ்ரீநிவாஸே** ★ என்பது விஶேஷ பதம். நாராயணாதி விஶேஷ பதங்கள் இதனால் ப்ரகாஶிதமாகிறது. ஸாமான்ய விஶேஷ ந்யாயத்தாலே ஸாமான்ய பதங்களை விஶேஷத்தில் பர்யவஸாநம் பண்ண வேண்டுமாகையால் இங்கு ஸத்-ப்ரஹ்மாதி பதங்களால் சொல்லப்படுபவன் நாராயணனே என்று சொல்லப்பட்டதாகிறது.

**பரஸ்மிந்**-பராதிகரணத்தில் (3-2-7) ஜகத்காரண பூதனான பரமாத்மாவே ஸர் வோத்க்ருஷ்டன். அவனைக் காட்டிலும் வேறொன்று பரமானது-உத்க்ருஷ்டமானது கிடையாது என்று ஸர்வோத்க்ருஷ்டன் பரமாத்மாவே என்று நிர்ணயிக்கப்பட்டுள் ளது. ப்ரஹ்மவிதாப்நோதி ஶ்ருதியில் பர ஶப்தத்தால்- பரம் என்று சொல்லப்படு பவனை இங்கு பர ஶப்தத்தினால் ஸூசிப்பிக்கிறார். ப்ரஹ்மமே அவனை அடைவதற்கு உபாயம்-ஹேது என்று பராதிகரணத்தில் நிர்ணயித்துள்ளதும் ஸூசிதமாகிறது. அல்லது உபயலிங்காதிகரணத்தில் 'ந ஸ்தாநதோபி பரஸ்ய உபயலிங்கம் ஸர்வத்ரஹி (3-2-11) என்கிற ஸூத்ரத்தில் ப்ருதிவ்யாதி ஸ்தானங்களில் பரமாத்மா இருந்த போதிலும் அவன் ஹேயப்ரத்யநீகநாய், ஸகலகல்யாணகுணவி சிஷ்டனாகவே இருக்கிறான் என்று நிர்ணயிக்கப்பட்ட அர்த்தம் 'பர' ஶப்தத்தினால் ஸூசிதமாகிறது.

**ஶேமுஷீ**:- இதனால் உபாய ஸவரூபத்தைச் சொல்கிறார். 'ஶேமுஷீ' என்பது ஸாமான்ய ஶப்தம். பக்தி ரூபா என்பது விஶேஷ ஶப்தம். இவ்விடத்திலும் ஸாமாந்ய விஶேஷ ந்யாயத்தைக் கொள்ள வேண்டும். 'ஶேமுஷீ' என்று சொன்னதனால் ஜ்ஞானம், கர்மா இரண்டும் சேர்ந்து உபாயம் என்னும் பக்ஷமானது வ்யாவர்த்திக்கப்படுகிறது. பக்தி ரூபா என்று சொன்னதினால் வாக்யார்த்த ஜ்ஞானத்தினால் மோக்ஷம் என்னும் பக்ஷம் வ்யாவ்ரத்திக்கப்பட்டதாகிறது. இவ்விடத்தில் பக்தி ரூபா என்று ஸாமான்யமாக சொன்னதனால்-அதாவது பரபக்தி என்று விஶேஷித்துச் சொல்லாததால்- ★'**சுத்தபாவம் கதோ பக்த்யா ஶாஸ்த்ராத் வேத்மி ஜனார்த்தனம்**'-★ (பக்த்யா-ப்ரேம பக்தியினாலே, சுத்த பாவம்-சுத்தமான மனோபாவத்தை அடைந்தவனாய்க்கொண்டு ஶாஸ்த்ரத்தாலே ஜனார்த்தனனை அறிகிறேன்) என்றும் ★'**பக்த்யா து அநந்யயா ஶக்ய:**' ★ (வேறொரு பலனை

விரும்பாமல் என்னையே அடைய வேண்டும் என்கிற எண்ணத்துடன் பண்ணுகிற பக்தியினாலேயே நான் அடையத் தக்கவனாகிறேன்) என்றும், ★ஜ்ஞாதும், த்ரஷ்டும் ச தத்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப★ தத்வேந ஜ்ஞாதும்-உள்ளது உள்ளபடியே அறிவதற்கும், உள்ளபடியே பார்ப்பதற்கும், உள்ளபடியே அடைவதற்கும் பக்தி ஒன்றால்தான் முடியும்) என்றும் சொல்கிறபடியே ஜ்ஞான, தர்சன ப்ராப்திகளுக்கு ஸாதனமாகச் சொல்லப்பட்ட பக்தியும் இங்கு விவக்ஷிதம். அதாவது ப்ரஹ்மப்ராப்திக்கு ஸாதனமான பரபக்தி மாத்ரமன்றிக்கே, பரபக்திக்குக் காரணபூதமாயும், ஜ்ஞான, தர்சனாதிகளுக்கு, ஸாதனமான பக்தியும் இங்கு சொல்லப்பட்டதாகக் கொள்ள வேண்டும் என்று அர்த்தம்.

**மம**-எனக்கு-மஹா அபராதியான எனக்கு. 'அஹமஸ்மி அபராதானாம் ஆலய:' என்கிறபடி, ஸ்வாத்மானம்-தன்னை அனுஸந்தித்ததாக அர்த்தம்.

**பவது**-உண்டாகட்டும். பக்தியே ஸ்வாது தமமாகையாலே அனுபவிக்க அனுபவிக்க, பரமானந்தத்தையளிக்குமாகையாலே பக்தியே வேண்டுமென்று ப்ரார்த்திக்கத் தக்கதாகிறது என்பது ஸூசிதமாகிறது. பக்தியானது எல்லோருக்கும் ருசிக்குமோ? ருசிக்காதிறே? என்கிற ஶங்கைக்கு பரிஹாரமாக 'மம பவது' என்று அருளிச்செய்கிறார் என்றும் கொள்ளலாம். மம-பக்தி உண்டாவதற்குத் தடங்கலாயுள்ள பாபமற்றவனாயிருக்கும் எனக்கு-பக்தி ரூபாபந்நமான ஜ்ஞானமானது உண்டாக வேண்டும் என்று ப்ரார்த்தித்தாராயிற்று. ரக்ஷைக தீக்ஷே பரஸ்மிந் இத்யந்தை: ஸப்தம்யந்தை. பதை: உபேய பூத ஏவ ஸித்தோபாய: உக்த:-அதாவது ரக்ஷைகதீக்ஷே, ஶ்ருதிஸிரஸி-விதீப்தே ப்ரஹ்மணி, ஸ்ரீநிவாஸே, பரஸ்மிந் என்கிற ஸப்தம்யந்த பதங்களால்-ஏழாம் வேற்றுமையுள்ள பதங்களினால் உபேயபூதனே-அடையத் தகுந்தவனே ஸித்தோபாயன் எனப்படுகிறான். இவ்விடத்தில் 'ரக்ஷைகதீக்ஷே' என்பதற்குப் பிறகு இதி என்னும் பதத்தை அத்யாஹாரம் பண்ணிக் கொள்ள வேண்டும். ததச்ச இயம் யோஜனா'-பரஸ்மிந் இத்யந்தை: ப்ரதிபாதித உபேயபூதஏவ ரக்ஷைக தீக்ஷே இதி ஸித்தோபாய: உக்த:. பக்தி: இதி ஸாத்யோபாய: உக்த:-ஸாத்யோபாயம் சொல்லப்பட்டதாகிறது. இதி, ரக்ஷைக தீக்ஷே-இதி பதோபாதான வையர்த்யம் ந சோதனீயம் இதி த்ரஷ்டவ்யம்'-அதாவது பரஸ்மிந் என்கிறவரையிலுள்ள ஸப்தம்யந்த பதங்களால் ப்ரதிபாதிக்கப்பட்ட உபேயபூதனே-ரக்ஷைக தீக்ஷே என்பதனால் ஸித்தோபாயனாகச் சொல்லப்படுகிறான் என்று அர்த்தம் கொள்ள வேண்டும். இவ்விதம் சொல்வதினால் 'ரக்ஷைக தீக்ஷே' என்னும் பதத்தை இவ்விடத்தில் எதற்குச் சொல்ல வேண்டும்? மற்ற பதங்களினாலேயே உபேயபூதனானவன் ஸித்தோபாயனாகிறான் என்று அர்த்தம் சொல்லப்பட்டதால் ரக்ஷா பதத்தை இங்கு சேர்க்க வேண்டியதில்லையே? என்கிற வையர்த்ய ஶங்கைக்கு ப்ரஸக்தியில்லை.

**நநு**-பக்தி ரூபாபந்ந ஞானத்திற்கு உபாயத்வம் சொல்லப்பட்டது. இவ்விதமாகில் இப்படிப்பட்ட ஸாக்ஷாத்கார ப்ரீதிரூபத்வபர்யந்தமான த்ருவாநுஸ்ம்ருதியை பக்தி ஶப்த வாச்யம் னெறு லகு ஸித்தாந்தத்தில் அருளிச் செய்துள்ளது எவ்விதம் பொருந்தும்?

பரிஹாரம்:- அவ்விதமும் ஒரு பக்ஷம் சொல்லப்படுகிறது-'மதாந்தரத்வேன-அதோஷாத்' என்று தாத்பர்யம்.

* * * *

पाराशर्यवचस्सुधामुपनिषद्दुग्धाब्धिमध्योद्धृतां
संसाराग्निविदीपनव्यपगतप्राणात्मसञ्जीवनीम्।
पूर्वाचार्यसुरक्षितां बहुमतिव्याघातदूरस्थितां
आनीतां तु निजाक्षरैः सुमनसो भौमाः पिबन्त्वन्वहम्॥

பாராஶர்யவச:ஸுதாம் உபநிஷத்துக்தாப்திமத்யோத்ருதாம்
ஸம்ஸாராக்நி விதீபந வ்யபகத ப்ராணாத்ம ஸஞ்ஜீவநீம் ।
பூர்வாசார்ய ஸுரக்ஷிதாம் பஹுமதிவ்யாகாத தூரஸ்திதாம்
ஆநீதாம் து நிஜாக்ஷரை: ஸுமநஸோ பௌமா: பிபந்து அந்வஹம்॥

**கருத்து:-** உபநிஷத்தாகிற பாற்கடலின் மத்தியிலிருந்து எடுக்கப்பட்டதும், ஸம்ஸாரமாகிற அக்நியின் தாபத்தால்-எரிச்சலால், ப்ராண பூதமான பரமாத்மாவைப் பெறாத ஆத்மாக்களை உஜ்ஜீவிக்கச் செய்கிறதும், பூர்வாசார்யர்களால் நன்கு பாதுகாக்கப்பட்டதும், பலவித மதிவிகல்பங்களால் ஸமீசீனமான-உண்மையான அர்த்தங்களுக்கு வ்யாகாதத்தால் அவைகளை அறிந்துகொள்ள முடியாதபடி வெகு தூரத்தில் விலகியிருப்பதும், தம்முடைய அக்ஷரத்தால் (பாஷ்யத்தால்) ஸமீபத்தில் கொண்டு வரப்பட்டுள்ளதுமான பராசரருடைய குமாரரான வ்யாஸருடைய வசநாம்ருதத்தை இவ்வுலகில் நுண்ணறிவுள்ள பூஸுரர்கள் தினந்தோறும் பருகட்டும்.

**விரிவுரை:-** ஶ்ருதியைக் கொண்டே உபாய உபேயங்களை அறிந்து கொள்ள முடியுமாதலால் தேவரீர் எதற்காக இந்தக் க்ரந்தத்தை அருளிச் செய்ய வேண்டும்? என்கிற ஶங்கைவர அருளிச் செய்கிறார்- பாராசர்ய -என்று. ஸித்தரூபமான பரம விஷயமானது தம்முடைய க்ரந்தத்திற்கு பரமப்ரயோஜனம் என்று முதல் ஶ்லோகத்தில் காண்பித்தார். அதாவது பரஸ்மிந் என்னும் பதத்தால் பராதிகரண ஸித்தாந்தத்தில் நிர்ணயிக்கப்பட்ட பகவான் பரமப்ரயோஜனம் என்று காட்டப்பட்டது. ஸாத்யரூப ப்ரயோஜனமானது ரக்ஷா பதத்தால் சுருக்கமாகக் கூறப்பட்டது. பிறகு இரண்டாவது ஶ்லோகத்தில் அவாந்தர விஷயமும்-உள்ளடங்கிய விஷயமும், பரம்பரையாக ப்ரஹ்ம விஷயத்வமும், அடுத்தபடியாக ஸம்யக்ஜ்ஞானமும் தம்முடைய க்ரந்தத்திற்கு-ப்ரயோஜனம். தம்முடைய க்ரந்தத்தை ஸேவிப்பதால், உடனடியாக உண்டாகும் ஸம்யக்ஜ்ஞானமானது-நல்ல அறிவானது அவாந்தர ப்ரயோஜனமென்பதும் பரம்பரையாக முக்தியானது பரமப்ரயோஜனமென்பதும், தம்மால் வ்யாக்யானிக்கத்தக்க க்ரந்தமானது-வேத ப்ரமாண மூலகம் என்றும், ஸம்ப்ரதாயாகதம்-ஓராண் ஒரு வழியாக வந்தது என்றும் ஶப்தத்தால் நேரிடையாக அருளிச் செய்கிறார். இந்த ஶ்லோகத்தில், ஸ்துதிரூப, குரு உபாஸநாதி மங்களாசாரமும் அர்தாத் செய்யப்பட்டதாகிறது.

*முதல் ஶ்லோகத்தால் பரதேவதா நமஸ்கார ரூபமான மங்களத்தையனுஷ்டித்தார். இந்த ஶ்லோகத்தில், குரு உபாஸநத்தைச் செய்கிறார். நநு ஆசார்யன் அநுக்ரஹத்தால் அல்லவோ பகவானைப்பற்றி தெரிந்து கொள்ளவும், அவனை அடையவும் முடியும். ஆதலால் குரு நமஸ்காரமல்லவா முதலில் பண்ணியிருக்க வேண்டுமெனில், ஆசார்ய ஸம்பந்தமானது பகவத் கடாக்ஷத்தாலல்லாது, கிடைக்காதாதலால், முதலில் பகவானை உபாஸித்தார்.*

**★ஈச்வரஸ்ய ச ஸௌஹார்தம் யத்ருச்சா ஸுக்ருதம் ததா ।**
**விஷ்ணோ: கடாக்ஷம் அத்வேஷம் அபிமுக்யம் ச ஸாத்விகை: ॥**
**ஸம்பாஷணம் ஷடேதாநி ஆசார்ய ப்ராப்தி ஹேதவ:★** *என்றல்லவோ ப்ரமாணம் கூறுகிறது. ஜாயமான தசையில் பகவத் கடாக்ஷம் இருந்தால்தான் ஆசார்ய ப்ராப்தியானது கிட்டும்.* **★ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுஸூதந: ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேய: ஸ வை மோக்ஷார்த்த சிந்தக: ★** *என்று ப்ரமாணம் கூறுகிறது. மோக்ஷார்த்த சிந்தக: என்பதனால் ஸதாசார்யனைப் பெறுவான் என்று வ்யாக்யானம் பண்ணியுள்ளார்கள். ஆகையால்- ஆசார்ய ப்ராப்திக்கு பகவதநுக்ரஹம் வேண்டும் என்பதால் முதலில் பகவானைப் பற்றிய ஸ்துதி நமஸ்காராதிகளைச் செய்து, பிறகு இரண்டாவது ஶ்லோகத்தில் ஆசார்ய வந்தனம் செய்வது உபபந்நமேயாகும்.* **★யஸ்ய தேவே பராபக்தி: யதா தேவே ததாகுரௌ★** *என்று ஶ்ருதி கூறுவதைக் காணலாம். வைசம்பாயனர், த்ரமிடாசார்யர் முதலிய பூர்வாசார்யர்களும் பகவந் நமஸ்கார பூர்வமாகவே ஆசார்ய நமஸ்காரத் தைப் பண்ணியுள்ளதை அவர்கள் க்ரந்தங்களில் காணலாம்.*

**பாராசர்ய:-** *வ்யாஸரை பாராசர்யர்-பராசரருடைய புத்ரர் என்று குறிப்பிட்டதனால் அவருடைய பிறப்பின் ஏற்றம் கூறப்பட்டது.* **பராசர:-** *பராந் பாஹ்ய குத்ருஷ்டீந், ப்ரமாண, தர்க்க சரை: ஆஶ்ருணாதி இதி பராசர:; தஸ்ய அபத்யம் பாராசர்ய:. வேத பாஹ்யர்களையும் குத்ருஷ்டிகளையும் ப்ரமாண, தர்க்க பாணங்களால் ஹிம்ஸிக்கிறவர் என்பதால் பராசரர் எனப்படுகிறார். அவருடைய பிள்ளை பாராசர்யர். அப்படிப்பட்ட பராசரருடைய பிள்ளை வேறுவிதமாக இருக்க முடியாதாகையால், வ்யாஸரை பாராசர்யர் என்று அருளிச் செய்தார். இங்கு வ்யாஸருடைய குணமானது தகப்பனாருடைய குணத்தினால் ப்ரகாசப்படுத்தப்படுகி றது.* **★ஸஹோவாச வ்யாஸ: பாராசர்ய:★** *என்று ஶ்ருதி ப்ரஸித்தர்.*

**நநு-** *ஸூத்ரத்தைப் பண்ணியவர் பாதராயணரேயன்றோ?* **★ததுபர்யபி பாதராயண:★ புருஷார்த்தோ அத: ஶப்தாத் இதி பாதராயண:★** *இது முதலான ஒன்பது ஸூத்ரங்களில் பாதராயணர் (ஸூத்ரகாரர்) தம்முடைய ஸித்தாந்தத்தைச் சொல்லியிருக்கிறார் என்றுள்ளது. பராசரபுத்ரரான வ்யாஸரைப் பற்றி ஒரு ஸூத்ரத்திலும் ப்ரஸ்தாபமில்லை. அப்படியிருக்க, பாராசர்யர் என்று பாஷ்யகாரர் அருளிச் செய்தது யுக்தமாகுமோ? எனில், வ்யாஸருக்கு 'பாதராயணர்' என்கிற திருநாமமும் உண்டு.* **[ ★த்வீபே பதரிகாமிச்ரே பாதராயணமச்யுதம் பராசராத் ஸத்யவதீ புத்ரம் லேபே பரந்தபம்] ★** *இலந்த மரங்கள் நிறைந்த த்வீபத்தில்- யமுனையாற்றின் நடுவிலுள்ள ஒரு திட்டில், ஸத்யவதி என்னும் பாக்யவதியானவள், பராசரரிடத்திலிருந்து ஆச்ரித விரோதிகளை நிரஸநம் பண்ணியவரும், ஆச்ரி-*

தர்களைக் கைவிடாதவருமான அச்யுதனுடைய-பகவானுடைய அம்சபூதரான பாதராயணர் என்னும் புத்திரனை அடைந்தாள்) என்று மஹர்ஷி அருளிச் செய்துள்ளார்.

பாதராயணர் என்று வேறு சில மஹர்ஷிகளுக்குப் பெயர் இருக்கலாம். ஆகிலும் ஸூத்ரகாரரைச் சொல்லும் பாதராயண ஶப்தமானது பராசரருடைய புத்திரரையே குறிப்பிடுவதாக ஸ்காந்தத்திலிருந்து அறிகிறோம். அதாவது நாராயணனிடத்திலிருந்து உண்டான ஜ்ஞானமானது க்ருதயுகத்தில் நிலைபெற்றிருந்தது. த்ரேதாயுகத்தில் அந்த ஜ்ஞானம் கொஞ்சம் மாறாட்டத்தை அடைந்தது. த்வாபரயுகத்தில் சிதறிப் போய்விட்டது. கௌதம மஹர்ஷியின் ஶாபத்தால் ஜ்ஞானம் அஜ்ஞான பாவத்தை அடைந்தவாறே ப்ரஹ்ம ருத்ராதிகள் ரக்ஷணத்தில் ஸமர்த்தனும், தோஷமற்றவனுமான நாராயணனைச் சரணமடைந்தார்கள். அவர்களின் விஜ்ஞாபனத்தைக் கேட்ட புருஷோத்தமனான நாராயணன் அவர்களின் கார்யத்தை நிறைவேற்றுவதற்காக பராசர மஹரிஷியினிடத்திலிருந்து ஸத்யவதிக்குப் புத்ரனாக அவதரித்தார். வ்யாஸரூபியாக அவதரித்த பகவான், சிதறிப் போன வேதங்களை உத்தாரணம் செய்தார். வேதங்களைப் பலவாறாகப் பிரித்து ஸுலபமாகத் தெரிந்து கொள்ளும்படிச் செய்தார். வேதங்களின் அர்த்தங்களைத் தெரிந்து கொள்வதற்காக ப்ரஹ்ம ஸூத்ரங்களைச் செய்தருளினார். அந்த ஸூத்ரங்களுக்கு ஸூத்ரலக்ஷணம் நன்கு பொருந்தியிருக்கிறது. ஸந்தேஹத்தைப் போக்கும் தன்மையுடையதும், ஸாரமுள்ளதும், எவ்வழியிலும் ப்ரவ்ருத்திக்கும் வல்லமையுள்ளதும் நிரர்த்தகமான ஶப்தமில்லாததும், தோஷமற்றதுமான ஶப்த ஜாலத்தை ஸூத்ரம் என்று ஸூத்ரத்தின் லக்ஷணத்தையறிந்த பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

अल्पाक्षरं असन्दिग्धं सारवत् विश्वतोमुखम् ।
अस्तोभं अनवद्यं च सूत्रं सूत्रविदो विदुः ॥
निर्विशेषसूत्रत्वं ब्रह्मसूत्रस्य चाप्यतः ।
सविशेषाणि सूत्राणि हि अपराणि विदो विदुः ॥

(ஸூத்ரம் என்று விஶேஷமில்லாமல் சொல்லுவது ப்ரஹ்ம ஸூத்ரம் ஒன்றுக்கே பொருந்தும். மற்ற ஸூத்ரங்களைப் பாணினிஸூத்ரம், ஜைமினிஸூத்ரம், கௌதம ஸூத்ரம் என்று ஸவிஶேஷணமாகவே அநாதிகாலமாக அறிஞர்கள், சொல்லி வருகிறார்கள்). முக்யமானதை நிர்விஶேஷ ஶப்தத்தாலும், மற்றதை ஸவிஶேஷ ஶப்தத்தாலும் பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். அதிக கீர்த்தியுள்ளவரான வ்யாஸரூபியான பகவான் இப்படிப்பட்ட ஸூத்ரங்களைப் பண்ணி ப்ரஹ்ம ருத்ராதி தேவர்களிடத்திலும், பித்ருக்களிடத்திலும், பக்ஷிகளிடத்திலும் ஜ்ஞானத்தை நிலைநிறுத்தி ஸந்தோஷத்தையடைந்தார் என்று ஸ்காந்தத்தில், ப்ரஹ்ம ஸூத்ரத்தைப் பண்ணிய வ்யாஸரைத்தான் 'பாதராயணர்' என்று சொல்லியிருப்பதைக் காணலாம்.

**வச:ஸுதாம்:-** இவ்விடத்தில் வச: ஶப்தமானது அதன் அர்த்தத்தைச் சொல்லுவதாகக் கொள்ளவேண்டும். வேதவித், ஶாஸ்த்ரவித் என்கிற இடங்களில் வேதத்தின் அர்த்தத்தை அறிந்தவன், ஶாஸ்த்ரத்தின் அர்த்தத்தையறிந்தவன் என்று அர்த்த பர்யந்தம் சொல்லுவதுபோல் இங்கும் கொள்ள வேண்டும். 'அர்த்தாபிதாயகம் ஹி வாக்யம்'.

சில ஆசார்யர்கள் வசஸ: ஸுதாம்-வசஸ்ஸினுடைய ஸுதா என்று சொல்லுகிறார்கள். ரூபக ப்ரகரணமானதாலும், ஸுதா ஶப்தத்தில் லக்ஷணை கற்பிப்பதில் பயத்தாலும், ஸுதேவ-வச:-ஸுதையைப் போல் வசஸ்-என்று உபமித ஸமாஸத்தை வேறு சில ஆசார்யர்கள் ஆதரிக்கிறார்கள். ஸுதா ஶப்தத்தினால் போக்யமாயிருக்கும் தன்மை அபிப்ரேதம். இவ்வாறாக இக்ரந்தத்திற்கு அவாந்தர விஷயம் சொல்லப்பட்டது.

**'உபநித்துக்தாப்திமத்யோத்த்ருதாம்':-** இவ்விதமாகில் ப்ரஹ்மத்திற்கு விஷயத்வம் எவ்விதம் ஸித்திக்கும்? அதாவது ப்ரஹ்மத்தைப் பற்றி விசாரிப்பதாகக் கூறுவது எவ்விதம் பொருந்தும்?-எனில், ப்ரஹ்ம விஷயத்வம் ஸத்வாரகமானது என்று சொல்லுகிறார்-உபநிஷத் என்று. ★**ப்ரஹ்மணி உபநிஷண்ணத்வாத் உபநிஷத்.**★ பகவானிடத்தில் நெருங்கி வர்த்திப்பதால் உபநிஷத் எனப்படுகிறது. ★**கஹநே ஹ்யம் வித்யா ஸந்நிவிஷ்டா. கஹநே**★ பரமாத்மாவினிடத்தில் இவ்வித்யையானது, ஸந்நிவிஷ்டா-இருக்கிறது என்று உள்ளது. த்ரமிட பாஷ்யத்தில், ★**கஹநே ப்ரஹ்மணி உபநிஷண்ணா**★ -என்று தத்விஷயமாய் வாமன டீகை என்கிற வ்யாக்யானம் உள்ளது. ★**விகர்தா கஹநோ குஹ:**★ -என்று ஸஹஸ்ரநாம பாடத்தினால் கஹந **ஶப்தமானது ப்ரஹ்மபரம்.** இதனால் ஸாக்ஷாத்தாகவே ப்ரஹ்மத்தைப் ப்ரதிபாதிக்கிற ஸாமர்த்யமுடையது உபநிஷத் என்றதாயிற்று.

**துக்த:- க்ஷீரம்.** இதனால் பூர்வபாகத்தைக் காட்டிலும், உபநிஷத் பாகம் சுவையுள்ளது-ஸாரமானது என்று விளக்கப்பட்டது. ★**ஆரண்யகஞ்ச வேதேப்ய: ஓஷதிப்யோ யதாம்ருதம்'**★ -ஓஷதிப்ய:-ஓஷதிகளிலிருந்து அம்ருதம்போல், வேதங்களிலிருந்து வேதாந்த பாகம் எடுக்கப்பட்டிருக்கிறது என்பது இதற்குப் ப்ரமாணம்.

**அப்தி:- ஸமுத்ரம். அப்தி** ஶப்தத்தால் விசாரிக்கப்படுகிற உபநிஷத்துகள்-அநந்தங்கள் என்பது ஸூசிதமாகிறது.

**மத்ய:-** மத்ய பாகத்திலிருந்து. இதனால் எல்லா வாக்யங்களுடையவும், ஸாரதமமான-முக்யார்த்தமானது விடப்படவில்லை என்பது ஸூசிதமாகிறது.

**உத்த்ருத** ஶப்தத்தால் மிகவும் ஆழமான தேசத்தில் அமிழ்ந்து கிடக்கிறதை நன்றாக மூழ்கி மேலே எடுப்பதைச் சொல்லுகிறபடியால், எல்லா அர்த்தங்களும் மிகுதியின்றி சொல்லப்படுவதாக ஸூசிக்கப்படுகிறது. தம்முடைய க்ரந்தத்திற்கு அவாந்தர விஷயம் பாராசர்யருடைய-வ்யாஸருடைய ஸூத்ரம். அந்த வ்யாஸ ஸூத்ரத்திற்கு அவாந்தர விஷயம் உபநிஷத். அந்த உபநிஷத்திற்கு விஷயம்

ப்ரஹ்மம். ஆக இக்ரந்தத்தில் பரம்பரயா ப்ரஹ்மமானது ப்ரதிபாதிக்கப்பட்டதாகிறது. **உபநிஷத்மத்யோத்த்ருதாம் பாராசர்ய வச:ஸுதாம்** என்று அருளிச் செய்துள்ளதால், பாதராயணருடைய ஸூத்ரங்களுக்கு உபநிஷத்தானது மூலம் என்று சொல்லப்பட்ட தாகிறது. இதனால் ஸாங்க்யாதி க்ரந்தங்கள் ப்ரமாணமான வேதத்தை மூலமாக உடையவைகளல்ல. ஆதலால் அவைகள் ஆதரிக்கத்தக்கவையல்ல என்று ஸூசிதம்.

**ஸம்ஸாராக்நி விதீபந வ்யபகத ப்ராணாத்ம ஸஞ்ஜீவநீம். ஸம்ஸார:- அசித்பி: ஏகீக்ருத்ய ஜந்மாதிப்ரவாஹப்ராப்தி:-ஸம்ஸார:** அசித்தோடு-ஶரீரத்தோடு சேர்ந்து ஜந்மஜராமரணாதி ப்ரவாஹங்களையடைவது ஸம்ஸாரம் எனப்படுகிறது. **யத்வா- ஸம்ஸரதி அநேந இதி** ஸம்ஸார: **-புண்ய பாப கர்மாக்களால் ஜந்ம ஜரா மரணாதி ஶரீர ஸம்பந்தம் உண்டாவதனால் புண்யபாபரூபகர்மாக்கள் ஸம்ஸாரம் எனப்படுகிறது. ஸம்ஸார ஏவ அக்நி:-** ஸம்ஸாராக்நி: தஸ்மாத் விதீபநாநி-விஶிஷ்ட தீபநாநி-அதிசயதாபா: இத்யர்த்த:-ஸம்ஸாரமாகிற அக்நியானது அதிசயித தாபத்தை உடையது என்று அர்த்தம். ஸம்ஸார:-கர்மஸம்பந்த: அதை நிமித்தமாகக் கொண்டன்றோ ஆத்யாத்மிகாதி தாபத்ரயங்கள் உண்டாகின்றன. ஸம்ஸாராக்நி ஶப்தத்தால்-ஸம்ஸாரமானது முழுவதும் தாபத்ரயரூபமாக இருக்கிறது என்று சொல்லப்பட்டதாகிறது. **★ஸ்வர்கேபி பாதபீதஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:★** (ஸ்வர்க்கத்தை அடைவதற்குக் காரணமாயிருந்த புண்யங்கள் குறைந்து கொண்டே வரும் பொழுது, நாம் ஸ்வர்க்கத்திலிருந்து பூலோகத்தை அடையவேண் டிய காலம் குறுகிக் கொண்டே வருகிறது என்று எண்ணி பயந்து கொண்டிருக்கிறவ னுக்கு, ஸ்வர்கஸுகானுபவகாலத்திலும், அந்த ஸுகம் துக்கம் கலசியதாகவே இருக்கிறது என்பதால், ஸம்ஸார தசையில் தாபத்ரயமானது இருந்தே தீரும்.)

**தீபந** ஶப்தத்தால் நாற்புறமும் எரிந்து கொண்டிருக்கிற எனபதனால். வித்யா லாபத்திற்கு முன்பு எப்போதும் குறைவின்றியே ஜ்வலித்துக் கொண்டிருப்பது, ஒருபோதும் அணைக்கத்தக்கதாக இருந்ததில்லை என்பது ஸூசிதமாகிறது. தீபநம்-எரிப்பதும்-ஆத்யாத்மிக ஆதிபௌதிக, ஆதிதைவிக என்னும் தாபத்ரயாதி ரூபேண-பலவகைப்பட்டவை. ஆகையினால் **விதீப்தே** எனறு அருளிச்செய்தார். விதீபநம்-விவிதம் தீபநம்-பலவகைப்பட்ட தீபநம். அந்த மூன்றிலும், ஒவ்வொன்றும் ஶாரீரம், மானஸம், வாசிகம் என பலவகைப்பட்டிருக்கிறது.

**வ்யபகத ப்ராணாத்ம ஸஞ்ஜீவநீம்-** தாபத்ரயத்தால் பீடிக்கப்பட்டிருக்கும் ஸம்ஸாரி சேதனன் தனக்கு ஆத்மாவாகயிருக்கிற பரமாத்மாவினுடைய ஸ்வரூப, ஸ்வபாவ கல்யாண குணங்களைச் சிந்திக்காததால் ஜீவாத்மாவிற்குப் ப்ராணபூதனான பரமாத்மா ஜீவாத்மாவை விட்டு விலகியிருக்கிறான். அதாவது பரமாத்ம அநுபவமின்றிக்கேயி ருக்கிறான். ஜீவாத்மாவும் தன்னுடைய ஸ்வரூபத்தை-அதாவது பகவத் ஶேஷத்வத் தையறியாமல் ஸ்வரூப ஸத்தையை இழந்திருக்கிறான். ஆகையால் ஜீவ பரமாத்ம அநுபவ சூன்யர்களான ஸம்ஸாரி சேதனர்களுக்கு இந்த க்ரந்தமானது ஸஞ்ஜீவநீ-உஜ்ஜீவிக்கச் செய்கிறது. அதாவது பரமாத்மாவை லபிக்கும்படியும், அநுபவிக்கும்ப டியும், ஜீவாத்ம ஸ்வரூபஸத்தையைப் பெறும்படியும் செய்கிறது என்று தாத்பர்யம்.

இனி இதை விவரித்துக் கூறுகிறோம். இவ்விடத்தில் ப்ராண மப்தமானது பரமாத்மாவையும், ஜீவாத்மாவையும் சொல்லும். ஜீவாத்மாவிற்கும் ப்ராணன் பரமாத்மா. ★ஸர்வாணி ஹ வா இமாநி பூதாநி ப்ராணமேவ அபிஸம்விசந்தி★ (இந்த பூதங்கள் யாவும், ப்ராண மப்தத்தால் சொல்லப்படும் பரமாத்மாவையே அடைகின்றன). ★கோஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத்★ (ஆனந்தமயனான, ஆகாசமப்தவாச்யனான பரமாத்மா இல்லாவிடில் எவன்தான் ஸாம்ஸாரிக ஆபவர்கிக ஸுகத்தை அடைவான்? அதாவது-பரமாத்மாதான் மோக்ஷாந்தமான ஐச்வர்யத்தைக் கொடுத்து ரக்ஷிக்க வல்லவன். உச்வாஸ, நிச்வாஸரூபமான மூச்சுக்காற்றை விடச் செய்கிறவனும் அவனேயாம். ★ப்ராண: ப்ராணிநாம் ப்ராணஹேது: பரமாத்மா★ -அதாவது, ப்ராணிகள் ஜீவித்திருப்பதற்கு மூச்சுக்காற்றை விடுவதற்குக் காரணமாகயிருப்பவன் பரமாத்மாவாகையால் ப்ராண மப்தத்தால் பரமாத்மா சொல்லப்படுகிறான். ★ப்ராணஸ்ய ப்ராண:★ என்றும் ம்ருதி சொல்வதைக் காணலாம். ★ப்ராணஸ்து ப்ரணவே ஜீவே ஜீவிதே பரமாத்மநி★ என்றும் சொல்லப்படுகிறது. பூம வித்யையில் ★ப்ராணோ வா ஆசாயா பூயாந்★ என்று ப்ராண மப்தமானது ஜீவனைச் சொல்வதாக உள்ளது. ஆக இந்த ம்ருதிகள்-ப்ராண மப்தத்தால் பரமாத்மாவையும் ஜீவாத்மாவையும் சொல்லுகின்றன என்றதாயிற்று.

வ்யபகத:- என்பதை -வி-அப-கத-என்று மூன்றாகப் பிரித்துக்கொள்ளவேண்டும். அவற்றில் கத என்பதால் ஸம்ஸாராக்நியினால் தஹிக்கப்பட்டிருப்பதால் பரமாத்மாவை லபிக்காமல் இருக்கிறான்-அதாவது இழந்துவிட்டிருக்கிறான் என்றதாயிற்று. அபகத என்பதால், அதி தூரத்திலிருக்கிறான் அதாவது மாஸ்த்ரங்களில் பரமாத்மா மேஷி என்று சொல்லியிருந்தபோதிலும், வேத பாஹ்யர்களுடைய ஸஹவாஸத்தாலும் அவர்கள் சொல்லும் கூடயுக்திகளாலும் ★அஸத் ப்ரஹ்மா★ என்ற அறிவுடையவனாக இருக்கிறான் என்று அர்த்தம். வி-அபகத:-விசேஷதோ அபகத: இத்யர்த்த:. அதாவது பகவான் சேதநர்களை உஜ்ஜீவிக்கச் செய்யவேண்டுமென்று அவதரித்து அவர்களுக்குத் தன்னைக் காணும்படி செய்தபோதிலும், வ்யாவ்ருத்ததயா துர்தர்ம:- அவர்கள் காணமுடியாதபடி வெகு தூரத்திலிருக்கிறான் என்று அர்த்தம். அப என்னும் உபஸர்க்கத்தால், அநாதிகாலமாக ஜ்ஞான, தர்சன ப்ராப்திகளில் ஒன்றுகூட லபிக்காமலிருப்பதால் அலாபமும் பலவிதமாயிருக்கிறது என்பது சொன்னதாகிறது.

ஸஞ்ஜீவநீம்:- ஜீவநம்-உஜ்ஜீவநம்-ஸம்ஸாரத்திலிருந்து விடுவிக்கிறது. அதாவது, வாஸநா, ருசி, ப்ரக்ருதிஸம்பந்தத்தோடுகூட எல்லாவற்றையும் கழித்து உஜ்ஜீவிக்கச் செய்கிறது என்று அர்த்தம். ப்ராண மப்தமானது ஜீவனையும் குறிக்கும் என்றோம். ஸம் என்கிற உபஸர்கமில்லாமல், உஜ்ஜீவிக்கச் செய்கிறது என்று மட்டும் சொன்னால், ★'ஜீவ ப்ராண தாரணே'★ என்கிற தாதுவினால், ஜீவனை கைவல்யரூப புருஷார்த்தத்தைக் கொடுத்து உஜ்ஜீவிக்கச் செய்கிறதைச் சொன்னதாக ஆகும். அது இங்கு விவக்ஷிதமன்று. ஆகையால், ஸம் என்கிற உபஸர்கத்தைச் சேர்த்து ஸஞ்ஜீவநீம் என்று அருளிச்செய்தார். அதாவது கர்ம, வாஸனா, ருசி,

*ப்ரக்ருதி ஸம்பந்தங்களோடு எல்லாவற்றையும் போக்கி மோக்ஷத்தைக் கொடுத்து உஜ்ஜீவிக்கச் செய்கிறது என்று அர்த்தம்.*

**வ்யபகத: ப்ராணா:-நாஶிதாத்மஸத்தாகா:-** *நாசம் பண்ணப்பட்ட ஆத்ம ஸத்தயையுடையவர்கள். அவர்களுடைய ஆத்மாக்களை, ஸஞ்ஜீவநீம்-உஜ்ஜீவிக்கச் செய்கிறவைகள். அவித்யையினால் நாஶம் செய்யப்பட்ட, ஆத்ம ஸ்வரூபத்தை உடையவர்களுக்கு, வேதாந்தார்த்தம் அன்றோ, ஸ்வரூப ப்ராப்திக்குக் காரணமாகிறது. ஆத்மாக்கள் நித்யங்களாகையால் அவைகளுடைய ஸ்வரூபத்திற்கு நாஶமானது கிடையாது.* **★ப்ராணோ ஜ்ஞாநம்★** *என்று ந்யாய ஸுதர்சனத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.* **★தத்குண ஸாரத்வாத் தத்வ்யபதேச:★** *என்கிற ஸூத்ரப்படி ஜ்ஞாந ஶப்தம்-தர்மபூத ஜ்ஞாநத்தைக் குறிக்கிறது. கர்மாக்ய அவித்யயா - கர்மா என்று பெயருள்ள அவித்யையினால், தர்மபூத ஜ்ஞானத்திற்கு ஸங்கோசரூபமான நாஶமானது உண்டாகிறது. அதன் மூலமாக ஆத்மநாஶம் என்று சொல்லப்படுகிறது.*

**ஸுதாபி:-** *அம்ருதமும், வ்யபகதப்ராணத்வேந நஷ்ட ஸத்தாக தேஹ உஜ்ஜீவந ஹேது:-தேஹத்தின் உஜ்ஜீவநத்திற்குக் காரணமாகிறது. ஆகையால்தான் தேவர்களை அமரர்கள் என்கிறோம். அதாவது: வெகுகாலம் கழிந்தாலும் தேவர்களுடைய தேஹத்திற்கு நாஶம் உண்டாவதில்லையாகையால் அமரர்கள் என்கிறோம். எல்லோருடைய ஆத்மாக்களும் நித்யங்களாகையால் அவைகளுக்கு நாஶம் சொல்லுவது பொருந்தாது. ஆகையினால் அதன் மூலமாக அமரத்வம் சொல்லப்படவில்லை. தேஹ த்வாராதான் அமரத்வம் சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம்.*

**பூர்வாசார்ய ஸுரக்ஷிதாம்:-** *தம்முடைய க்ரந்தமானது ஓராண் ஒரு வழியாக ஸத்ஸம்ப்ரதாயமாக வந்த அர்த்தங்களுடையது என்பதைக் காட்டுகிறார். ஸுரக்ஷிதாம்-பூர்வாசார்யர்கள் தம்முடைய காலத்தில் தம்மை ஆச்ரயித்தவர்களுக்கு உபதேசித்தது ரக்ஷித்தது மாத்ரமின்றிக்கே பிற்காலத்தவர்களும் உஜ்ஜீவிக்கக் கருதி க்ரந்தங்களை அருளிச் செய்திருப்பதால் ஸுரக்ஷிதாம் என்று அருளிச் செய்தார். அம்ருதமும் அஸுராதி வ்யாகாதத்தினின்று தேவதைகளால் நன்றாக ரக்ஷிக்கப்பட்டதாக இருக்கிறது.*

**ஸ்வாமிந்!** *பூர்வாசார்ய க்ரந்தங்களால் வேதார்த்தம் நிர்ணயிக்கப்பட்டதாகில் உம்முடைய க்ரந்தத்தால் ஏற்படக்கூடிய ப்ரயோஜனம்தான் என்ன?-எனில்* **பஹுமதி வ்யாகாத தூரஸ்திதாம்** *என்று ஸமாதாநம் அருளிச்செய்கிறார். 'பஹ்வ்ய: மதய:-அநேகங்களான மதிகள்,அல்லது 'பஹுனாம் மதய: அநேகர்களுடைய மதிகள்-அவைகளுடைய பரஸ்பர, வ்யாகாதேந-அவைகள் ஒன்றுக்கொன்று முரண்பாடு உள்ளவைகளாக இருப்பதாலும் அவைகளால் ஸமீசீனமான-நல்ல அர்த்தம் நாஶம் செய்யப்பட்டதினாலும் அர்வாசீனர்களால், எவ்விதத்தினாலும் உள்ளே ப்ரவேசிக்க முடியாமையைக் கூறுகிறார்.* **தூரஸ்திதாம்** *என்று உள்ளபடி அறியாதது மட்டுமல்ல-விருத்தமாகவும் ப்ரதிபத்தி உண்டாகிவிட்டது என்று தாத்பர்யம். ஸூத்ரம் முதலான அவாந்தர விஷயத்திற்குத் தன் க்ரந்தம் விஷயீ-என்பதை*

முன்பு ஸ்பஷ்டமாகச் சொல்லவில்லை. ஆகையால் அதைக் கூறுகிறார். ஆநீதாம் என்று.

**நிஜாக்ஷரை:-** ஸூத்ராக்ஷரை:-ஸூத்ரங்களிலுள்ள அக்ஷரங்களைக் கொண்டு அர்த்தம் எழுதுகிறோம். அதாவது: ஸூத்ரங்களிலுள்ள ப்ரக்ருதி, ப்ரத்யயம் உபஸர்கம் இவைகளைக் கொண்டு அர்த்தம் எழுதப்படுகிறது. ஸூத்ரமானது வாக்யாத்மகமாகயிருப்பதால்-அதுவானது இதரர்களுக்கு நம்பிக்கை உண்டாவதற்காக ப்ரயோகிக்கப்பட்டிருப்பதால், ஸ்வரஸத:-எந்த அர்த்தம் சொன்னால் பொருத்தமாகயிருக்குமோ அந்த அர்த்ததைச் சொல்லுவதுதான் வக்தாவிற்கு அபிமதமாகும். நமக்குத் தோன்றியபடி-ஸூத்ரங்களுக்கு அநுகுணமில்லாத-வேறு அர்த்தங்களைச் சொல்லுவது யுக்தமாகாது. மித்யாவாதிகள் பண்ணியுள்ள அர்த்தமானது ஸூத்ரபதங்களுக்குப் பொருந்தாததாயிருக்கிறதென்பதை அவ்வப்போது விளக்கிக் காட்டுவதை, அவ்விடங்களில் விவரித்துக் கூறப்படும்.

**ஸுமநஸ: பௌமா:-** ஸாத்விக குணம் நிறைந்த ப்ராஹ்மணர்கள், **★ஏதேவை தேவா: ப்ரத்யக்ஷம் யத் ப்ராஹ்மணா:★** என்கிற ஶ்ருதியினால் ப்ராஹ்மணர்களுக்கு பூஸுரத்வம் ஸித்திக்கிறது. **அந்வஹம்**-அநுதினம்-தினந்தோறும். தெவிட்டாத ரஸமாகயிருப்பதால், ப்ரதிதினம் என்கிறார். அல்லது அதிகம்பீரமாக இருப்பதால் தினந்தோறும் பரிசயம் பண்ணவேண்டும் என்கிறார். மற்றபலன்களைக் காட்டிலும் பகவத் ப்ராப்தி உபாய ஏவ ஸ்வாதுதமம். **★க்வ நாகப்ருஷ்டஸ்ய கமநம் புநராவ்ருத்தி லக்ஷணம்। க்வ ஜபோ வாஸுதேவேதி முக்திபீஜமநுத்தமம்★** புநராவ்ருத்தி லக்ஷணமான-புநராவ்ருத்தியை ஸ்வபாவமாக உடையதான-ஸ்வர்கலோக ப்ராப்தி எங்கே? முக்திக்குச் சிறந்த வித்தாகச் சொல்லப்பட்ட வாஸுதேவ ஜபம் எங்கே? என்று ப்ரமாணம் கூறுவதைக் காணலாம். பாஷ்யகாரர் பரதுக்காஸஹிஷ்ணுவாகையாலே-பிறர் துக்கத்தைக் காண ஸஹிக்காதவராகையாலே, தினந்தோறும் இந்த அம்ருத பானத்தைப் பண்ணுங்கள் என்று ப்ரார்த்திப்பதாகவும் கொள்ளலாம். ஸுதாபி-அம்ருதமும்-நிஜாக்ஷரத்தால்-கொண்டு வரப்பட்டது. இங்கு நிஜாக்ஷர ஶப்தத்தால் வேதாக்ஷரம் சொல்லப்படுகிறது. நிஜஶப்த:-நித்யபர: இதிபாவ:- வேதமானது அபௌருஷேயமாகையால் நித்யத்வபாவம் ஸித்திக்கிறது. **★கத்ரூச்ச வை ஸுபர்ணீச★** என்கிற அநுவாகத்தில், காய்த்ரியினால் ஸோமமானது ஆஹரத் கொண்டு வரப்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. **★த்ருதீயஸ்யாமிதோ திவி ஸோம ஆஸீத் தம் காயத்ராயாஹரத்★** என்று மற்றொரு இடத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. காயத்ரி என்பது சந்தோரூப அக்ஷராத்மகம். அக்ஷரமயமான சந்தஸ். நநு இங்கு அம்ருதாஹரணத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்டு வரும் ஸமயத்தில், காயத்ரியினால் ஸோமமானது கொண்டு வரப்பட்டது என்று சொன்னதினால் என்ன சொன்னதாயிற்று? எனில், ஸோமமானது ஸுதா பர்யாயம். அதாவது ஸோமம் என்றாலும் ஸுதா என்றாலும் ஒன்றுதான். கருத்மானால் தன்னுடைய ;;ாயாரான வி;;ைதையின் தாஸித்வத்தைப் போக்குவதற்காக ஸ்வர்க லோகத்திலிருந்து பூலோகத்திற்கு அம்ருதம் கொண்டு வரப்பட்டதாக மஹாபாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. **★திவம் ஸுபர்ணோ கத்வா ஸோமமாஹரத்★** -என்பதால் ஸுபர்ணன் எனப்படும் கருத்மான் ஸோமத்தைக் கொண்டுவந்தான் என்று தெரிகிறது. ஆக காயத்ரியில்

ஸுபர்ண க்ருத்யத்தை ஆரோபணம் செய்து, ★காயத்ரியா ஸோமம் ஆஹரத்★ என்றது ஶ்ருதி. நிஜாக்ஷரை· என்பதற்கு இதுதான் அபிப்ரேதம். இப்பொழுது அந்வஹம் ஶப்தத்தால் ஒரு பகலை மட்டும் சொல்லுவதாகக் கொள்ளவேண்டும். யாகத்திலும் ப்ராஹ்மணர்கள் ஸோமபாநம் பண்ணுகிறார்கள் என்றதாயிற்று. இதனால் பாஷ்யகாரர், ஸ்ரீ பாஷ்யத்தை எழுத ஆரம்பித்த ஸமயத்தில் தம்முடைய இஷ்டம் ஸித்திப்பதற்காகத் தம்மை ஸுபர்ணனாக கருத்மானாக-எண்ணினார் என்று தெரிகிறது. ஸீதா பிராட்டியைத் தேடுவதற்காகச் சென்ற ஆஞ்ஜனேயர் ஸமுத்ரத்தைத் தாண்ட எண்ணிய போது ★ஸுபர்ணமிவ ச ஆத்மாநம் மேநே ஸ கபிகுஞ்சர:★ -தன்னை கருத்மானாக எண்ணினார்-யானை போன்ற பெருத்த சரீரத்தை உடைய அந்த ஹநுமார். சிறிய திருவடி ஸமுத்ரத்தை வேகமாகத் தாண்டுவதற்காகத் தன்னை கருத்மானாக நினைத்துக் கொண்டு மலையினின்று மேலே கிளம்பியது போல-ஸ்ரீ பாஷ்யகாரரும் தம்மிடத்தில் ஸுபர்ணனுடைய-கருத்மானுடைய க்ருத் யத்தை ஆரோபணம் பண்ணி நிஜாக்ஷரங்களால் அம்ருதத்தைக் கொண்டு வந்தார் என்று தாத்பர்யம்.

* * * *

அவ்விதமானால் புராதன ப்ராசீனமான க்ரந்தங்கள்தான் படிக்கத்தக்கவைகள். எதற்காக புதிதாக ஒரு க்ரந்தத்தை எழுத வேண்டும்? அதைப் ப்ரவர்த்திப்பதற்காக வும் ஏன் ச்ரமப்பட வேண்டும்? என்கிற ஶங்கை வர, அதற்கு ஸமாதானம் அருளிச் செய்கிறார் :—

**(भाष्यम्) भगवद्बोधायनकृतां विस्तीर्णां ब्रह्मसूत्रवृत्तिं पूर्वाचार्याः सञ्चिक्षिपुः; तन्मतानुसारेण सूत्राक्षराणि व्याख्यास्यन्ते ।**

**கருத்து** - பகவத் போதாயனர் செய்தருளிய மிகவும் விஸ்தரமான-பெரியதான-ப்ரஹ்ம ஸூத்ர வ்ருத்தியை பூர்வாசார்யர்கள் சுருக்கமாக அருளிச்செய்துள்ளார்கள். அவர்களுடைய மதத்தை அநுஸரித்து ஸூத்ரத்திலுள்ள அக்ஷரங்களுக்கு வ்யாக்யா னம் பண்ணுகிறோம் என்று அருளிச் செய்துள்ளார்

**விரிவுரை**- பகவத்போதாயனர் என்று சொன்னதினாலேயே போதாயனர் ஶங்கராதி களைக் காட்டிலும் ஆப்ததமர் என்று சொன்னதாயிற்று. விஸ்தீர்ணாம்-போதாயனர் அருளிச்செய்த ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திக்ரந்தமானது மிகவும் பெரியதாகயிருப்பதால் புத்தி ஶக்தியும் ஶரீர ஶக்தியும் ஆயுஸ்ஸும் பூர்ணமாகயில்லாத இதானீம்தன மனிதர்களுக்கு அந்தக்ரந்தம் அதிகரிக்க முடியாததாக-கஹனமாக இருக்கிறது. அதனால் ஆப்ததமர்களான நம் பூர்வாசார்யர்கள்-ப்ரஹ்மநந்த்யாதிகள்-பரபக்ஷப்ரதிக்ஷேபமின்றிக்கே பிற மதத்தை நிரஸனம் பண்ணாமல் நம் ஸித்தாந்தத் தின் அர்த்தத்தை மட்டும் சுருக்கமாக வ்யாக்யானம் பண்ணியுள்ளார்கள். இக்க்ரந்தங்களும் கஹனமாகயிருப்பதால் ஆதுநிகர்களுக்குப் பயனளிப்பதாக இல்லை. அதாவது புத்திசக்தி மிகக்குறைந்தவர்களுக்கு அபேக்ஷித விஸ்தாரங்களில் லாமல் எழுதினால், அவை இவர்களால் தெரிந்து கொள்ளமுடிகிறதில்லை.

ஆகையால் அநபேக்ஷித விஸ்தாரமும் அபேக்ஷித ஸங்கோசமும் இல்லாமல் இந்த க்ரந்தத்தை, பூர்வாசார்யர்களின் மதத்தை-அபிப்ராயத்தை-ஸித்தாந்தத்தை அநுஸரித்து ஸூத்ரங்களுடைய அக்ஷரங்களுக்கு வ்யாக்யானம் செய்கிறோம்.- **ஸூத்ராக்ஷராணிவ்யாக்யாஸ்யந்தே. அக்லேஶம் அபிப்ரேத்ய அக்ஷரஶப்த:.** அதாவது அனாயாஸமாக-ப்ரக்ருதி ப்ரத்யயங்களுக்கு அர்த்தம் சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். இதனால் **ஸூத்ராணி யதாஸம்பவம் த்ரஷ்டவ்யாநி** -என்று பிறருடைய உக்தியானது திரஸ்கரிக்கப்பட்டதாகிறது. அக்ஷரார்த்தத்தைச் சொல்லுகிறேன்- ஸூத்ரத்தின் தாத்பர்யம் மொத்தத்தையும் என்னால் துர்வசம்-சொல்லமுடியாது என்றும் அர்த்தம் கொள்ளலாம். அக்ஷரங்களுக்கு ஶக்தியினால் சொல்லக்கூடிய அர்த்தத்தை தவிர்த்து அதிரிக்தமான ஸ்போடவாதத்தைக் கற்பிக்கிறேனல்லேன் என்றும் சொன்னதாக த்வனிக்கிறது. ஆகையால் தம்முடைய க்ரந்தம் பயனுள்ள தாகிறது.

# ओं अथातो ब्रह्मजिज्ञासा (1-1-1)

## अत्र अयम् 'अथ' शब्दः आनन्तर्ये भवति । 'अतः' शब्दः वृत्तस्य हेतुभावे ।

**கருத்து**-अथ - அநந்தரம்-பிறகு-கர்ம விசாரத்திற்குப் பிறகு, ப்ரஹ்ம விஷயத்தில் இச்சை பண்ணவேண்டும் என்று ஸூத்ரத்தின் அர்த்தம்.

இந்த ஸூத்ரத்திலுள்ள अथ ஶப்தமானது கர்மவிசாரத்திற்குப் பிறகு என்கிற அர்த்தத்தைத் தெரிவிக்கிறது. अत: ஶப்தமானது முன்பு செய்யப்பட்ட கர்மவிசாரத் திற்கு ஹேத்வர்த்தத்தைக் காட்டுகிறது. அதாவது கர்மவிசாரம் பண்ணியதால், ப்ரஹ்ம விசாரத்தில் இச்சை பண்ணவேண்டும் என்று அர்த்தம்.

**(விரிவுரை)**-पदच्छेद: पदार्थोक्ति: विग्रहो वाक्ययोजना । आक्षेपस्य समाधानं व्याख्यानं पञ्च लक्षणम् ॥

ஒரு க்ரந்தத்திற்கு வ்யாக்யானம் பண்ணும்போது பதங்களைப் பிரித்துக் காட்டவேண்டும். அந்த பதங்களின் அர்த்தத்தைக் கூறவேண்டும். ஸமஸ்தமான பதங்களுக்கு விக்ரஹத்தைச் சொல்லி அர்த்தத்தைத் தெளிவிக்க வேண்டும். பதங்களுக்கு அந்வயத்தைச் சொல்லவேண்டும். அங்கு ஏற்படும் ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் கூறவேண்டும். ஆக இவ்வைந்து லக்ஷணங்களைக் கொண்டது வ்யாக்யானம் என்றதாயிற்று. இந்நியமத்தையநுஸரித்து ஸூத்ரத்திலுள்ள பதங்க ளுக்கு அர்த்தத்தைச் சொல்லப் போகிறவராய்க் கொண்டு முதலில் ஸூத்ரத்திலுள்ள अथ अत: ஶப்தங்களுக்கு, அர்த்தத்தை அருளிச் செய்கிறார்- **★அத்ர அயம் अथ ஶப்த: ஆநந்தர்யே பவதி**-என்று. अथ ஶப்தமானது ஆநந்தர்யார்த்தத்தில் சொல்லப்பட்டுள்ளது என்று ப்ரதிஜ்ஞை, அதை உபபாதிப்பதாக உள்ளன-அத்ர, அயம், பவதி', என்கிற மூன்று பதங்கள். அவற்றினுள், பவதி என்கிற பதத்தால் ஆநந்தர்யார்த்தம் சொல்லுவதில் ஸ்வாரஸ்யமிருப்பதாக ஸூசிக்கப்படுகிறது.

**நநு**-अथ, अत: ஶப்தங்களுக்கு வ்யாக்யானம் பண்ண வேண்டியதில்லை, அஜ்ஞானம், ஸம்சயம், விபர்யயம்-விபரீத நிச்சயம் இவைகளை நிவர்த்திப்பதற் கன்றோ-போக்குவதற்கல்லவோ வ்யாக்யானம் பண்ணப்படுகிறது, अथ ஶப்தத்திற்கு

ஆநந்தர்யார்த்தமும்-பிறகு என்னும் அர்த்தமும் अत: ப்ரக்ருதத்தினுடைய ஹேது பாவார்த்தமும்-ஆகையால் என்னும் அர்த்தமும் ப்ரஸித்தமாகையால்-எல்லோருக்கும் தெரிந்ததாகையால், இவைகளுக்கு, அர்த்தத்தைத் தெரிவிக்கவேண்டிய அவசிய மில்லை; ப்ரயோஜநாபாவாத். தெரியாத பதங்களுக்கல்லவா அர்த்தம் கூற வேண்டும். இவ்விஷயத்தில் அஜ்ஞாநம் இல்லை. ந அஜ்ஞாநம், நாபிஸம்ஶய:- ★'அவ்யவஸ்தித வ்யவஹார காரணம் ஜ்ஞானம் ஸம்ஶய: ★ (நிஷ்கர்ஷித்துக் கூறமுடியாத-இயலாத-வ்யவஹாரத்திற்குக் காரணமாயிருக்கும் ஜ்ஞாநம் ஸம்ஶயம்) எனப்படுகிறது.

अथ, अत: பதங்களுக்கு, அநேகார்த்தங்கள் இருந்தபோதிலும் ஆநந்தர்யார்த்தத்தி லும், ஹேதுபாவார்த்தத்திலும், ப்ரஸித்திப்ராசுர்யமிருப்பதால், ஸம்சயம் உண்டாவ தற்கு பரஸக்தியேயில்லை. கோ ஶப்தத்தைக் கேட்டதும், ஸாஸ்நாதிமத்தான கோ வ்யக்தியினிடத்தில் ஸம்ஶயம் உண்டாவதில்லையே? கோ ஶப்தத்திற்கு ஸாஸ்நாதிமத்தான வ்யக்தியில் ப்ரஸித்தி அதிகமாகயிருப்பதால். ஆகையாலேயே விபர்யயம் உண்டாவதற்குப் ப்ரஸக்தியில்லை. ★அயதா வ்யவஹார காரணம் ஜ்ஞானமன்றோ விபர்யயம்★ எனப்படுகிறது. ஆதலால், யாதொரு ப்ரயோஜனமுமின் றிக்கே, இப்பதங்களுக்கு அர்த்தம் சொல்லவேண்டியதில்லை. மேலும், ப்ரஸித்திப் ப்ராசுர்யத்தைக் கொண்டு அர்த்தம் சொல்வதாயிருந்தாலும், கீழே நடந்தவை எது என்று தெரியாததனால், ஆநந்தர்யார்த்தம் சொல்வது உசிதமாகாது. अथ ஶப்தஸ்ய ப்ரஸித்தார்த்தப் ப்ரதிபாதகத்வ அவசியம் பாவித்வேநாபி வ்ருத்த அதர்சநாதிபி: ஆநந்தர்யார்த்தத்வம் ந வித்யதே இதி பூர்வபக்ஷிணா ஆக்ஷிப்யதே இதி.

அத்ர ப்ரூம:-இந்த ஆக்ஷேபத்திற்கு ஸமாதாநம் கூறப்படுகிறது. अथ ஶப்தத்திற்கு, அதிகாரம், மங்களம் முதலான அர்த்தங்களில் ப்ரயோகமிருப்பதாலும், ஏதத் ஶப்தத்திற்கு ஏதுக்தம் பவதி இது முதலானவைகளில் வக்ஷ்யமான-பிறகு சொல்லப்போகும் அர்த்தத்திலும், ★'தஸேச்ச ஸர்வ விபக்திவாசிந: இத: இத்யாதிஷு பஞ்சம்யர்த்தவ்யதிரிக்தே அர்த்தே ச-★ ஐந்தாவது வேற்றுமையிலும் மற்ற விபக்திகளிலும்-ப்ரயோகமிருப்பதாலும், ஸம்சயம், விபர்யயம் வரக்கூடுமாகை யால் அதை நிரஸிப்பதற்காக अथात: ஶப்தங்களுக்கு வ்யாக்யானம் பண்ணியது உசிதமேயாகும்.

ப்ரஸித்திப் ப்ராசுர்யத்தைக் கொண்டு இவ்வர்த்தம் சொல்லுவதாகயிருந்தாலும், பூர்வவ்ருத்தம் எது என்று தெரியாமலிருக்கும்போது अथ ஶப்தத்திற்கு ஆநந்தர்யார்த் தம் சொல்லவொண்ணாது என்கிற ஆக்ஷேபத்திற்கு பரிஹாரம் அருளிச் செய்கிறார் 'அத்ர' என்பதால்.

அத்ர-வேதத்தின் உத்தரபாக விசாரரூபமான ப்ரஹ்ம மீமாம்ஸா ஆரம்ப ஸூத்ரத்தில் என்று அர்த்தம். ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா பத ஸாமர்த்யத்தால் பூர்வபாகத்தின் விசாரரூப வ்ருத்த விசேஷமானது ஆக்ஷிப்தமாகிறது-என்று அபிப்ராயம். மற்றொரு காரணத்தைக் காட்டுகிறார். அயம் என்று.

அயம் अथ ஶப்த: अत: ஶப்த ஶிரஸ்கம் இத்யுக்தம் பவதி. அதாவது-அத: ஶப்தத்திற்கு முன்புள்ள अथ ஶப்தத்திற்கு, ஆநந்தர்யார்த்தத்தைச் சொல்லுகிறோம் என்று சொன்னதாயிற்று. வேதாந்த ஸாரத்தில் ★அத: ஶப்த ஶிரஸ்கம்★ என்றே அர்த்தம் அருளிச் செய்துள்ளார்.

அத:- ப்ரக்ருதத்தைப் பராமர்சிக்கிற அத: ஶப்தத்தால், பூர்வவ்ருத்தமானதெல்லாம், அபிஹிதம்-சொல்லப்பட்டதாகிறது என்று கருத்து. இவ்விதமாக, அத:, ப்ரஹ்மஜிஜ் ஞாஸா என்கிற பதங்களோடு சேர்ந்திருக்கிற अथ ஶப்தத்திற்கு உபயபத-இரண்டு பதங்களுடைய சேர்க்கையின் ஸ்வாரஸ்யத்தால் ஸாமாந்யத: அபிஹிதம், விசேஷத: ஆக்ஷிப்தமுமான-பூர்வவ்ருத்தம் ஸித்திக்கிறது. ஆகையால் வ்ருத்த விசேஷமானது, இங்குள்ள பதங்களால் தெரியவில்லை என்பதால், अथ ஶப்தத்திற்கு ஆநந்தர்யார்த்தம் சொல்லுவதில் உண்டாகும் ஸ்வாரஸ்யத்திற்கு அபவாதகமாகாது. ஆதலால் अथ ஶப்தமானது ஆநந்தர்யார்த்தத்தில் படிக்கப்பட்டிருக்கிறது என்று பலிதம். இவ்விதம் अथ ஶப்தமானது. உத்தரபாக விசார ஆரம்ப ஸூத்ராந்தர்கதமாக இருப்பதாலும், अत: ஶப்த ஶிரஸ்கமாகயிருப்பதாலும், ஆநந்தர்யார்த்தத்தில் ஸ்வாரஸ்யம் உள்ளதாகக் காண்பிக்கப்பட்ட ஆநந்தர்யார்த்த, உபபாதகங்களான, அத்ர-அயம்-பவதி என்கிற பதங்களாலேயே இந்த முதல் ஸூத்ரத்தில் அர்த்தாந்தரங்களும்-வேறு வழியில்லாமல் ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிருக்கிறது என்பதும் அநாதரிகத்தக்கதா கிறது.-அநாதரணீயத்வம் பலிதம்.

अथ ஶப்தமானது,- ★மங்கள, அநந்தர, ஆரம்ப, கார்த்ஸ்ந்யே அதோ अथ★ இதி அமர:- மங்கள, அநந்தரா, ஆரம்ப, கார்த்ஸ்ந்யேஷு என்று அமரத்தில் படிக்கப்பட்டு உள்ளன. இங்குள்ள अथ ஶப்தமானது மங்களகரமானது என்கிற அர்த்தத்தைச் சொல்லுவதாகச் சொல்லுவதற்கில்லை. ஏனென்றால், ப்ரஹ்மஜிஜ் ஞாஸை, மங்களரூபமானது என்று சொன்னதாகும். இதனால் ப்ரஹ்மஜிஜ்ஞா ஸையை ஸ்தோத்ரம் பண்ணியது போலாகும். அதனால் ஸூத்ரம் அர்த்தவாதம் னெப்படும். ஸூத்ரங்கள் ந்யாயத்தைப் போதிக்கின்றன என்கிற அர்த்தம் ஸித்திக்காது. ஜிஜ்ஞாஸா பதத்திற்கு இதை விசேஷணமாகக் கொள்ளாவிடில், மங்களம் பவதி என்று வாக்யபேதம் ஏற்படும். 'ஆகையால் अथ ஶப்தத்திற்கு, இங்கு மங்களார்த்தம் சொல்லுவது உசிதமில்லை.

अथ ஶப்தத்திற்கு கார்த்ஸ்ந்யார்த்தம்-முழுமையும் என்று அர்த்தம் கொண்டால், ப்ரஹ்மஜிஜ்ஞாஸையானது முழுவதும் செய்யத் தகுந்தது என்று அர்த்தம் ஏற்படும். இவ்விதம் அர்த்தம் சொல்வதும் பொருந்தாது. இதில் ஏகதேசம் செய்ய வேண்டுமா-முழுமையாகச் செய்ய வேண்டுமா என்கிற ஸந்தேகம் வரவில்லையே? ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா பண்ணவேண்டுமா? வேண்டாமா? என்றுதானே ஸந்தேஹிக்கப் படுகிறது. ஆகையால் கார்த்ஸ்ந்யார்த்தமும் பொருந்தாது. अथ ஶப்தமானது ஆரம்ப ஸூத்ரத்தைக் குறிக்கிறது என்றும் சொல்வதற்கில்லை. अत: ஶப்தத்தோடு சேர்ந்த अथ ஶப்தத்திற்கு இவ்வித அர்த்தங்கள் பொருந்தா. अथ ஶப்தாநுஶாஸநம், अथ யோகாநுஶாஸநம் என்னும் இடங்களில் அகத்யா -வேறு வழியில்லாமல்

ஆரம்பார்த்தம் ஆச்ரயிக்கப்பட்டது. இங்குள்ள अथ ஶப்தமானது अत: ஶப்தத்தோடு சேர்ந்திருப்பதால் अथ ஶப்தாநுசாஸநம், अथ யோகாநுஸாஸநம் என்ற ஸூத்ரங்களிலுள்ள अथ ஶப்தத்திற்குச் சொல்லப்பட்ட அர்த்தத்திற்கு மாறாக-வேறான அர்த்தத்தைச் சொல்லுகிறது என்று தாத்பர்யம்.

'அத: ஶப்த: வ்ருத்தஸ்ய ஹேது பாவே என்று தொடங்கி अत: ஶப்தத்திற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்.

**வ்ருத்தஸ்ய**-முன்பு நடைபெற்றது ஹேதுவாகக் கொள்ளத்தக்கது என்று சொல்லப்பட்டது. வ்ருத்தஸ்ய என்பதால் ப்ரக்ருதியின் அர்த்தம் சொல்லப்பட்டது. ஹேது பாவே என்று ப்ரத்யயத்தின் அர்த்தம். வ்ருத்தஸ்ய ஹேதுபாவே என்று ப்ரதிஜ்ஞை. இவ்விடத்திலும் முன்பு சொல்லப்பட்ட, **அத்ர, அயம், பவதி** என்ற மூன்று பதங்களும் இதற்கு உபபாதகங்களாக ஆகின்றன. ப்ரக்ருதி, ப்ரத்யயங்களுக்கு இவ்விதமாக அர்த்தம் சொல்லுவதானது, ப்ரஸித்திப் ப்ராசுர்யமிருப்பதாக பவதி என்பதால் காட்டப்பட்டது. **அத்ர** என்பதற்கு முன்போலவே அர்த்தம் கொள்ள வேண்டும். இதனால் வ்ருத்த விசேஷமும் அது ஹேதுவாகிறது என்பதும் ஆக்ஷேபத்தால் கிடைக்கிறது. **அயம்**- ஆநந்தர்யார்த்தத்தையுடைய अथ ஶப்தத்தை முன்னால் உடையது. இதனால் வ்ருத்த ஸாமாந்யம் ஆக்ஷிப்தமாகிறது.

ஸ்வாமிந்! अथ ஶப்தத்தின் அர்த்த நிர்ணயமானது अत: ஶப்தத்தின் அர்த்த நிர்ணய ஸாபேக்ஷமாகவே- எதிர்பார்த்தே செய்யவேண்டி இருக்கிறது. अत: ஶப்தத்தின் அர்த்தநிர்ணயமானது अथ ஶப்தத்தின் அர்த்த நிர்ணய ஸாபேக்ஷமாகவே பண்ணப்படுகிறது. ஆகையால் அந்யோந்யாச்ரயம்-ஒன்றை ஒன்று சார்ந்திருக்கிறது-என்கிற தோஷம் வருகிறது.

**பரிஹாரம்**-இவ்விதமாக தோஷம் சொல்வதற்கில்லை. अथ ஶப்தத்திற்கு ஆநந்தர்யார்த்தத்தில் ஸ்வாரஸ்யமிருப்பதானது अत: ஶப்தத்தின் அர்த்த நிர்ணய ஸாபேக்ஷமில்லை. இவ்விதமே अत: ஶப்தத்தின் வ்ருத்த ஹேதுபாவபரத்வ ஸாமர்த்யமானதும் अथ ஶப்தார்த்த நிர்ணய ஸாபேக்ஷமாகிறதில்லை. अथ ஶப்தத்திற்கு ஆநந்தர்யார்த்தமானது. அப்பதத்தின் ஸ்வாரஸ்யத்தாலும், अत: ஶப்தத்தோடு சேர்ந்திருக்கிற ஸமபிவ்யாஹ்ருத ஸ்வாரஸ்யத்தாலும் சொல்லப்படுகிறது.

**நநு**-अथ, अत: -ஶப்தங்களில்-இரண்டில் ஒன்று இருந்தால் போதும் ஏகாகாரப்ரதீதியிருப்பதால். अथ ஶப்தமானது, பூர்வமீமாம்ஸா விசாராநந்தரம் என்று கூறுகிறது. अत: -ஶப்தமும், பூர்வமீமாம்ஸா விசாரம் செய்ததால்-என்று கூறுகிறது. ஆகையால் அநேகமாக இரண்டு பதங்களும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுவதால், இரண்டு பதங்களில் ஏதாவது ஒன்று இருந்தாலே போதும் என்கிற ஶங்கை உண்டாகிறது. அதாவது, **பூதலே கட:, கடவத் பூதலம்**- என்றவிடத்தில்போல்-ப்ரயோஜனமானது ஒன்றாக இருப்பதால் என்று தாத்பர்யம்.

**பரிஹாரம்**-அநந்தர காலத்தைத் தெரிவிக்கிற **அத** ஶப்தமானது மேலே வர்த்திஷ்யமாண-சொல்லப்போகிற ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா ஶப்தத்திற்கு விசேஷணமா கயிருக்கிறது. **அத:** ஶப்தமானது கீழே நடந்த கர்ம ஜிஜ்ஞாஸையை ஹேதுவாகக் காட்டுகிறது. ஆகையால் ஏகாகாரப் ப்ரதீதி உண்டுபண்ணுவதாகச் சொல்வதற் கில்லை இவைகள் பர்யாயங்கள் இல்லாததால்-ஒரே அர்த்தத்தை உடையவைகள் அல்லாததால்-இரண்டில் ஒன்று போதுமென்று சொல்வதற்கில்லை. மேலும், **ப்ரதிஜ்ஞா ஹேதுரூபேண**, இப்பதங்கள் வெவ்வேறு ப்ரயோஜனத்தை உடையவைக ளாகவும் இருக்கின்றன. **ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா கர்த்தவ்யா** என்றல்லவோ ப்ரதிஜ்ஞை என்று எண்ணவேண்டாம். ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா என்று தர்மியை சொல்லுகிறது. அத என்பது ஸாத்யத்தைச் சொல்லுகிறது. கர்தவ்யதாமாத்ரம் ஸாத்யமில்லை. அபிது-★**ஆநந்தர்யத்வ விசிஷ்ட கர்தவ்யத்வம் ஸாத்யதர்மம்**.★ ஆகிறது. இவ்வித மாக **அத, அத:** ஶப்தங்களுக்கு ப்ரதிஜ்ஞா ஹேதுத்வேந விபாகம் உள்ளது. அதாவது ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா கர்தவ்யா-செய்யத் தகுந்தது என்று ப்ரதிஜ்ஞா வாக்யம். கர்மவிசாரம் முன்பு நடந்திருப்பதால் என்று ஹேது வாக்யம். ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா கர்தவ்யா- கர்மவிசாரஸ்ய பூர்வ வ்ருத்தத்வாத் என்று சொல்ல வேண்டும்.

**நநு**- ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸாபத ஸாமர்த்யத்தால் ஆக்ஷிப்த மானதால், புத்திஸ்தமான கர்மவிசாரத்திற்கு, ஹேது பாவமானது அத: ஶப்தத்தாலேயே தெரிகிறது. ஆகையால் **அத** ஶப்தத்தை எதற்குப் ப்ரயோகிக்க வேண்டும்?

**பரிஹாரம்**-இவ்விதம் சொல்லக்கூடாது. **அத** ஶப்தத்திற்கு ஆநந்தர்யார்த்தத்தைச் சொன்னதினால் வ்ருத்தமான கர்மவிசாரரூப ஹேதுவிற்கு, வேறு ஶாஸ்த்ர, ஶ்ரவண வ்யவதான நைரபேக்ஷ்யத்தை த்யோதிப்பிக்கிறது. இதனால் வேதாந்த ஶ்ரவணத்திற்கு முன்பு ஶாஸ்த்தாந்தர ஶ்ரவணம் பண்ணாமல், வேதாந்த ஶாஸ்த்ரத்தை அதிகரிக்க முடியாதாகையால், அவைகளுக்கு இப்பொழுது தேவையில்லாமல் இருப்பதால், இங்கு வேறு ஶாஸ்த்ரங்களை பூர்வ வ்ருத்தமாக ஏற்றுக்கொள்ள வேண்டியதில்லை. நித்யா நித்ய வஸ்து விவேகாதி ஸாதந சதுஷ்டயம் பூர்வ வ்ருத்தம் என்று சொல்லும் ஶாஸ்த்ராந்தரங்கள் இதனால் நிரஸிக்கப்படவேண்டும் என்றும் தெரிகிறது.

**நநு**-கீழே நடைபெற்ற எதாவது ஒன்றை பூர்வ வ்ருத்தமாகச் சொல்லக் கூடாது. அதிப்ரஸங்கம்வரும். அதாவது அலக்ஷ்யத்தில் லக்ஷணம் இருப்பதாகும். அல்லது நியமம் தவறிவிட்டதாகும். ஆகையால் இனி சொல்லப்போகிற ப்ரஹ்ம விசாரத்திற்கு எந்த பூர்வவ்ருத்தமானது உபயோகமாக யிருக்கிறதோ அதுதான் அத ஶப்தத்தால் சொல்லப் படுகிறது. அதற்கு ஶாஸ்த்ராந்தர, ஶ்ரவண நைரபேக்ஷ்யம்போல், ஹேதுத்வமும் அந்த வஸ்து ஸாமர்த்யத்தாலேயே ஸித்திக்கை யால் **அத:** ஶப்தத்தால் என்ன ப்ரயோஜனம்? **அத:** ஶப்தத்தைப் ப்ரயோகிக்க வேண்டாமே என்கிற ஆக்ஷேபம்-வருகிறது.

**பரிஹாரம்**-அத: ஶப்தமானது அத ஶப்தத்தால் ஆக்ஷேபிக்கப் பட்டுள்ள ஹேதுவின் அஸித்தி ஶங்கையை பரிஹரிப்பதற்கு மிகவும் அவஶ்யமானது.

அதஶப்தாக்ஷிப்த ஹேதுத்வம் என்று சொன்னது ஹேதுத்வார்ஹஸ்யைவ-ஹேதுவாக ஆவதற்குத்தகுந்ததற்கே ஆநந்தர்யப்ரதியோகியாக அத ஶப்தத்தால் ஆக்ஷேபிக்கப்படு கிறது. ஹேதுத்வமும் அதஶப்தாக்ஷிப்தமாகிறதில்லை. ஹேதுவும் விசிஷ்டமாகயிருக் கிறது. அதாவது-வ்ருத்தஸ்ய கர்ம விசாரஸ்ய அல்பாஸ்திர பலத்வாத் என்று விஶிஷ்ட ஹேதுவின் ஸ்வரூபம்- ஆகையால் இந்த அத, அத: ஶப்தங்களிரண்டும் மிகவும் ப்ரயோஜனமுள்ளவை.

* * *

(भाष्यम्) अधीतसाङ्गसशिरस्कवेदस्य अधिगताल्पास्थिरफलकेवलकर्मज्ञानतया सञ्जातमोक्षाभिलाषस्य अनन्तस्थिरफल ब्रह्मजिज्ञासा ह्यनन्तरभाविनी।

**கருத்து**-வ்யாகரணம் நிருக்தம் முதலான அங்கங்களோடும் ஶ்ருதி ஶிரஸ் எனப்படும் உபநிஷத்தோடும் வேதத்தை அத்யயநம் செய்ததாலுண்டான ஆபாத ப்ரதீதியினால் முதலில் கர்ம விசாரத்தைப் பண்ணி கேவல கர்மாக்கள் அல்பமாகவும் அஸ்திரமாகவும்-நஶ்வரமாகவும் உள்ள பலனையே கொடுக்கவல்லன என்பதை அறிந்து மோக்ஷத்தை அடையவேண்டுமென்கிற அபிலாஷை-இச்சை பிறந்திருக்கிறவ னுக்கு அநந்தமாயும், ஸ்திரமாயும்-நாஶமற்றதாயும் உள்ள பலரூபமான ப்ரஹ்மத்தை அறியவேண்டு மென்கிற இச்சையன்றோ அநந்தரபாவிநீ-பிறகு உண்டாகத்தக்க தாகிறது.

**விரிவுரை**-அத்ர என்கிற பதத்தினுல் ஸூசித ப்ரஹ்மஜிஜ்ஞாஸாபத ஸாமர்த்யத் தால் ஸித்தமான, வ்ருத்த வர்த்திஷ்யமாண-நடந்த, நடக்கப்போகிறவைகளையும், அவைகளுக்கு ஹேது, ஹேதுமத் பாவங்களையும் விவரித்துக் கூறப்போகிறவராய்க் கொண்டு, கீழே கூறிய ஆநந்தர்யத்தை உபபாதிக்கிருர் **அதீத** என்ற வாக்யத்தால். கர்ம ஜ்ஞான ஶப்தங்களினுல் கீழ் நடந்ததைக் குறிப்பிட்டார். ப்ரஹ்மஜிஜ்ஞாஸா பதத்தால், மேலே கூறப்போவதைக் குறிப்பிட்டார். **அல்பாஸ்திரபல அநந்த ஸ்திரபல** ஶப்தங்களால் ஹேது ஹேதுமத்பாவம் காட்டப்படுகிறது. கேவல கர்மஜ்ஞாநஸ்ய என்கிற இடத்திலுள்ள கேவல ஶப்தத்தாலே ப்ரஹ்மஜ்ஞான ஸம்பந்தமற்ற கர்மமாத்ரத்தைச் சொல்லுகிறது.

**ஸ்வாமிந்!** கர்மஜ்ஞானத்துக்கே பூர்வ வ்ருத்தத்வம்-கர்மஜ்ஞான விசாரமானதே முன்பு நடைபெற்றதாக எதனுல் சொல்லுகிறீர்? அநந்தஸ்திரபல ஆபாதப்ரதீதியானது உண்டாவதற்குத்தான் காரணம் என்ன என்கிற கேள்வி எழ, **அதீத் இத்யாதி** பதங்களினுல் காரணத்தை அருளிச்செய்கிருர். ஸஶிரஸ்கவேதஶப்தத்தால், உபநிஷத் உள்பட வேதம் பூராவையும் அத்யயநம் பண்ணவேண்டுமென்று விதித்ததாகிறது. வ்யாக்யேயமான,-வ்யாக்யானம் பண்ணத்தக்கவையான வேத பாகமானது இரண் டாக இருப்பதால், முதல் பாகத்திற்கு முதலிலும், இரண்டாவது பாகமான ஶ்ருதிஶிரஸ் எனப்படும் உபநிஷத்திற்கு பிறகும் வ்யாக்யாநம் செய்யவேண்டியதா கிறது. வேதத்தின் பூர்வபாகத்தின் வ்யாக்யாநத்தை பூர்வமீமாம்ஸை என்றும்

உத்தரபாகத்தின் வ்யாக்யாநத்தை உத்தரமீமாம்ஸை என்றும் சொல்லுகிறார்கள். இதனால் இரண்டுபாகமும் சேர்ந்து ஒரே ப்ரபந்தம் என்பதும் ஸூசிதமாகிறது.

**ஸாங்க ஶப்தேந**-அங்கத்தோடு கூடிய என்கிற ஶப்தத்தினால் அநந்த ஸ்திரபல ஆபாதப்ரதீதி உண்டாவதற்குக் காரணம் காட்டப்பட்டது. ஆபாதப்ரதீதி என்பது மேலேழுந்தவாரியாக உண்டாகும் ஜ்ஞானம். அதாவது நிச்சயமில்லாத ஸம்ஶய விபர்யயங்களோடு கூடிய ஜ்ஞானம்.

कृष्णपक्षे तथाङ्गानि उपनीयतु यः शिष्य वेदमध्यापयेत् द्विजः सकल्प सरहस्य च त आचार्य प्रचक्षते।

(க்ருஷ்ணபக்ஷத்தில் வேதாங்கங்களைப் படிக்கவேண்டும். எந்த ப்ராஹ்மணன் உபநயநத்தைப் பண்ணிவைத்து, வேதத்தையும் கல்பஸூத்ரத்தையும் மந்த்ரங்களையும் உபதேசிக்கிறானோ அவன்தான் ஆசார்யன் எனப்படுகிறான். இத்யாதி வசனங்கள் 'அதீதஸாங்கஸஶிரஶ்கவேதஸ்ய' என்கிற இடத்தில் அபிப்ரேதங்கள்.

இவ்விதமாக **அதீத** என்று ஆரம்பித்து **ஸாங்கஸஶிரஸ்கவேதஸ்ய-ஸஞ்ஜாத மோக்ஷாபிலாஷஸ்ய** -என்னும் ஷஷ்ட்யந்த விசேஷணங்கள் இரண்டினால், ப்ரஹ்மஜிஜ்ஞாஸாபதஸாமர்த்யத்தால் அநுக்ருஹீதமான अथ, अतः ஶப்தங்களால் ஏற்படுத்தப்பட்டுள்ள, அதிகாரி விசேஷமானது காண்பிக்கபட்டதாகிறது. அதாவது கர்மவிசாரத்தைப் பண்ணி கர்மாவைப் பற்றி நன்கு அறிந்தவனும் ஸாம்ஸாரிக பலனில் நிர்வேதம் உள்ளவனும், அநந்தஸ்திரபலமான மோக்ஷத்தில் விருப்ப முடையவனும் இந்த ஶாஸ்த்ரத்தை அதிகரிப்பதற்கு-அப்யஸிப்பதற்கு அதிகாரி என்றதாயிற்று.

**அதிகத அல்பாஸ்திரபல ஜ்ஞாநஸ்ய**. அதிகதம்-ப்ராப்தம், அல்பாஸ்திரபலம்-**கேவல கர்ம இதி ஜ்ஞாநம் யஸ்ய ஸ:** அதிகத அல்பாஸ்திர பல கேவல கர்ம ஜ்ஞாந:- தஸ்ய-கேவல கர்மாவானது அல்பாஸ்திரபலம் என்கிற ஜ்ஞானம் எவனுக்கு இருக்கிறதோ அவன் அல்பாஸ்திர கேவல கர்மஜ்ஞானவான்-என்று தாத்பர்யம். கர்ம ஜ்ஞாநஸ்ய பலஸம்பந்தமானது அநுஷ்டாநத்வாரா ஏற்படுகிறது.

**அநந்த ஸ்திர பல ப்ரஹ்மஜிஜ்ஞாஸா-அநந்த ஸ்திர பல ரூபஸ்ய ப்ரஹ்மண: ஜிஜ்ஞாஸா இத்யர்த்த:** அளவற்றதாயும், ஸ்திரமாயும் பலமாயும் உள்ள ப்ரஹ்மத்தை அறிய வேண்டுமென்கிற விருப்பம் என்று அர்த்தம்.

**அநந்தர பாவிநீ**-என்னும் பதத்தினால் अथ अत· ஶப்தங்களால் பலிதமான ஹேதுவானது ஶாஸ்த்ராந்தர நிரபேக்ஷமாக ஹேதுவாகிறது என்பதைத் தெரிவிக்கிறது. கர்மவிசாராநந்தரம் ப்ரஹ்மவிசாரம் பண்ணவேண்டும் என்னும் விஷயத்தில் கர்மாக்கள் அல்பாஸ்திரபலனை தருபவை என்கிற நிர்ணயத்தோடு கூடின அநந்த ஸ்திரபல ஆபாதப்ரதீதியானது ஹேதுவாகிறது. விசிஷ்டோஹேது: அதாவது இரண்டும் சேர்ந்து ஹேது. அத: ஶப்தத்தால் வ்ருத்தஸ்ய-கீழே நடைபெற்ற கர்மவிசாரமானது ஹேதுவாகச் சொல்லப்பட்டதால். கர்மவிசாரத்திற்கு ஸாங்கமாக

வேதாத்யயனம் பண்ணியதால்-ஶிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்று ஆறு அங்கங்களுடன் வேதாத்யயனம் பண்ணியதால்- ★அக்ஷய்யம் ஹ வை சாதுர்மாஸ்யம்★ இத்யாதி வாக்யங்களுக்கு அர்த்தத்தை ஆபாதத:-மேலெழுந்தவாரியாகப் பராமர்சித்ததில், கர்மாக்கள் அநந்த ஸ்திர பலனைத் தருபவை என்று எண்ணி, கர்மவிசாரம் பண்ணியவாறே, கர்மாக்களுக்கு ஆவ்ருத்தியானது, ★"வஸந்தே வஸந்தே ஜ்யோதிஷா யஜேத-★ என்று ப்ரதி வருஷம் ஜ்யோதிஷ்டோம யாகம் பண்ணவேண்டுமென்று விதித்திருப்பதை அறிந்து, கர்மாக்கள் அல்பாஸ்திர பலத்தை உடையவைகள் என்று தெரிந்துகொள்வதற்குக் காரணமாயிருந்ததால், கர்மணும் அல்பாஸ்திர பலத்வ நிர்ணயஸஹித-அநந்த ஸ்திரபல ஆபாதப்ரதீதி: ஹேதுவாகிறது. இவ்விதம் கூறப்பட்டுள்ள, விசிஷ்ட ஹேதுவானது, அதிகத அல்ப அஸ்திர பல கேவல கர்மஜ்ஞானதயா ஸஞ்ஜாத மோக்ஷாபிலாஷஸ்ய என்னும் பதங்களால் சொல்லப்பட்டது.

**அதிகத**-என்பதால் கர்மாக்கள், பலத்தால் விடுவதன் பொருட்டு அறியத்தக்கவை என்பதும், ஸ்வரூபத்தால் க்ரஹிப்பதன் பொருட்டு-ஏற்றுக்கொள்வதின் பொருட்டு அறியத்தக்கவை என்பதும் கர்மவிசாரத்தால் ஏற்படுவதால், அவைகள் கர்மவிசாரம் பூர்வவ்ருத்தம் என்று சொல்லுவதற்கு ஹேதுவாகின்றன. அபேக்ஷிதமான கர்மஸ்வரூபத்தின் ஜ்ஞானமும், கேவல கர்மாக்களுக்கு அல்பாஸ்திரத்வ பல ஜ்ஞானமும், கர்ம மீமாம்ஸையினுல் நிச்சயிக்கத்தக்கது என்றல்லவோ மேலே சொல்லப்போகிறுர். கர்மாக்கள் ஸ்வரூபேண க்ரஹிக்கத்தக்கவை-ஏற்கத்தக்கவை என்றதானது, அநந்தஸ்திரபல ஆபாதப்ரதீதி என்று சொன்னதில் உள்ளடங்கியிருக்கிறது. அங்கங்களோடு கூடிய, உபாயத்தாலேயே, அநந்தஸ்திரபல ஆபாதப்ரதீதி உண்டாவதால், கர்மாவானது ஸ்வரூபத்தால் உபாதேயம் என்பது அநந்தஸ்திர பல ஆபாதப்ரதீதியில் உள்ளடங்கியிருக்கிறது என்று சொல்லப்பட்டது. ஆதலால், அந்நதஸ்திரபல ஆபாத ப்ரதீதிக்கு விஶிஷ்ட ஹேதுவில் அந்தர்பாவமும், மேலே சொல்லப்போகும் விஷயத்திற்கு அவிரோதமும் ஸித்திக்கிறது.

**நநு**-கர்மவிசாரமானது ப்ரஹ்மவிசாரத்திற்கு நிரபேக்ஷ ஹேதுவென்றால், கர்மவிசாரத்தைப் பண்ணியவர்கள் எல்லோராலும் ப்ரஹ்மமானது விசாரிக்கத்தக்கதாகிறது. ஆகையால் ஸ்வர்கார்த்தம் யாகாதிகளை அநுஷ்டிப்பவர்களே இல்லாமற்போக வேண்டிவரும். அதாவது, நஶ்வரமான ஸ்வர்காதி பலனைக் குறித்து ஒருவரும் யாகாதி கர்மாக்களை அநுஷ்டிக்கமாட்டார்கள். ஆதலால் ஸ்வர்காதி பலனைக் குறித்து விதித்த ஶாஸ்த்ரங்கள் வ்யர்த்தமாகிவிடும் என்று தாத்பர்யம்.

**பரிஹாரம்**-கர்மமீமாம்ஸையைப் படிக்காமல் இருப்பவர்கள் ஆசார்யனுடைய உபதேசத்தால் ஸ்வர்காதி பலனைக் குறித்து யாகாதிகளைப் பண்ணுகிறவர்கள் அநேகம் பேர் இருக்கலாம். அதனால் யாகாதி கர்மாக்களைப் பண்ணாமல் யாவரும் விட்டுவிடுவார்கள் என்று சொல்வதற்கில்லை. கர்மவிசாரத்தைப் பண்ணியிருந்தாலும், துரத்ருஷ்டவசமாக மோக்ஷத்தில் விருப்பமில்லாமல் இருப்பவர்கள் ப்ரஹ்ம விசாரத்தைப் பண்ணாமல் ஸ்வர்காதிபலனை உத்தேசித்து யாகாதிகளை அனுஷ்டிக்க

லாம். மேலும், ஸாங்க வேதாத்யயனமானது கர்மவிசாரத்திற்குப் பூர்வ வருத்தம் என்கிறோம். இதனால் ஸாங்கமாக வேதாத்யயனம் பண்ணியவர்கள் யாவரும் கர்மவிசாரம் பண்ணுகிறார்கள் என்பதில்லையே ? ஏதோ ஒரு சிலரேயல்லவோ கர்மவிசாரத்தைப் பண்ணுகிறார்கள். கர்மவிசாரம் பண்ணாதவர்களன்றோ பலர் காணப்படுகிறார்கள். ஆகையால், ஸாங்க வேதாத்யயனத்திற்கு பூர்வவ்ருத்தத்வம் இல்லை என்று சொல்லப்போமோ ? ஸாங்க வேதாத்யயனம் பண்ணியவர்கள் அத்ருஷ்ட, தேச கால வைகுண்யத்தால் கர்மவிசாரத்தைப் பண்ணவில்லை என்று ஸமாதானம் சொல்லலாம். அந்த ஸமாதானம் இவ்விடத்திலும் பொருத்தமுடையதே. கர்மவிசாரத்தைப் பூர்வவ்ருத்தமாக ஒப்புக்கொள்ளாத அத்வைதிகள் ஸாதந சதுஷ்டயத்தை பூர்வ வ்ருத்தமாகச் சொல்லுகிறார்கள். ஸாதந சதுஷ்டயம் புஷ்கலமாக இருந்த போதிலும் பலர் ப்ரஹ்மவிசாரத்தில் இழிவதில்லை. அதனால் ஸாதந சதுஷ்டயத்திற்குப் பூர்வவ்ருத்தம் ஒப்புக்கொள்ளத் தக்கதென்று சொல்லப்போமோ என்று நாம் கேட்டால் அதற்கு அத்ருஷ்டாதிகள் இல்லாததால் அவர்கள் ப்ரஹ்ம விசாரம் செய்யவில்லை என்றுதானே ஸமாதானம் கூறுவர். அவ்வித ஸமாதானத்தையே கர்மவிசாரத்திற்குப் பூர்வவ்ருத்தத்தை சொல்லும் நாமும் சொல்லுகிறோம். ஆகையால் த்ருஷ்டாத்ருஷ்ட ப்ரதிபந்தகம் இல்லாதவர்களுக்கு கர்மவிசாரமானது ப்ரஹ்மவிசாரத்திற்குக் காரணமாகிறது என்பதில் யாதொரு குறையும் சொல்லப்போகாது.

**(भाष्यम्) ब्रह्मणो जिज्ञासा ब्रह्मजिज्ञासा। ब्रह्मण इति कर्मणि षष्ठी; 'कर्तृ कर्मणोः कृति' (पा.सू. 2.3.65) इति विशेषविधानात्। यद्यपि संबन्धसामान्यपरिग्रहेऽपि जिज्ञासायाः कर्मापेक्षत्वेन कर्मार्थत्वसिद्धिः। तथापि आक्षेपतः प्राप्तात् आभिधानिकस्यैव ग्राह्यत्वात् कर्मणि षष्ठी गृह्यते ॥ न च प्रतिपदविधाना च षष्ठी न समस्यते (पा.सू.वा. 2.2.10) इति कर्मणि षष्ठ्याः समास निषेधः शङ्कनीयः। कृद्योगा च षष्ठी समस्यते (पा.सू.वा. 2.2..9) इति प्रतिप्रसव सद्भावात्।**

**கருத்து**-ப்ரஹ்மத்தை அறியவேண்டுமென்கிற இச்சை ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸை. ப்ரஹ்மண: என்று கர்மார்த்தத்தில் ஷஷ்டீ விபக்தி வந்திருக்கிறது. 'கர்த்ரு கர்மணோ: க்ருதி' என்று விசேஷித்து ஷஷ்டீ விபக்தியை விதித்திருப்பதால் ஸம்பந்த ஸாமாந்யத்தை பரிக்ரஹித்தாலும் ஜிஜ்ஞாஸையானது கர்மாவைக் கருதுவதால் இந்த ஷஷ்டிக்கு கர்மார்த்தத்வம் ஸித்திக்கிறது. ஆகிலும் ஆக்ஷேபத்தால் கிடைபதைவிட ஆபிதநிகமே க்ரஹிக்கத்தக்கதாதலால் கர்மணி ஷஷ்டீ க்ரஹிக்கப்படுகிறது. 'ப்ரதிபதத்தால் விதிக்கப்பட்ட ஷஷ்டியானது ஸமாஸத்திற்கு விஷயமாவதில்லை' என்பதால், கர்மணி ஷஷ்டிக்கு ஸமாஸத்தில் நிஷேதம் சங்கிக்கத்தக்கதல்ல. ஏனெனில் 'க்ருத்யோக ச ஷஷ்டீ ஸமஸ்யதே' என்று ப்ரதிப்ரஸவம் இருப்பதால். 'ப்ரதிபதவிதாநா ச ஷஷ்டீ ந ஸமஸ்யதே' என்கிற பாடமே மஹாபாஷ்யத்தில் உள்ள பாடம். சில ஸ்ரீகோசங்களில், 'ப்ரதிபதவிதாநாஷஷ்டீ' என்றுள்ளது. இது விஷயமாக தத்வடீகையின் டீகையில் இஞ்சிமேட்டு ஸ்ரீமதழகியசிங்கர் அருளிச்

செய்ததை இங்கு குறிப்பிடுகிறோம். 'प्रतिपदविधाना च षष्ठी' अयमेवपाठः महाभाष्यारूढः साम्प्रदायिकश्च; अर्वाचीनानां 'प्रतिपदविधाना षष्ठी' इति पाठः शैषिकीं षष्ठीं वर्जयित्वा सर्वापि षष्ठी प्रतिपदविधाना भवति इत्यर्थः महाभाष्यकृदभिमतः

*விரிவுரை --பிறகு ஸூத்ரத்திலுள்ள ப்ரஹ்மஜிஜ்ஞாஸா என்னும் பதத்திற்கு அர்த்தம் சொல்லப்போகிறவராய்க் கொண்டு முதலில் ஒன்றுகச் சேர்ந்திருக்கிற இரண்டு பதங்களுக்கு-ஸமஸ்தமான பதத்திற்கு விக்ரஹத்தைச் சொல்லுகிறுர். ப்ரஹ்மண இத்யாதிநா. கர்மத்வ கரணத்வாதி ஸம்பந்த விசேஷங்கள் சொல்லும்போது ஏழு விபக்திகள் படிக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் கர்மணித்விதீயா இது முதலான ஸூத்ரங்களால் விதிக்கப்பட்டுள்ளன. அதாவது கர்த்தா என்னும் அர்த்தத்தில் ப்ரதமாவிபக்தியும், கர்மார்த்தத்தில் த்விதீயாவிபக்தியும், கரணார்த்தத்தில் த்ருதீயா விபக்தியும், ஸம்ப்ரதாநார்த்தத்தில் சதுர்த்தி விபக்தியும், அபாதாந அர்த்தத்தில் பஞ்சமிவிபக்தியும், ஸம்பந்த ஸாமாந்யார்த்தத்தில் ஷஷ்டீ விபக்தியும், அதிகரணார்த் தத்தில் ஸப்தமி விபக்தியும் படிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் ஷஷ்டீ சேஷே என்னும் ஸூத்ரத்தால் ஸம்பந்த ஸாமாந்யத்தில் ஷஷ்டி விதிக்கப்பட்டிருக்கிறது. ப்ரஹ்மணோ ஜிஜ்ஞாஸா என்கிறவிடத்தில் சொல்லப்பட்ட ஷஷ்டிக்கு ஸாமாந்ய விஷயத்வத்தை ஙங்கித்து கர்மவிஷயத்வம் நிச்சயிக்கப்படுகிறது. ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா என்பது பொதுவாக அநேக விபக்தி ஸாதாரணமாயிருப்பதால் விபக்த்யந்தர ஸந்தேஹத்தைப் போக்குவதற்காக விக்ரஹ வாக்யத்தைக் காட்டுகிறுர் ப்ரஹ்மணோ ஜிஜ்ஞாஸா என்று. மற்ற விபக்திகளில் அர்த்தம் சொல்லுவதில் அநுபபத்தி ஏற்படுவதால் ஷஷ்டி விபக்தியைக் குறிப்பிட்டு ப்ரஹ்மணோ ஜிஜ்ஞாஸா என்று அருளிச்செய்தார். அதாவது ப்ரஹ்மணே ஜிஜ்ஞாஸா என்று நான்காம் வேற்றுமையைச் சொல்லுவதானால் ப்ரஹ்மப்ரயோஜநாய ஜிஜ்ஞாஸா என்று ப்ரஹ்மத்திற்குப் ப்ரயோஜனத்வம் ஸித்தித்தபோதிலும் ப்ரக்ருதி விக்ருதி பாவம் இல்லாதவிடத்தில் சதுர்த்தி விபக்தியானது நிஷேதித்திருப்பதால், இவ்விடத் தில் சதுர்த்தி விபக்தியைச் சொல்லவில்லே. ப்ரஹ்மணி ஜிஜ்ஞாஸா என்று ஸப்தமி விபக்தியில் ஸமாஸம் சொன்னால் ப்ரஹ்ம விஷயத்தில் ஜிஜ்ஞாஸை என்று ஏற்படுமே தவிர அதற்குப் ப்ரயோஜநத்வம் ஸித்திக்காதாகையால், ஸப்தமி விபக்தியைச் சொல்லவில்லே. ப்ரஹ்மணா ஜிஜ்ஞாஸா என்ற மூன்றும் வேற்றுமை யில் ஸமாஸம் சொன்னால் அதற்கு ★சங்குலயா கண்ட:★ (கத்தியால் வெட்டப்பட்ட ஒரு துண்டு) என்கிற இடத்தில் போல் இங்கும் விஷயத்வம் ப்ரயோஜநத்வம் இரண்டும் ஸித்திக்காது. இவ்விதமே இதர விபக்திகளில் ஸமாஸம் சொல்லுவதில் அநுபபத்தி ஏற்படுகிறது. பஞ்சமி விபக்தியில் ஸமாஸம் சொன்னாலும், ப்ரஹ்மணோ ஜிஜ்ஞாஸா என்றுதான் சொல்லவேண்டிவரும். ஆகையாலும், ஷஷ்டீ விபக்திக்கு அநேகார்த்தங்கள் இருப்பதாலும் அதன் நிர்ணயத்திற்காக ப்ரஹ்மணி இதி கர்மணி ஷஷ்டீ என்று சொல்லுகிறார்.*

நநு-கர்மார்த்தத்தில் ஷஷ்டீ விபக்தி சொல்லுவது யுக்தமல்ல. ★கர்மணி ச★ என்கிற ஸூத்ரத்தால் கர்மார்த்தத்தில் ஷஷ்டீ விபக்திக்கு ஸமாஸ நிஷேதமானது சொல்லப்பட்டிருப்பதால், இவ்விடத்தில் ஸமாஸமானது ஸம்பவிக்காது என்கிற

ஶங்கைவர அருளிச் செய்கிறார் ★கர்த்ரு கர்மணோ: க்ருதி இதி விசேஷ விதாநாத் ★ என்று. அதாவது உபயப்ராப்தௌ கர்மணி என்கிற ஸூத்ரத்தில் விதிக்கப்பட்ட ஷஷ்டீ விஷயத்தின் நிஷேதம் இது. இவ்விடத்தில் கர்த்ரு கர்மாக்களுக்கு விவக்ஷையில்லாததால் 'கர்மணி ச' என்கிற நிஷேத ஸூத்ரம் ப்ரவ்ருத்திக்காது என்று அபிப்ராயம். அதாவது ''ஆச்சர்யோ கவாம் தோஹ: அஶிக்ஷிதேந கோபாலேந ★ என்கிறவிடத்தில் ★அகோபாலஸ்ய தோஹ: ஆச்சர்ய: ★ என்று கர்த்தாவான அகோபாலனிடத்தில் ஷஷ்டீ விபக்தியானது ப்ராப்தமாயிற்று. கவாம் தோஹ: என்று கர்மாவிலும் கோபதோத்தரம் ஷஷ்டீ விபக்தியானது ப்ராப்தமாயிற்று. கர்த்தார்த்தத்திலும் கர்மார்த்தத்திலும் ஷஷ்டீ விபக்தியானது ப்ராப்தமான அளவில் இந்த ஸூத்ரத்தால் கர்மார்த்தத்தில்தான் ஷஷ்டீ விபக்தியா னது நியமிக்கப்படுகிறது. கர்த்ரு அர்த்தத்தில் ஷஷ்டீ வ்யாவர்த்திக்கப்படுகிறது. ஆகையால் அகோபாலேந என்று சொல்லப்பட்டது. 'கர்த்ரு கர்மணோ க்ருதி' என்கிற ஸூத்ரத்தால், கர்மார்த்தத்தில், ஷஷ்டீ விபக்தியானது க்ரஹிக்கப்படுகிறது என்று அர்த்தம்.

ஸூத்ரத்தில் கர்த்ரு அர்த்தத்திலும் ஷஷ்டீ விபக்தியானது சொல்லப்பட்டிருப்ப தால் அதைவிட்டு கர்மார்த்தத்தில் ஷஷ்டீ விபக்தியானது இங்கு சொல்லப்படு வதாக அருளிச் செய்வதற்குக் காரணம் என்ன எனில், தாபத்ரயத்தால் பீடிக்கப்பட்டவனுக்கே ப்ரஹ்மஜிஜ்ஞாஸா கர்த்ருத்வம், ப்ரஹ்மத்திற்கே கர்மத்வம் என்கிற அபிப்ராயத்தால், ப்ரஹ்மண இதி கர்மணி ஷஷ்டீ என்று சொன்னார். கர்மணி ஷஷ்டியை க்ரஹித்தால் ப்ரஹ்மத்திற்கு விஷயத்வ ப்ரயோஜனத்வங்கள் ஸித்திக்கும். அதாவது கர்மாக்கள் எல்லாம் எப்பொழுதும் விஷயமாகயிருப்பதாலும் ஈப்ஸிததமமாக இருப்பதாலும் விஷயத்வம் ப்ரயோஜனத்வம் ஸித்திக்கிறது என்று தாத்பர்யம். (ச்ருத)

இவ்விடத்தில் வ்யஸ்தமாக - பிரித்துச் சொல்லுவது ஸம்பவிக்காது. ஜிஜ்ஞாஸா பதமானது எவ்விடத்திலும் அந்வயிக்காதாகையால். ப்ரஹ்ம பதத்தைத் த்விதீயா விபக்தியாகக் கொள்வதற்கில்லை. கர்மணி த்விதீயா என்பதைக் கொண்டால் க்ருதர்தமான பதத்துடன் த்விதீயார்த்தகமான பதத்திற்கு ஸமாஸ நிஷேதம் இருப்பதால். ப்ரஹ்மணா ஜிஜ்ஞாஸா என்ற ஹேத்வர்த்தத்தில் த்ருதீயா விபக்தி சொன்னால் ப்ரஹ்மமானது ஸர்வத்திற்கும் ஹேதுவாகயிருப்பதால் பொருத்தமுடைய தாக யிருப்பினும் ப்ரஹ்மத்திற்கு விஷயத்வம் ஸம்பவிக்காது. மேலும் ப்ரஹ்மபத ஸாமாநாதிகரண்யத்தால் அத: ஶப்தத்திற்கு வ்ருத்த விஶேஷமானது ஆக்ஷேப ப்ராப்தம் என்று சொன்னது பொருந்தாது. ப்ரஹ்மணே ஜிஜ்ஞாஸா என்று சதுர்த்தியில் தாதர்த்யே சதுர்த்தியைக் கொண்டு அர்த்தம் சொன்னால் ப்ரயோஜனத் வம் ஸித்தித்தபோதிலும் ப்ரக்ருதி-விக்ருதி பாவமானது ஸித்திக்காது. அதாவது ★தாதர்த்யே ஸமாஸே ப்ரக்ருதி விக்ருதி க்ரஹணம் கர்தவ்யம் ★ என்று காத்யாயனர் சொல்லியிருப்பதால் இவ்விடத்தில் ப்ரக்ருதி விக்ருதி பாவம் சொல்லமுடியாததால் சதுர்த்தி ஸமாஸம் சொல்வதற்கில்லை. அதாவது யூபதாரு என்கிற இடத்தில் யூபஸ்தம்பத்திற்காக வைக்கப்பட்டிருக்கும் மரத்தை யூபதாரு என்கிறோம்.

அவ்விடத்தில் யூபாய தாரு - யூபத்தின் பொருட்டு மரம் என்று சொல்லுகிறோம். அவ்விடத்தில் மரமானது ப்ரக்ருதி. யூபமானது விக்ருதி. ஆகையால் அவ்விடத்தில் யூபாயதாரு என்று ஸமாஸம் சொல்லுகிறோம். அவ்விதமாக இவ்விடத்தில் ப்ரக்ருதி விக்ருதி பாவம் சொல்லமுடியாதாகையால். தாதர்த்ய சதுர்த்தி சொல்வதற்கில்லை. ஸம்ப்ரதாந சதுர்த்தியும் சொல்வதற்கில்லை. ஸ்வஸ்வத்வ நிவ்ருத்திபூர்வக பரஸ்வத்வ ஆபாதனம் அன்றோ ஸம்ப்ரதானம் எனப்படுகிறது. ப்ரஹ்மணி ஜிஜ்ஞாஸா என்று ஸப்தமீ ஸமாஸமும் பொருந்தாது. ப்ரஹ்மத்திற்கு விஷயத்வம் ஸித்திக்குமே தவிர ப்ரயோஜனத்வம் ஸித்திக்காது. ப்ரஹ்மண: என்று பஞ்சமி விபக்தியிலும் ஷஷ்டீ விபக்தியிலும் ஒன்றாக இருப்பதால் இங்கு ப்ரஹ்மணோ ஜிஜ்ஞாஸா என்ற சொல்லப்பட்டவிடத்தில் எந்த விபக்தியை மனதில் கொண்டு சொல்லப்படுகிறது என்கிற ஸந்தேஹத்தைப் போக்குவதற்காகவும் அநேக அர்த்தத்தில் ஷஷ்டி விபக்தி இருப்பதாலேயும் ப்ரஹ்மண இதி கர்மணி ஷஷ்டி என்று அருளிச் செய்துள்ளார். (தத்வடீகை)

நநு - ஷஷ்டீ சேஷே என்கிற வ்யாகரண ஸூத்ரத்தால் விதிக்கப்பட்ட ஸம்பந்த ஸாமாந்யத்தைப் பரிக்ரஹித்தாலும் ஜிஜ்ஞாஸையானது கர்மாவை அபேக்ஷிப்பதால் - கருதுவதால் ப்ரஹ்மண: என்ற ஷஷ்டிக்கு கர்மார்த்தத்வம் ஸித்திக்கிறது. எதற்காக ★கர்த்ரு கர்மணோ: க்ருதி★ என்கிற ஸூத்ரத்தால் கர்மார்த்தத்தில் ஷஷ்டி விபக்தியானது ஏற்றுக்கொள்ளப்படுவதாகச் சொல்லவேண்டும்? அதாவது ஜிஜ்ஞாஸை - அறிய வேண்டுமென்கிற இச்சை பிறந்தால் எதை அறிய வேண்டுமென்கிற இச்சை? என்கிற ஆகாங்க்ஷை பிறக்க ப்ரஹ்மத்தை அறியவேண்டுமென்கிற இச்சை என்று ஸமாதானம் கூறுவோம். ஆகையால் ப்ரஹ்மண: என்கிற ஷஷ்டிக்கு கர்மத்வம் ஸித்திக்கிறது என்று தாத்பர்யம்.

பரிஹாரம் - நீர் சொல்லுவது உண்மையே. ஆகிலும் கர்மார்த்தமானது ஆக்ஷேபத்தால் விளம்பித்து ப்ராப்தமாவதைவிட நேரிடையாக ஸூத்ரத்தால் விதிக்கப்பட்டதைக் க்ரஹிப்பதானது சிறந்ததாகையால் கர்மணி ஷஷ்டியானது க்ரஹிக்கப்படுகிறது.

நநு - முன்பே விசாரம் செய்து கர்மார்த்தத்தில் ஷஷ்டீவிபக்தியானது. விதிக்கப்படுவதாக நிர்ணயித்த பிறகு ஸம்பந்த ஸாமாந்ய விஷயமாக 'யத்யபி' என்று ஆரம்பிப்பதற்குப் ப்ரஸக்தி என்ன? உச்யதே - ஸம்பந்த ஸாமாந்யத்தை அங்கீகரித்தபோதிலும் ஜிஜ்ஞாஸாபத ஸாமர்த்யத்தால் ப்ரஹ்மத்திற்கு கர்மத்வம் ஸித்திப்பதாலும் பரம்பரையாக ஸம்பந்தத்தைப் பெற்ற உபாயம் (பக்தி அல்லது ப்ரபத்தி) உபாஸகன் (பக்தன்) ப்ரதிபந்தகம் (உபாஸந விரோதிகளான பாபங்கள்) முதலியவைகளுக்கு ஜிஜ்ஞாஸ்யத்வம் ஸித்திப்பதாலும் ப்ரதிபதத்தால் விதித்த ஷஷ்டிக்கு ஸமாஸ நிஷேதம் இருப்பதாலும் அவ்விடத்தில் ஸாமர்த்யத்தால் கர்மார்த்தத்தில் ஷஷ்டிக்கு கர்மார்த்த ஸித்தியையும் ப்ரஹ்மாநுபந்திகளுடைய ஜிஜ்ஞாஸ்ய ஸித்தியையும் யத்யபி என்பதால் ஸங்கிக்கிறார்.

**ஸம்பந்த ஸாமாந்ய பரிக்ரஹே அபி** என்கிற விடத்திலுள்ள பரி என்னும் உபஸர்க்கபலத்தால் ப்ரஹமாநுபந்திகளுக்குக்கூட ஜிஜ்ஞாஸ்யத்வம் ஸுசிக்கப் படுகிறது. பரிக்ரஹே அபி என்னுமிடத்திலுள்ள பரி என்னும் உபஸர்கத்தால், **பரிதோ க்ரஹணம் இதி** சுற்றியுள்ள வஸ்துக்களுக்கும் க்ராஹ்யத்வம் ஸித்திக்கிறது. ஆகையால்தான் மேலே க்ருஹ்யதே என்று சொல்லப்பட்டதே ஒழிய பரிக்ருஹ்யதே என்று சொல்லப்படவில்லை. அவ்விரண்டையும் ததாபி என்பதால் பரிஹரிக்கிறார். அதாவது ப்ரதானமாயுள்ள ப்ரஹ்மத்திற்கும் அப்ரதானமாயுள்ள மற்றவைகளுக்கும் கர்மத்வமானது ஆக்ஷேபத்தால் ஸித்திப்பதைக் காட்டிலும் ப்ரதானமாயுள்ள ப்ரஹ்மத்தினிடத்தில் சொல்லப்படும் கர்மத்வத்திற்கு ஆபிதானிகத்வம் - ஶப்தத்தால் சொல்லப்படுவதானது ஸித்திக்கவேண்டும். மேலும் மற்றவைகளுக்குப் ப்ரதான ஸம்பந்தத்தாலேயும் ஆகாங்க்ஷா வஶத்தாலும் ஸித்திக்கிற கர்மத்வத்திற்கு ஸாமர்த் யத்தால் ஸித்தியும் ஏற்றுக் கொள்ளத்தக்கது. ஆகையினால் ப்ரதிபத விஹிதமாக இருக்கிற ஷஷ்டியே ஏற்றுக் கொள்ளத்தக்கது. ★ஷஷ்டீஶேஷே★ என்கிற ஸுத்ரத்தால் விஹிதமான ஷஷ்டி வ்யதிரிக்தமான எல்லா ஷஷ்டி விபக்திகளும் ப்ரதிபதவிதாநம் என்று அர்த்தம்.

நநு - விளம்பித்து வரும் புத்திக்குக் காரணமானதைவிட சீக்ரபுத்திக்கு எது காரணமோ அது பலவத்தரம் னெறு கீழே நீர்கூறிய ந்யாயப்படி ★கர்த்ரு கர்மணோ: க்ருதி★ என்கிற ஸுத்ரத்தில் கர்த்ருத்வம் கர்மத்வம் இரண்டு அர்த்தங்களும் ப்ரதிபந்நமாயிருப்பதால் கர்மத்வ புத்தியானது விளம்பித்து வரக்கூடியது. ஆகையால் கர்த்ரர்த்தத்தை விட்டுவிட்டு கர்மார்த்தத்தில் ஷஷ்டியைச் சொல்லுவது எவ்விதம் பொருந்தும் ?

பரிஹாரம் - கர்மவிசாரம் பண்ணிய கர்த்தாவிற்கே அறியவேண்டுமென்கிற இச்சை உண்டாவதால் கர்மார்த்தம்தான் முதலில் புத்தியில் தோன்றும்.

ஸமாஸ நிஷேதத்தை ஆஶங்கித்து பரிஹரிக்கிறார் 'நச' என்பதால். ப்ரதிபதத்தால் விதிக்கப்பட்ட ஷஷ்டியானது - அதாவது ★ஷஷ்டீஶேஷே★ என்கிற ஸுத்ரம் தவிர மற்ற ஸுத்ரங்களால் விதிக்கப்பட்ட ஷஷ்டி விபக்தியானது ஸமாஸத்தை அடைகிறதில்லை என்று நிஷேதித்திருப்பதால் இவ்விடத்தில் ★கர்த்ரு கர்மணோ: க்ருதி★ என்கிற ஸுத்ரத்தால் கர்மார்த்தத்தில் ஷஷ்டீ விபக்தி சொல்லி ஸமாஸம் சொல்லுவது யுக்தமாகாது என்று ஆஶங்கை வர ★க்ருத்யோகா ச ஷஷ்டீ ஸமஸ்யதே ★ என்று ப்ரதிப்ரஸவம் இருப்பதால் ஸமாஸம் சொல்லுவது கூடும், ப்ரதிப்ரஸவம் என்பது அபவாதஸ்ய அபவாதம். அதாவது ★கர்த்ரு கர்மணோ: க்ருதி★ என்று ஷஷ்டிக்கு ஸமாஸம் ப்ராப்தமாயிற்று. இதற்கு நிஷேதம் ★'ப்ரதிபத விதாநா ச ஷஷ்டீ ந ஸமஸ்யதே' ★என்று ஆக்ஷேபம் ப்ரஸக்தமாக ★கருத்யோகா ச ஷஷ்டி★ என்ற விதியினால் ஸமாஸம் ஸித்திக்கிறது. ஆதலால் ★க்ருத்யோகா ச ஷஷ்டீ ஸமஸ்யதே★ என்பதை ப்ரதிப்ரஸவம் என்கிறோம். ஆக இவ்விடத்தில் க்ருத்யோகமிருப்பதால் ஸமாஸம் சொல்லுவது யுக்தமேயாகும்.

அயம் பாவ: 'ज्ञोऽविदर्थस्य करणे' இத்யாதி ஸூத்ரவிஹித ஷஷ்டீ விஷயம் தான் இந்த ஸமாஸ நிஷேதம். அதாவது ஸர்பிஷோ ஜ்ஞானம் என்பதற்கு ஸர்பிஷா ப்ரவ்ருத்தி என்று அர்த்தம். இவ்விடத்தில் ஸர்பிஷா என்று கரணார்த்தத்தில் ஷஷ்டீ விபக்தியானது வந்திருக்கிறது. ஸர்பிஷோ ஜ்ஞானம் என்பது ஸர்பிஜ்ஞானம் என்று ஸமாஸம் ப்ராப்தமாக ★ஜ்ஞோஅவிதர்தஸ்ய கரணே★ என்ற ஸூத்ரத்தால் விதிக்கப்பட்ட ஷஷ்டிக்கு ★ப்ரதிபத விதாநா ஷஷ்டீ ந ஸமஸ்யதே ★என்பதால் ஸமாஸ நிஷேதம் பண்ணப்பட்டிருக்கிறது. ஆகையால் ஸர்பிஜ்ஞானம் என்று ஸமஸ்தமாகச் சொல்லக் கூடாது. ஸர்பிஷோ ஜ்ஞானம் என்றே சொல்லவேண்டும். ★ஜ்ஞோஅவிதர்தஸ்ய கரணே★ என்கிற இடத்தில் ஶேஷே என்பது அநுவர்த்திக்கி றது. ஶேஷத்வேந விஹிதமான (ஸம்பந்த ஸாமாந்யமாகச் சொல்லப்பட்ட கரணாதி அர்த்தங்களில் ★ஷஷ்டி ஶேஷ★ என்கிற ஸூத்ரவிஷயத்திற்கே மறுபடியும் ஷஷ்டியானது விதிக்கப்பட்டதற்கு லோபமானது கிடையாது என்று நிஷேதித்திருப்ப தால் ஸமாஸமானது ★ஜ்ஞோஅவிதர்தஸ்ய கரணே★ என்கிற ஸூத்ரத்தால் ப்ராப்தமான ஷஷ்டிக்கு ஸமாஸம் நிஷேதிக்கப் படுகிறது. கர்த்ரு கர்மணோ: க்ருதி என்கிற ஸூத்ரத்தால் ஶேஷே என்னும் பதம் அநுவர்த்திக்கவில்லையாதலால் அப்ராப்தமான ஷஷ்டியை விதிப்பதால் விபக்தி லோபமில்லாததால் ஸமாஸ நிஷேதத்திற்குப் ப்ரஸக்தியேயில்லை.

நநு - ஜிஜ்ஞாஸா ஶப்தமானது ஆபந்தமாக அதாவது ஆகாராந்த ஸ்திரீலிங்க ஶப்தமாகையால் அதற்குக் க்ருதந்தத்வம் எப்படிக் கூடும். க்ருதந்தமாக இருந்தாலன்றோ க்ருத்யோகாச்ச ஷஷ்டீ ஸமஸ்யதே என்று ப்ரதிப்ரஸவ மிருப்பதாகச் சொல்லாம்.

பரிஹாரம் - அவ்விதமன்று. ஜிஜ்ஞாஸா என்னும் ஶப்தம் உண்டான ப்ரக்ரியயைக் கூறுகிறோம். கேண்மின். ஜ்ஞாதாதுவிலிருந்து உண்டானது ஜிஜ்ஞாஸா. அதற்கு த்வித்வம்வர ஜ்ஞா' ஜ்ஞா என்றாயிற்று. பிறகு முதலிலுள்ள ஜ்ஞா என்பதில் 'ஞ' காரத்திற்கு லோபம் வர ஜ் ஜ்ஞா என்றாயிற்று. ஜ் என்பதற்கு இகாராதேசம் வர 'ஜிஜ்ஞா' என்றாயிற்ற. அதன் பிறகு 'ஸந்' ப்ரத்யயம் வர ஜிஜ்ஞாஸ என்றதாயிற்று. பிறகு ★அ ப்ரத்யயாத்'★ என்கிற ஸூத்ரத்தாலே விதிக்கப்பட்ட க்ருத் ஸம்ஜ்ஞையையுடைய 'அ' ப்ரத்யயமானது விதிக்கப்படுகிறது. ஜிஜ்ஞாஸ + அ என்றதாயிற்று. பிறகு 'ஸ' காரத்திற்கு மேல் உள்ள 'அ' காரத்திற்கு ஸவர்ண தீர்கம் வர ஜிஜ்ஞாஸா என்றதாயிற்று. ஆக ஏகாதேஶஸ்ய - ஒரு அக்ஷரமான அகாரத்திற்கு அந்தாதிவத் பாவம் (முடிவு ஆரம்ப பாவமானது) ஏற்படுவதால் க்ருத்ப்ரத்யயமான 'அ' ப்ரத்யயமானது இவ்விடத்தில் முடிவில் இருப்பதைக் கொண்டு ஜிஜ்ஞாஸா பதத்தைக் க்ருதந்தமாகவும் சொல்லுகிறோம்.

நநு - ஸர்பிஷோ ஜ்ஞானம் என்கிறவிடத்திலும் க்ருதந்தமான ஜ்ஞான பதமிருப்பதால் ஏன் ஸமாஸம் சொல்லக் கூடாது?

**பரிஹாரம்** - ஸர்பிஷோ ஜ்ஞானம் என்கிறவிடத்தில் ஷஷ்டீ விபக்தியானது 'கர்த்ரு கர்மணோ: க்ருதி' என்கிற விடத்தில் போல க்ருத்யோகத்தால் வந்ததல்ல. ஆகையால்-க்ருத்யோகாபாவாத் ஸமாஸ நிஷேதம் சொல்லப்பட்டிருக்கிறது.

* * * *

## (भाष्यम्) ब्रह्मशब्देन च स्वभावतो निरस्तनिखिलदोषोः अनवधिकातिशयासंख्येय कल्याणगुणगणः पुरुषोत्तमः अभिधीयते ।

*கருத்து-ப்ரஹ்ம ஶப்தத்தால் ஸ்வபாவத்திலேயே கெட்ட குணங்களற்றவனும் - ஹேய குணங்கள் ஒன்று மில்லாதவனும் எல்லையற்ற அதிஶய அஸங்க்யேய எண்ணற்ற கல்யாணகுணக்கூட்டங்களை உடையவனுமான புருஷோத்தமன் சொல்லப் படுகிறான்.*

**விரிவுரை**-*இதுவரை ஸமஸ்தமான விபக்த்யர்த்தம் சொல்லப்பட்டது. இனி ஸமஸ்தமான இரண்டு பதங்களுள் முதலிலுள்ள ப்ரஹ்ம ஶப்தத்திற்கு அர்த்தத்தைச் சொல்லுகிறார். ப்ரஹ்ம ஶப்தேந ச என்று ஆரம்பித்து.* ★'इदं ब्रह्मायाति'★ *என்று ஜீவனிடத்திலும்* ★ तस्मात् एतत् ब्रह्म नाम रूपं अन्नं च जायते★ *என்று ப்ரக்ருதியினிடத்திலும் ப்ரஹ்ம ஶப்தப்ரயோக மிருப்பதாலும் மற்றும் பற்பல விதமாகச் சொல்லுவதாலும் அவற்றை யெல்லாம் நிராகரிப்பதற்காக ப்ரஹ்ம ஶப்தத்தால் புருஷோத்தமன்தான் சொல்லப்படுகிறான் என்று ப்ரதிஜ்ஞை பண்ணுகிறார். புருஷோத்தம ஶப்தத்திற்கு ரூடியினால் அர்த்தம் சொன்னால்- தேவதாந்தரங்கள் நிராகரிக்கப்பட்டதாகிறது. புருஷோத்தம ஶப்தம் ஸ்ரீமந் நாராயணனிடத்தில் யோகரூடம்.* **புருஷச்சாஸௌ உத்தமச்ச புருஷோத்தம:. புருஷாணாம் உத்தம: - புருஷோத்தம:, புருஷேஷு உத்தம: புருஷோத்தம:, புருஷேப்ய: உத்தம: புருஷோத்தம:** *என்று புருஷோத்தம ஶப்தத்திற்கு ஸமாஸம் சொல்லுகிறார்கள். ஷஷ்டிதத்புருஷ ஸமாஸத்திற்கு புருஷர்களுள் உத்தமன் என்று அர்த்தம். அப்பொழுது அவர்களுக்கு ஸமமாக அவனையும் சேர்த்துச் சொன்னதாகிறது. ஆகையால் நிர்தாரணே ஷஷ்டீ சொல்வதற் கில்லை.* द्राविमौ पुरुषौ लोके क्षरश्च अक्षर एव च *(ப.கீ 15-16) (வேதத்தில் க்ஷரர் என்றும் அக்ஷரர் என்றும் இரண்டுவகை ஜீவர்கள் ப்ரஸித்தர்கள் என்று கூறப்பட்டுள்ளனர்) என்று ஆரம்பித்து* उत्तम: पुरुषस्त्वन्य: परमात्मा इति उदाहृत: *(உத்தமனான புருஷன் கீழே கூறப்பட்ட க்ஷர அக்ஷர ஶப்தங்களால் சொல்லப்பட்ட பத்த முக்த ஜீவர்களைக் காட்டிலும் வேறுபட்டவன் - உத்தமன். ஶ்ருதிகள் அவனை பரமாத்மா என்று கூறுகின்றன) என்று தாழ்ந்தவர்களான ஜீவர்களுக்கு ப்ரதியோகி யாக சொல்லப்பட்டிருப்பதால் ஸம்பந்தி ஶப்தமானதால் ஸம்பந்த ஸாமாந்ய ஷஷ்டீ விபக்தியும் இங்கு கொள்ளலாம். அடுத்த ஶ்லோகத்திலே* अक्षरादपि चोत्तम: *என்று சொல்லியிருக்கிறபடி பஞ்சமீ ஸமாஸமாவது கொள்ளலாம்.* **புருஷேப்யோ உத்தம:** *என்று சொன்னதினால் பத்தர் முக்தர்களைக் காட்டிலும் வேறுபட்டவன் - விலக்ஷணன் என்று சொன்னதாயிற்று. நநு ஒவ்வொரு வஸ்துவும் மற்ற வஸ்துக்களைக் காட்டிலும் வேறுபட்டதாகத்தான் இருக்கிறது. இதனால் விஶேஷமாக ஒன்றும் சொல்லப்பட்டதாகாதே என்று கொண்டு* **ஸ்வபாவத: நிரஸ்தநிகிலதோஷ**

கந்த: அநவதிகாதிஶய அஸங்க்யேய கல்யாண குணகண: என்கிற இரண்டு *விஶேஷணங்களால் இதர வைலக்ஷணயத்தைப் பிரித்துக் காட்டுகிறுர்.*

यस्मात्क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः । अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तम· ॥ *(15-18 கீதை)*

*(கீழே கூறப்பட்டுள்ள ஸ்வபாவங்களால் காரணங்களிஞல் க்ஷரர் என்று சொல்லப்பட்ட பத்த ஜீவர்களைக் காட்டிலும் அக்ஷரர் என்று சொல்லப்படும் முக்தர்களைக் காட்டிலும், நான் மிகவும் உயர்ந்தவஞக இருக்கிறபடியால் வேதங்களிலும் லோகத்திலும் வேதாந்தத்தை விஶதீகரிக்கும்-விளக்கும் ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களிலும் புருஷோத்தமன் என்று ப்ரஸித்தமாக விளங்குகின் றேன்.) இங்கே சொல்லப்பட்டுள்ள லோக ஶப்தமானது ப்ரஸித்தமான லோகங்களையோ ஜனங்களையோ சொல்லவில்லை. அவை ப்ரமாணங்கள் ஆகமாட்டா,* ஆகையால் **லோகே வேதே** ச என்று வேதத்தோடு சேர்த்துச் சொல்லியிருப்பதஞல் *லோக ஶப்தமானது லோக்யதே அநேந வேதார்த்த: - (வேதங்களின் அர்த்தம் இதஞல் அறியப்படுகிறது என்கிற வ்யுத்பத்தியிஞல் ஸ்ம்ருதிகளைச் சொல்கிறது.* **★ஶ்ரூயதே நித்யம் இதி ஶ்ருதி:★** *(எப்பொழுதும் கேட்கப்படுவதஞல் ஶ்ருதி எனப்படுகிறது). ஆகையால் இதற்கு வக்த்ருதோஷ-சொன்னவனின் தோஷ ப்ரஸக்தியே கிடையாது. பரம்பரையாக வருகிறபடியால் மத்தியில் விட்டுப்போகா மல் இருந்து வருகிறது. ஆகையால் இதில் சொல்லப்படுவது முழுவதும் ப்ரமாணமாகும். மிதஜ்ஞரான (கொஞ்சம் தெரிந்து கொண்டிருக்கிற) நம்மால் அறியமுடியாத வேத ஶாகைகளில் ஒருவிதமாகச் சொல்லப் பட்டிருக்கிற அர்த்தங்களை எல்லாம் சேர்த்து விசதப்படுத்துவதஞல் ஸ்ம்ருதியும் ப்ரமாணமாகும்.* **★பரஞ்ஜ்யோதி: உபஸம்பத்ய ஸ்வேநரூபேண அபிநிஷ்பத்யதே ஸ உத்தம: புருஷ:★** *உயர்ந்த ஜ்யோதிஸ்ஸை அடைந்து தன்னுடைய ஸ்வரூபத்துடன் சேருகிருன். அவன் புருஷோத்தமன் என்றது ஶ்ருதி.* **★அம்சாவதாரம் புருஷோத்தமஸ்ய ஹி அநாதிமத்யாந்தமஜஸ்ய விஷ்ணோ:★** *பிறப்பில்லாதவஞகிய புருஷோத்தமஞன விஷ்ணுவினுடைய ஆதி மத்யம் அந்தம் இல்லாத அம்சாவதாரம் என்றும்* **★ந ச தேந விநா நித்ராம் லபதே புருஷோத்தம:★** *புருஷோத்தமஞன ராமன் லக்ஷ்மணனை விட்டுத் தூங்குவதில்லை என்றும் ஸ்ம்ருதி இதிஹாஸங்கள் கூறுகின்றன.*

*புருஷோத்தமனை ப்ரஹ்ம ஶப்தமானது சொல்கிறது என்பதற்கு காரணத்தைக் காட்டுகிறுர்* ஸ்பாவத: *என்று ஆரம்பித்து சொல்லும் இரண்டு விஶேஷணங்களால்.* **ஸ்வபாவத:** *என்பது இரண்டு விஶேஷணங்களிலும் அந்வயிக்கிறது.* **நிரஸ்தா: நிகிலா: தோஷா:** *- (எதஞல் ஸ்வபாவத: ஸமஸ்தமான தோஷங்களும் நிரஸ்தங்களோ - போக்கடிக்கப்பட்டவைகளோ) என்று சொன்னதஞல் பகவானிட முள்ள தர்மபூத ஜ்ஞானத்திற்கு ஸங்கோசம் என்பது எப்பொழுதும் கிடையாது என்று சொன்னதாயிற்று. அதாவது ஜ்ஞான விகாஸ லக்ஷண ஆநந்த்யம் சொல்லப்பட்டது என்று தாத்பர்யம். ஆகையிஞல் ப்ரஹத்வம் ஸித்திக்கிறது.* **அநவதிகாதிஶய** *என்பதால் குணத: - குணத்தால் ப்ரஹத்வம் சொல்லப்பட்ட*

தாகிறது. விபுத்வமானது குணத்தில் சேர்ந்ததாகையால் ஸ்வரூபத்தாலும் ப்ரஹத்வம் சொன்னதாகிறது. அதாவது ஶப்த ஶக்திக்கு ஸங்கோசமில்லாமல் ஸ்வரூபத்திற்கும் ஆநந்த்யார்த்தம் சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். இதனுல் எல்லா தோஷங்களையும் நிவர்த்திக்கிற அளவிறந்த ஆனந்தத்தை முமுக்ஷு அடைவதற்கு காரணமாவதாலும் பிறரால் கூறப்படும் அவித்யை முதலிய தோஷ ஸம்பந்தத்தையும் நிர்குணத்வத்தையும் வ்யாவர்த்திப்பதற்காகவும் ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கு உபாதியினுல் ஏற்பட்டுள்ள-உபாத்யுபஹித ப்ரஹ்மஸ்வரூபஸ்ய கர்மவஶ்யத்வ துக்கித்வாதிகளைச் சொல்லும் மதங்களை நிரஸிப்பதற்காகவும் ஸ்வபாவத: என்று தொடங்கிய இரண்டு விஶேஷணங்கள் சொல்லப்படுகின்றன. பத்தர்களுக்கும் சில தோஷங்களில்லாமலிருக்கும் . முக்தர்களுக்கும் நித்யர்களுக்கும் எவ்வித தோஷமுமில்லாமலிருப்பினும், அவர்களுக்கு ஸ்வாபாவிகமாகவே அப்படிப்பட்ட நித்ய நிர்தோஷத்வம் இல்லாமையால் அவர்களை வ்யாவர்திக்கிறது ஸ்வபாவத: நிரஸ்த நிகில தோஷ கந்த: என்கிற விஶேஷணம்.

மநுஷ்யானந்தத்தைக் காட்டிலும் தேவதைகளுடைய ஆநந்தம் அதிஶயித்திருக்கிறது. அவர்களைக் காட்டிலும் இந்த்ராதிகளுடைய ஆநந்தம் அதிஶயித்திருக்கிறது என்று முன்பு சொல்லப்பட்டவர்களைக் காட்டிலும் பின்பு சொல்லப்பட்டவர்களின் ஆநந்தம் அதிஶயிதமாக இருந்தபோதிலும் அவைகள் அவதியுள்ளவைகளாக இருப்பதால் அதை வ்யாவர்த்திப்பதற்காக அநவதிகாதிஶய என்று அருளிச் செய்துள்ளார். ப்ரஹ்மத்தினுடைய குணமானது இயத்தாரஹிதம் - அளவிட்டுச் சொல்ல முடியாதது. வாக்கிற்கும் மனத்திற்கும் கோசரமல்லாதது. வசித்வம் என்னும் குணமானது ஸத்யஸங்கல்பத்தில் அந்தர்பூதம் என்ற ஸமாநாதிகரணத்தில் (3-3-6) சொல்லப் போகிறார். ஆக பல முக்யமான குணங்களில் அதன் ப்ரகார பேதமுள்ள அநேக குணங்கள் உள்ளடங்கி இருக்கின்றன என்கிற அபிப்ராயமுள்ளது கண ஶப்தம்,

அபிதீயதே - புருஷோத்தமன் முக்ய வ்ருத்தியால் சொல்லப்படுகிறுன். ★யேநாக்ஷரம் புருஷம் வேத ஸத்யம் ப்ரோவாச தாம் தத்வதோ ப்ரஹ்ம வித்யாம்★ என்கிற ஶ்ருதியும் இந்த ஸூத்ரத்திற்கு ஒத்திருப்பதால் அநுஸந்திக்கத்தக்கது. இவ்விடத்தில் ப்ரஹ்ம ஶப்தமானது புருஷ பர்யாயமாக படிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

(भाष्यम्) सर्वत्र बृहत्वगुणयोगेन हि ब्रह्मशब्दः । बृहत्वं च स्वरूपेण गुणैश्च यत्रानवधिकातिशयं सः अस्य मुख्योऽर्थः । स च सर्वेश्वर एव । अतो ब्रह्मशब्दः तत्रैव मुख्यवृत्तः । तस्मादन्यत्र तद्गुणलेशयोगात् औपचारिकः । अनेकार्थ कल्पनाऽयोगात् भगवच्छब्दवत् ॥

கருத்து- எல்லா இடங்களிலும் ப்ருஹத்வ குணயோகத்தாலன்றே ப்ரஹ்ம ஶப்தம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. எந்த வஸ்துவினிடத்தில் ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் அளவில்லாத அதிசயமுள்ள ப்ருஹத்வம் இருக்கிறதோ அதுதான்

*இந்த ஶப்தத்திற்கு முக்யமான அர்த்தம். அந்த வஸ்து ஸர்வேச்வரனே. ஆகையால் ப்ரஹ்ம ஶப்தமானது அந்த ஸர்வேச்வரனிடத்திலேயே முக்ய வ்ருத்தியுள்ளது. ஒரே ஶப்தத்திற்கு அநேக அர்த்தங்களில் வ்ருத்தியைக் கல்பிப்பதானது ஶாஸ்த்ர விருத்தம். ஆதலால் பகவத் ஶப்தம்போல இந்த ப்ரஹ்ம ஶப்தமும் அந்த ஸர்வேஶ்வரனைத் தவிர மற்றைய வஸ்துக்களில் அந்த ப்ருஹத்வகுண லேசம் - கொஞ்சம் இருப்பதால் ஔபசாரிகமாக - கௌணமாக வழங்கப்படுகிறது.*

**விரிவுரை** - *முதலில் ப்ரதிஜ்ஞாதமான அர்த்தத்தை ஶப்த ஸாமர்த்யத்தால் உபபாதிக்கிருர். அர்த்தாந்தரங்களில் ப்ரஹ்ம ஶப்தப்ரயோகமிருப்பதால் அதற்கு அந்யதா ஸித்தியை சொல்லக்கருதி குண ஸம்பந்தத்தைக் காட்டுகிருர்.* **ஸர்வத்ர ப்ருஹத்வ குணயோகேந ஹி ப்ரஹ்ம ஶப்த:** *என்று. ஸர்வத்ர-ப்ரஹ்ம ஶப்த ப்ரயோகத்திற்கு விஷயமாக இருக்கிற எல்லா வஸ்துக்களிலும் ப்ருஹத்வம் என்கிற குணத்தின் ஸம்பந்தத்தால் ப்ரஹ்ம ஶப்தமிருக்கிறது. ப்ருஹத்வ குணயோகமானது பரமாத்மாவினிடத்தில் முக்யமாகவும், மற்ற வஸ்துக்களிடத்தில் கௌணமாகவுமிருக் கிறது.*

**ஸ்வாமிந்!** *பரமாத்மாவினிடத்தில் கௌணமாகவும் மற்றவைகளில் முக்யமாகவும் இருப்பதாகவும் ஏன் சொல்லக்கூடாது? எனில், ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் எது* **அநவதிகாதிஶய ப்ருஹத்தோ அதைத்தான்** *முக்யமாக ப்ருஹத் என்கிறோம். ப்ருஹத்வ குண ஸம்பந்தமுள்ள எல்லா வஸ்துக்களிலும் ப்ரஹ்ம ஶப்த ப்ரயோகமில்லாமையால் ஸ்வரூபத்தாலும் குணத்தாலும்* **அநவதிகாதிஶய ப்ருஹத்வம்** *ப்ரஹ்ம ஶப்தத்திற்கு ப்ரவ்ருத்தி நிமித்தம். ஒரு ஶப்தம் எந்த அர்த்தத்தைச் சொல்கிறதோ அதன் அஸாதாரண தர்மம்தான் அதன் ப்ரவ்ருத்தி நிமித்தம். அதாவது கட ஶப்தத்திற்கு கடத்வம் அஸாதாரண தர்மம்.*

**நநு- ★ப்ருஹதி ப்ருஹ்மயதி தஸ்மாத் உச்யதே பரப்ரஹ்ம- ★** *பெரியதாயிருக்கிறது பெரியதாக ஆக்குகிறது என்பதனுல் ப்ரஹ்ம என்று சொல்லப்படுகிறது.* **★ப்ருஹத்வாத் ப்ருஹ்மணத்வாத் ச தத் ப்ரஹ்ம இதி அபிதீயதே ★** *என்று ஶ்ருதியிலும் ஸ்ம்ருதியிலும் ப்ருஹத்வம் ப்ருஹ்மணத்வம் (பெரியதாயிருப்பதும் பெரியதாகச் செய்வதும்) ப்ரவ்ருத்தி நிமித்தமாகச் சொல்லப்பட்டிருக்கும்பொழுது ப்ருஹத்வமாத்ரத்தை ப்ரவ்ருத்தி நிமித்தமாகச் சொல்வது பொருந்துமோ எனில் குணங்களால் ஏற்பட்டிருக்கிற ப்ருஹத்வத்தில் ப்ருஹ்மணத்வம் அடங்கியிருக்கிற தென்பதால் ப்ருஹ்மணத்தைத் தனியாகச் சொல்லவில்லை. ப்ருஹ்மணத்வமென்பது* **★ஸ ச ஆநந்த்யாய கல்பதே ★** *என்று ஶ்ருதி ப்ரஸித்தமான முக்த ஜீவனுக்கு ஸகல ஸங்கோச நிவ்ருத்தி பூர்வக நிரவதிக ஜ்ஞானவிகாஸரூப ஆநந்த்யத்தைக் கொடுப்பதுதான்.* **குணத:** *ப்ரஹ்மத்வமென்பது ஸகல ஹேய ப்ரத்யனீகமாயிருத்தல் - எல்லா கெட்ட குணங்களுக்கும் எதிரிடையாக இருத்தல் க்ஷமா, கருணை முதலான மோக்ஷத்தைக் கொடுப்பதற்கு உபயோகமாக உள்ள குணகணங்களோடு சேர்ந்திருத்தலேயாகும். ஆகையினுல்தான்* **★ ஸ்வபாவத: நிரஸ்த நிகில தோஷ: ★** *என்று ப்ரதிஜ்ஞா வாக்யத்தில் அருளிச்செய்துள்ளார்.*

**நநு** - ஸ்வரூபத்தால் மட்டும் ப்ருஹத்வத்தை நிமித்தமாகச் சொன்னால் போதுமே குணத்தாலும் ப்ருஹத்வத்தை நிமித்தமாக எதற்குச் சொல்லவேண்டும் எனில் ப்ரஹ்ம குணங்களும் ஸ்வரூபத்தால் ப்ருஹத்தாகயிருப்பதால் அவைகளுக்கும் ப்ரஹ்ம ஶப்த வாச்யத்வம் வருமென்பதால் குணைச்ச ப்ருஹத்வம் சொல்லப்பட்டது. இவ்விதமாகில் குணத: ப்ருஹத்வம் மட்டும் நிமித்தமாயிருக்கட்டுமே எனில், ப்ருஹத்வரூப ஶப்த ஶக்தியானது ஸங்கோசமில்லாமல் குணங்களிலும் ஸ்வரூபத்திலும் ஸ்வத: ப்ராப்தமாகையால் இதற்கு பாதகமொன்றுமில்லாமையாலும் ஸ்வரூபேண ப்ருஹத்வம் ஸித்திக்கிறது. ஸ்வரூபத்தாலே ப்ருஹத் என்பதை ★**ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்ரஹ்ம**★ என்கிற ஶ்ருதியானது தெரிவிக்கிறது. அதாவது அநந்த பதம் **தேசத: காலத: வஸ்துத: பரிச்சேதரஹிதம் ப்ரஹ்ம** என்று ஸ்பஷ்டமாகக் கூறுகிறது. குணத: ப்ருஹத்வமென்பது ஸத்வாரக ப்ருஹத்வம். அதாவது குணத்தை இடையிட்டு ப்ருஹத்வத்தை ப்ரஹ்மத்திற்குக் கூறுகிறோம். ஆக ஸ்வரூபேண குணைச்ச ப்ருஹத்வம் புருஷோத்தமன் ஒருவனிடத்திலேயே உள்ளது. மற்றவைகளிடத்தில் கிடையாது.

**நநு** - ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் நிரதிசயமான ப்ருஹத்தான வஸ்துவானது புருஷோத்தமனைக் காட்டிலும் வேறொன்றும் இருக்கலாம் அல்லது வேறாகவே இருக்கலாம் - அந்யதேவ வா ஸ்யாத் என்கிற ஶங்கைக்கு பதிலருளிச் செய்கிறார் **ஸ ச ஸர்வேச்வர ஏவ** - அவன் ஸர்வேச்வரனே என்று. 'ச' ஶப்தமானது ஶங்கையைப் போக்குகிறது. ஸர்வேச்வர ஶப்தத்தாலும் ஏவகாரத்தாலும் ★**தம் ஈஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம்.**★ ப்ரஹ்மா முதலிய ஈஶ்வரர்களுக்கெல்லாம் ச்ரேஷ்டனாயும் மஹேஶ்வரனாயு முள்ளவன். அதாவது ஈஶ்வரர்களாகச் சொல்லப்படுபவன் ப்ரஜாபதி (ப்ரஹ்மா) பசுபதி (சிவன்) இவர்களைக் காட்டிலும் பரமம் - உத்க்ருஷ்டனுயும் மஹேஶ்வரனுயும் சொல்லப்படும் ஶ்ரிய: பதி என்று அர்த்தம். ★**ந தத்ஸமச்ச அப்யதிகச்ச த்ருஶ்யதே** ★அவனுக்கு ஸமானமானவனோ மேற்பட்டவனோ ஒருவனும் காணப்படவில்லை என்ற இரண்டு வாக்யங்களுடைய அர்த்தம் இவ்விடத்தில் விவக்ஷிக்கப்படுகிறது. அதாவது ஸமாதிக தரித்ரத்வாதி ஶ்ருதியினால் வ்யஞ்ஜிக்கப்படுகிறவனுக்கு ஸர்வேச்வரன் என்று ஆக்யா -பெயர். ★**அஜ: ஸர்வேஶ்வர:**★ என்று ஸஹஸ்ரநாமத்தில் படிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். நிரதிஶய ப்ருஹத்வமும் ஸர்வ நியமனாதிகளும் ஒருவனுக்கே உள்ளதாகச் ஶாஸ்த்ரம் கூறுகிறது. மற்றவர்களிடத்தில் ஸர்வேச்வரனுடைய அதீனமாய்க்கொண்டு அவைகள் இருப்பதாகச் சொல்லவேண்டும். உண்மையில் மற்றவர்களிடம் பகவததீனமாகக் கூட நிரதிஶய பரத்வமும் ஸர்வ நியந்த்ருத்வமும் இல்லை என்பதைக் காட்டுகிறது ஸர்வேஶ்வர ஏவ என்னும் அவதாரணம் - ஏவகாரம் - என்று அபிப்ராயம்.

अत: ஆகையால், அநவதிகாதிசய ப்ருஹத்வமுள்ள ப்ரஹ்மத்தினிடத்தில் ப்ரஹ்ம ஶப்தம் முக்யமாயிருப்பதால் - ஸர்வேஶ்வரனுக்கே அப்படிப்பட்ட ப்ருஹத்வ குண யோகித்வாச்ச-ஸம்பந்தம் இருப்பதாலும். என்று அர்த்தம்.

*அந்த ப்ருஹத்வ குணயோகத்தை ஸர்வேஶ்வரனிடத்திலேயே இருப்பதாக எதனால் சொல்கிறீர் - அந்யத்ராபி - வேறிடத்திலும் ப்ரஹ்ம ஶப்தம் ப்ரயோகிக்கப்படுகிறதே? என்கிற ஶங்கைக்கு ஸமாதானம் அருளிச்செய்கிறார்* **தஸ்மாத் அந்யத்ர தத்குண லேச யோகாத் ஔபசாரிக:** என்று, **தஸ்மாத்-** *ப்ரஹ்மத்தைக் காட்டிலும் (புருஷோத்தமனைத் தவிர்த்து) மற்றைய வஸ்துக்களில் அந்த ப்ருஹத்வ குண லேச மிருப்பதினால் - சொற்பாம்சம் இருப்பதினால் ஔபசாரிகமாக - கௌணமாக அவைகளும் ப்ரஹ்ம ஶப்தத்தால் சொல்லப்படுகின்றன.*

**நநு** - *ஸர்வத்ர - எல்லாவற்றிலும் ப்ரஹ்ம ஶப்தம் முக்ய வ்ருத்தமாக ஏன் சொல்லக்கூடாது? அதாவது அவயவ சக்தியினாலேயே ப்ரஹ்ம ஶப்தத்திற்கு அர்த்தம் சொல்லலாமே! எதற்காக ஒன்றிலோ அநேக வஸ்துக்களிலோ சக்தியைக் கல்பிக்க வேண்டும் என்று எண்ணவேண்டாம். அவயவ சக்தியினால் அர்த்தத்தை அறியும்படியாக இருக்குமிடங்களில் ப்ரயோக நியதியின் பொருட்டு ரூடியானது கல்பிக்கப்படுகிறது. அதாவது பங்கஜ ஶப்தமானது பங்காத் ஜாயத இதி பங்கஜம் என்கிற அவயவ வ்யுத்பத்தியினால் தாமரைப்புஷ்பத்தைச் சொல்வதாக இருந்தாலும் சேற்றிலுண்டான அல்லி முதலியவைகளையும் அவயவ வ்யுத்பத்தியினால் பங்கஜ ஶப்தம் சொல்லுமாகையால் ப்ரயோக நியதியின் பொருட்டு ரூடியானது கல்பிக்கப்படுகிறது. அவ்விதமாக-பங்கஜத்வாதிகளில் பத்மத்தில் சொல்லுவது போல் இவ்விடத்திலுள்ள ப்ரஹ்ம ஶப்தத்தில் ஒரு நியமத்தையும் காண்கிறோம். ஆகையினால் ப்ரஹ்ம ஶப்தமானது எவைகளில் ப்ரயோகிக்கப் படுகிறதோ அவ்விடங்களிலெல்லாம் அந்த ஶப்தத்திற்குச் சக்தி இருப்பதாகவே கொள்ளவேண்டும் எனில்* **அநேகார்த்த கல்பநா அயோகாத்.** *பரப்ரஹ்மத்தைத் தவிர மற்றவைகளில் ப்ரஹ்மஶப்த ப்ரயோகமானது அந்யதாஸித்தமாகையால் அநந்யதாஸித்த ப்ரயோக: சக்திம் கல்பயதி என்கிற ந்யாயத்தால் அவைகளில் சக்தியை கல்பிப்பது யுக்கமாகாது.*

*ப்ரஸ்துதமான சோத்யத்துக்கு இதனால் எவ்விதம் பரிஹாரம் சொல்லப்பட்டதாகும்? இந்த கேள்விக்குப் பின் வருமாறு பதில் கூறப்படுகிறது. ப்ருஹதி தாதுவில்* **'மநிந்'** *ப்ரத்யயாந்தமாக நிஷ்பன்னமான ப்ரஹ்ம ஶப்தத்திற்கு ப்ரதானம் முதலியவைகளில் காணப்படுகிற ப்ரயோகமானது அவயவ சக்தியாலல்ல. அப்படியிருந்தால் ப்ருஹத் மஹத் இது முதலிய ஶப்தங்கள் போல் ஆபேக்ஷிகமான ப்ருஹத்வ ஸம்பந்தம் பெற்ற எல்லா வஸ்துக்களிடத்திலும் ப்ரயோகம் வரும். ஆனால் அவ்வாறு ப்ரயோகிக்கப்படுகிறதில்லை. த்ரஸரேணுக்குங்கூட அதைவிட மிகவும் அணுவாயுள்ள வேறு வஸ்துக்களைக் காட்டிலும் மஹிம குணமுள்ளது என்று சொல்லுகிறார்கள். த்ரயணுகம் முதலியவற்றில் ப்ரஹ்ம ஶப்தத்திற்கு ப்ரயோகத்தைக் காணோம். இவ்விதம் எல்லா இடங்களிலும் ப்ரயோகம் காணப்படுவதால் பங்கஜஶப்த வ்யவஸ்தாபகமாயும் குமுதம் முதலிய புஷ்பங்களில் வ்யாவ்ருத்தமாயும் தாமரஸத்திலேயே அநுவர்த்திக்கிறதுமான பத்மத்வ ஜாதியைப் போல ப்ரஹ்ம ஶப்தத்திற்கு விஷயமான ஐந்தாறு வ்யக்திகளில் தொடர்ந்திருக்கிறதும் வேறு வ்யக்திகளை விட்டு விலகி நிற்பதுமான ரூபம் காணப்படாததால்*

அநேக ஶக்தி கல்பிக்க வேண்டியதாக ஏற்பட்டால்- அநந்யதாஸித்தமான ப்ரயோகம் ஶக்தி கல்பகமாகையால் ப்ரஹ்ம ஶப்த ப்ரயோக விஷயமான மற்றவைகளிலும் ப்ருஹத்வ குணலேசத்தின் ஸம்பந்தத்தினால் ப்ரயோகம் அந்யதாஸித்தம். ஆகவே அநேக ஶக்தி கல்பிப்பது ஸரியல்ல. ஆதலால் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி புஷ்கலமாயுள்ள பரமபுருஷனிடத்தில்தான் ப்ரஹ்மஶப்தம் முக்யவ்ருத்தம். மற்றைய இடங்களில் ஔபசாரிகம்தான். 'ஶக்தி ஸங்கோசத்தைப் பொருத்துக்கொள்ளும் ஔபசாரிக ப்ரயோகம் ஸம்மதம்தான்; ஆனல் அது எல்லா இடத்திலும் வரக் கூடாது என்கிற இந்த ந்யாயத்தை மனதில் வைத்துக்கொண்டு- பகவத் ஶப்தம் புருஷோத்தமனிடம்தான் முக்யம் - வேறு வஸ்துக்களிடத்தில் அமுக்யம் என்று ஸ்ரீபராசர மஹர்ஷியால் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்வாமிந் ! ப்ருஹத்வகுண ஸம்பந்தமுள்ள எல்லா வ்யக்திகளிலும் ஒரு ஶக்தியினலேயே முக்யத்வம் ஸித்திப்பதாக இருந்தால் அநேக ஶக்தி கல்பனமோ கௌணத்வமோ ஸம்பவிக்காதே ? என்கிற ஶங்கைக்கு உத்தரம் அருளிச்செய்கிருர் **பகவத் ஶப்தவத்** என்று. பகவத் ஶப்தமானது புருஷோத்தமன் ஒருவனிடத்திலேயே முக்ய வ்ருத்தமாயும் மற்றவர்களிடத்தில் ஔபசாரிகமாகவும் - கௌணமாகவும் சொல்லப்படுவதுபோல் இவ்விடத்திலும் ப்ரஹ்ம ஶப்தமானது புருஷோத்தமனைத் தவிர்த்து மற்றவைகளில் கௌணமாகச் சொல்லப்படுகிறது என்று கூறுவது யுக்தமேயாகும். இவ்விஷயத்தை ஸ்ரீ பராசரர் விளக்கிக் கூறுகிருர்.

तत्र पूज्यपदार्थोक्ति परिभाषासमन्वितः । शब्दोऽयं नोपचारेण अन्यत्र ह्युपचारतः ॥ *(வி 6-5-77)*

*தத்ர- பூஜ்யமான அர்த்தத்தைச் சொல்லும் இந்த பகவத் ஶப்தமானது புருஷோத்தமனிடம் முக்யமாக யோகரூடியினல் ப்ரயோகிக்கப்பட்டதாகிறது. மற்றவர்களிடம் ஔபசாரிகம் என்று ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் தெளிவாக சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம். அதாவது,* ★சுத்தே மஹாவிபூத்யாக்யே★ *என்று ஆரம்பித்து* ★அந்யத்ர ஹி உபசாரத:★ *என்னும் வரையில் பகவத் ஶப்தத்திற்கு யௌகிகார்த்த பௌஷ்கல்யம் - பூர்ணமாக - இருப்பதால் புருஷோத்தமனிடத்தில் பகவத் ஶப்தமானது முக்யமாகச் சொல்லப்படுகிறது என்று அருளிச் செய்துள்ளார். வேறொரு புராணத்திலும்,* ★பகவாநிதி ஶப்தோயம் ததா **புருஷ இத்யபி ! நிருபாதி ச வர்தேதே வாஸுதேவே ஸநாதநே** ★ *(பகவத் ஶப்தமும் புருஷ ஶப்தமும் ஸநாதநமான வாஸுதேவனிடத்தில் நிருபாதிகமாக ப்ரயோகிக்கப் படுகிறது) என்று விளக்கியுள்ளதைக் காணலாம். ஸாக்ஷாத் ப்ரஹ்ம ஶப்தத்தைக் குறித்தும் காருட புராணத்தில்,* ★**வேதே பூரிப்ரயோகாச்ச குணயோகாச்ச ஶார்ங்கிணி - தஸ்மிந்நேவ ப்ரஹ்ம ஶப்தோ முக்ய வ்ருத்தோ மஹாமுநே** ★ *(வேதத்தில் அநேக இடங்களில் பரப்ரஹ்ம விஷயமாக ப்ரஹ்ம ஶப்தம் ப்ரயோகிக்கப்பட்டிருப்பதாலும் ப்ருஹத்வகுண யோகமிருப்பதாலும் சார்ங்கபாணியினிடத்தில் ப்ரஹ்ம ஶப்தமானது முக்ய வ்ருத்தம்) என்று ஆரம்பித்து*

**யஸ்மிந் ப்ரயுஜ்யமாநேது குணயோக: ஸுபுஷ்கல: ।**
**தத்ரைவ முக்ய வ்ருத்தோயம் அந்யத்ர ஹி உபசாரத: ॥**

(எவ்விடத்தில் குணயோகம் புஷ்கலமாக இருக்கிறதோ தத்ரைவ முக்ய வ்ருத்தம். மற்ற இடங்கிளில் தத்குணலேச யோகேந கௌணமாகச் சொல்லப்படுகிறது) என்றும் காருடபுராணத்தில் தார்ஷ்டாந்திக விஷயமாகவே - ப்ரஹ்ம ஶப்தமானது ஶார்ங்கபாணியினிடத்தில் முக்ய வ்ருத்தம் என்று விவரித்துள்ளதைக் காணலாம்.

**(भाष्यम्) तापत्रयातुरैः अमृतत्वाय स एव जिज्ञास्यः । अतः सर्वेश्वर एव जिज्ञासाकर्मभूतं ब्रह्म । ज्ञातुमिच्छा जिज्ञासा । इच्छायाः इष्यमाणप्रधानत्वात् इष्यमाणं ज्ञानम् इह विधीयते ।**

கருத்து-ஆத்யாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதைவிகம் என்கிற மூன்று தாபங்களால் துன்பப்படும் ஸம்ஸாரிகளால் மோக்ஷத்திற்காக அறியத்தக்கவன் அவனே. ஆகையால் அறியவேண்டுமென்கிற விருப்பத்திற்கு கர்மாவாக இருக்கிற ப்ரஹ்மம் ஸர்வேச்வரனே. அறிவதற்கு விருப்பம் - என்கிற பொருளுள்ளது ஜிஜ்ஞாஸா என்னும் பதம். இச்சையானது இச்சைக்கு விஷயமாக இருப்பதை ப்ரதானமாக உடையதாதலால் இச்சிக்கப்படும் ஜ்ஞானமே இங்கு விதிக்கப்படுகிறது.

இப்பொழுது ப்ரஹ்ம ஶப்தமானது முக்ய வ்ருத்தியினால் அநேக அர்த்தங்களை உணர்த்துவதாகக் கொண்டாலும் இந்த ஸூத்ரத்திலுள்ள ப்ரஹ்ம ஶப்தத்திற்கு அர்த்த ஸ்வபாவத்தால் புருஷோத்தம பரமாகத்தான் அர்த்தம் சொல்லவேண்டுமென் பதாக அருளிச்செய்கிறார். தாபத்ரயாதுரை: அம்ருதத்வாய ஸ ஏவ ஜிஜ்ஞாஸ்ய: என்று. இவ்விதம் அருளிச் செய்திருப்பதானது இதரருடைய வாதத்தை அங்கீகரித்துச் சொல்வதாகும். அதாவது அந்வாருஹ்யவாதம். விஶேஷித்துத் தம்முடைய பக்ஷத்தை த்ருடீகரிப்பதாக ஆகும். ஜாதி குணாதி நிமித்தத்வ பஹுரூபத்வ பக்ஷேஷ்வபி - ஜாதி குணாதிகளின் நிமித்தமாக அநேகங்களில் ரூடமாயிருப்பதாகச் சொல்லும் பக்ஷத்திலும் ஸமபிவ்யாஹ்ருத பதாந்தரங்களால்-சேர்ந்திருக்கும் மற்ற பதங்களைக் கொண்டு அர்த்த நிர்ணயம் பண்ணுவது ப்ராமாணிகமாகையால் இந்த ஸூத்ரத்தி லுள்ள ப்ரஹ்ம ஶப்தத்திற்கு அர்த்த ஸ்வபாவத்தால் புருஷோத்தம பரத்வமே சொல்வது யுக்தமேயாகும்.

ஸ்வாமிந்! நீர் சொல்லுவது போல் ஏகத்ரைவ-ஒன்றிலேயே ப்ரஹ்ம ஶப்தத்திற்கு சக்தியானது இருக்கட்டும். இந்த ஸூத்ரத்தில் பேதகாபாவாத் - புருஷோத்தமனைத் தான் இந்த ப்ரஹ்ம ஶப்தம் சொல்லுகிறது என்பதற்குக் காரணம் இல்லாமையால்-எல்லாவற்றிலும் பொதுவாக இருப்பதாக ஏன் சொல்லக் கூடாது? எனில்

नास्ति भेषजमन्यत्र नारायणरसायनात् (ஸம்ஸாரமாகிற வ்யாதிக்கு நாராயணன் என்கிற மருந்தைத் தவிர வேறொரு மருந்தில்லை)
वासुदेवं परित्यज्य योन्यं देवं उपासते। तृषितो जाह्नवीतीरे कूपं खनति दुर्मतिः ।।

(வாஸுதேவனை விட்டு தேவதாந்தரத்தை உபாஸிப்பவன் - தாகமுள்ளவன் கங்கைக் கரையில் கங்கா ஜலத்தைப் பருகாமல் கிணறுவெட்டி ஜலம் எடுக்க ப்ரயத்னப்படும்

மூடனைப் போன்றவனுவான்) இது முதலான ப்ரமாணங்களை அநுஸரித்து **தாபத்ரயாதுரை: அம்ருதத்வாய ஸ ஏவ ஜிஜ்ஞாஸ்ய:** என்று அருளிச்செய்கிறுர். இவ்விடத்தில் முக்யார்த்தம் சொல்லுவதில் யாதொரு பாதகமுமில்லை. பகவான் ஒருவனே ஸ்வதந்த்ரனுன ஸ்வாமி. இதரர்கள் அஸ்வதந்த்ரர்கள். அவர்கள் மோக்ஷத்தை அடைவதன் பொருட்டு அறியத்தக்கவர்கள் அல்லர்.

समाने वृक्षे पुरुषो निमग्नोऽनीशया शोचति मुह्यमानः ।
जुष्टं यदा पश्यति अन्यमीशं अस्य महिमानं इति वीतशोकः ।। (श्वे.उ. ४ अ ७ वा)

ஒரே சரீரத்தில் ஜீவாத்மாவானவன் ப்ரக்ருதியினுலே மோஹத்தை அடைந்தவனுய்க் கொண்டு ஸ்தூலோஹம் க்ருஶோஹம்-என்று தாதாத்ம்ய புத்தியினுல்-ஶரீரத்தையே ஆத்மாவாக எண்ணி ஶரீர ஸம்பந்த ப்ரயுக்தமாக துக்கங்களை அனுபவிக்கிறுன். இவ்விதமுள்ள ஜீவாத்மாவானவன் எப்பொழுது தன்னைக்காட்டிலும் தாரகத்வ, நியந்த்ருத்வ சேஷித்வாதிகளினுல் விலக்ஷணனுய், தன்னுடைய உபாஸநாதி கர்மாக்களினுல் ஸந்தோஷத்தை அடைந்தபரமாத்மாவை நிகில ஜகதீஶாநலக்ஷணம் அவனுடைய மஹிமையையும் பார்க்கிறுனே, அப்பொழுது சோகமற்றவனுக ஆகிறுன் என்கிற ஶ்ருதியும் ஸ்ம்ருதிகளும் பரமாத்மாதான் தாபத்ரயங்களைப் போக்கடித்து மோக்ஷத்தைத்தரவல்லவன் என்று கூறுகின்றன. காராக்ருஹத்தில்-ஜெயிலில் உள்ள ஒருவன் அவனைப்போன்று ஜெயிலிலுள்ள மற்றெருவனுல் விடுவிக்கப்பட முடியாதல்லவா ? அதுபோல் ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள மற்றெருவன் தாபத்ரயாதுரர்களால் உபாஸிக்கத்தக்கவனல்லன். मन्तव्यः (மனனம் செய்யத்தக்கவன்) अन्वेष्टव्यः (அறியத்தக்கவன்) என்றும் ஸர்வேச்வரனே விசாரிக்கத்தக்க வன் என்றும் ஶ்ருதி கூறுகிறது. அம்ருத ஶப்தத்தாலும் ஏவகாரத்தாலும் तमेवं विद्वान् अमृत इह भवति नान्यः पन्था अयनाय विद्यते என்றும் तमेव विदित्वा இது முதலான ஶ்ருதிகளின் அர்த்தம் விவக்ஷிக்கப்பட்டது. அதாவது இவ்வாக்யத்துக்கும் ஶ்ருதிகளுக்கும் அவிரோதமானது ஸ்தாபிக்கப்பட்டதாகிறது.

ननु - ப்ரத்யகாத்மாவையும் सोन्वेष्टव्यः என்று சொல்லியிருப்பதாலும் नात्मा श्रुतेः இத்யாதிகளால் ஜீவாத்மாவையும் மேலே நிரூபணம் பண்ணப்போவதாலும் स एव என்று அவதாரணம் இவ்விடத்தில் சொல்லமுடியாது என்கிற ஶங்கையை பரிஹரிக்கிறுர் अतः என்று ஶப்த சக்த்யா ப்ரஸ்துதார்த்த .ஸ்வாபாவ்யாச்ச **இத்யர்த்த:; தத் உபயம் ஸர்வேஶ்வர இத்யாதி பதத்வய அபிப்ரேதம்** -கீழ் கூறப்பட்ட இந்த ஶப்த ஸாமர்த்யத்திலும்-அர்த்த ஸாமர்த்யத்திலும் என்பது अतः ஶப்தத்திற்குப் பொருள்.

**ஜிஜ்ஞாஸாகர்மபூதம்-ஜிஜ்ஞாஸயா ப்ராப்தும் இஷ்டதமம் இத்யர்த்த:** - இவ்விடத் தில் ப்ரதானமாக ஜிஜ்ஞாஸ்யன் பரமாத்மா. பகவானை உபாஸிப்பதற்கு முன்-பக்தியோகத்தைப் பண்ண ஆரம்பிப்பதற்கு முன்னம் ஆத்மவிஷயமான ஜ்ஞானயோகத்தைப் பண்ண வேண்டியிருப்பதாலும் பகவதுபாஸநத்திலும் விஶேஷ ணமாக ஆத்மாவை அநுஸந்திக்க வேண்டியிருப்பதாலும் ஆத்மாவைப் பற்றியும் சிந்திக்க வேண்டியிருக்கிறது. இந்திரனுக்குப் ப்ரஜாபதி உபதேசித்த வாக்யங்களில்

(தஹர வித்யாப்ரகரணத்தில்) ப்ரத்யகார்த்த ஜ்ஞானமானது ப்ரக்ருத பரவித்யையின் பொருட்டே என்று மேலே கூறப்போவதால், **'ஸர்வேஶ்வர ஏவ'** என்று ஏவகாரம் சொன்னதில் விரோதம் ஒன்றுமில்லை.

பிறகு ஜிஜ்ஞாஸா ஶப்தத்திற்கு வ்யாக்யானம் எழுதுவதற்கு முன்பாக அந்த ஶப்தத்திலுள்ள ப்ரக்ருதி ப்ரத்யயங்களைப் பிரித்துக்காட்டுகிறார்- **ஜ்ஞாதும் இச்சா ஜிஜ்ஞாஸா** என்று. ஜ்ஞானம் ப்ரக்ருதியின் அர்த்தம். இச்சை **ஸந்** ப்ரத்யயத்தின் அர்த்தம். ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா கர்தவ்யா என்று இச்சையானது விதிக்கப்படுவதாக சொல்லப்பட்டது. அதாவது ப்ரஹ்ம விஷயமான இச்சையானது பண்ணத்தக்கது என்று கூறப்பட்டது. இச்சை என்பது விஷயவைலக்ஷண்யத்தைச் சார்ந்து இருப்பதால் அது कथं विधेयं எவ்விதம் விதிக்கத்தக்கதாக ஆகும் என்கிற ஸந்தேஹம் வர அருளிச் செய்கிறார் इच्छाया என்று. ஜ்ஞானமானது விதிக்கத்தக்கதாகும் என்று சொல்லுகிறார் इष्यमाण प्रधानत्वात् என்று. सन् ப்ரத்யயத்தால் சொல்லப்பட்ட இச்சைக்கு தாத்வர்த்தமான ஜ்ஞானமானது கர்மாவாகிறது. கர்மாவிற்கு க்ரியை சேஷபூதம். கர்மஸித்திக்காகவே க்ரியை இருப்பதால் யாக ஸம்பந்தமான வ்ரீஹ்யாதிகளில் ப்ரோக்ஷணம் முதலியவைகள் யாகரூப கர்மாவிற்கு சேஷமாவது போல் என்று அர்த்தம். ''कर्तुः क्रियया आप्तुं इष्टतमत्वं हि कर्मत्वम्' கர்த்தாவினுடைய க்ரியையினால் அடைவதற்கு எது ப்ரதானமாக விரும்பப்படுகிறதோ அது கர்மா. ஆகையால் ப்ரக்ருதிக்கு அர்த்தமான ஜ்ஞானத்தைக் கர்மாவாக உடைய இச்சையானது அந்த கர்மஸித்தியை ப்ரயோஜனமாகக் கொண்டது. ஆகவே இச்சையானது இச்சிக்கப்படுகிற ஜ்ஞானத்தைப் ப்ரதானமாகக் கொண்டிருப்பதால் இஷ்யமாண மாயிருக்கும் ஜ்ஞானமே விதேயம் என்று பொருள்.

ननु - ஜிஜ்ஞாஸையானது கர்த்தவ்யமாக ஸ்பஷ்டமாக விதித்திருக்கும்போது ஜ்ஞானத்தை விதேயமாக எவ்வாறு கூறலாம்?

**பரிஹாரம்**-स्नात्वा भुञ्जीत (ஸ்நாநம் செய்து சாப்பிடக்கடவன்) प्राङ्मुखो भुञ्जीत (கிழக்கு முகமாக உட்கார்ந்து சாப்பிடக்கடவன்) என்னுமிடத்தில் भुजि தாதுவானது விதிப்ரத்யயாந்தமாக இருப்பதால்-போஜனத்தை விதித்திருப்பதால்-போஜனத்தைப் பண்ணக்கடவன் என்பதாயிற்று. போஜனமானது ராக ப்ராப்தமாகையால் அதை விதிக்க வேண்டியதில்லை. ஆகையால் அர்த்த ஸ்வபாவத்தால் ஸ்நாநம் செய்த பிறகே சாப்பிடவேண்டுமென்று மட்டும் விதிப்பதாகக் கொள்ளவேண்டும். அவ்விரண்டும் अप्राप्ते हि शास्त्रमर्थवत् भवति - இதற்குமுன் சாஸ்த்ரத்தில் சொல்லப்படாததால் அப்ராப்தமான அர்த்தத்தை இப்பொழுது ஶாஸ்த்ரம் விதிப்பதாகக் கொள்ளவேண்டும். அவ்விடங்களில் ராகப்ராப்தமான போஜனமானது அநுவதிக்கப்படுகிறது என்று சொல்லுவதுபோல் இவ்விடத்திலும் ராகப்ராப்தமான இச்சைக்கு விதேயத்வம் ஸம்பவிக்காததலால் அந்த இச்சைக்கு விதேயமாயிருக்கிற விசாராத்மக ஜ்ஞானமே இவ்விடத்தில் தாத்பர்யத்தால் விதிக்கப்படுகிறது. **★இஷ்யமாணம் ஜ்ஞானம் இஹ அபிப்ரேதம்★** என்று ஸாரத்தில் அருளிச் செய்திருப்பதைக் காணலாம்.

இவ்விதமாகில் 'अथातो ப்ரஹ்ம ஜ்ஞானம்' என்றே சொல்லலாமே. எதற்காக அஜாகளஸ்தனம் போல் வ்யர்த்தமாக 'ஸந்' ப்ரத்யயத்தைப் ப்ரயோகிக்க வேண்டும்? 'अधिकं अधिकमर्थं सूचयति' என்கிற ந்யாயத்தால் ஸமாதாநம் அருளிச் செய்கிறார் இஷ்யமாணம் ஜ்ஞானம் இஹ விதீயதே என்று. ஸந்திக்த ஸப்ரயோஜந விஷயதயா ராகதப்ராப்தமான விசாரரூபம் ஜ்ஞானம் சொல்லப்படுகிறது. உபாஸநாதிகளைப் போல வைதமில்லை-விதிக்கப்பட்டதல்ல என்பதை ஸூசிப்பிக்கிறது. ஆதலால் ஸந்ப்ரத்யயம் ஸார்த்தகமாகிறது என்று அபிப்ராயம். ஜ்ஞான ஶப்தச்ச அத்ர ஔசித்யாத் உக்த விஶேஷபர: -விசாரரூபம் ஜ்ஞானம் என்று அர்த்தம்.

**இஹவிதீயதே-இஹ**- மீமாம்ஸை என்ற பெயருடைய ஶாஸ்த்ரத்தின் உத்தரபாக ஆரம்பத்தில் என்று அர்த்தம். இவ்விதம் अथातो धर्मजिज्ञासा என்கிறவிடத்திலும் அர்த்தம் கொள்ளவேண்டும். ராகப்ராப்தமான விசாரத்தில் விதீயதே என்று சொல்லுவது எப்படிப் பொருந்தும்?

**பரிஹாரம்**- ராகப்ராப்தமாக இருந்தாலும் அநாரம்பணீயத்வப்ரமம்- ஆரம்பிக்கக்கூடாது என்கிற ப்ரமம் உண்டானால் அதைப் போக்குவதற்காக விதீயதே என்று அருளிச் செய்துள்ளார்.

* * * *

**(भाष्यम्) मीमांसापूर्वभागज्ञातस्य कर्मणः अल्पास्थिरफलत्वात्, उपरितनभागवसेयस्य ब्रह्मज्ञानस्य अनन्ताक्षयफलत्वाच्च पूर्ववृत्तात् कर्मज्ञानादनन्तरं तत एव हेतोः ब्रह्म ज्ञातव्यम् इत्युक्तं भवति। तदाह वृत्तिकारः - ''वृत्तात् कर्माधिगमादनन्तरं ब्रह्मविविदिषा'' इति । वक्ष्यति च कर्मब्रह्ममीमांसयोःऐक शास्त्र्यम् - 'संहितमेतत् शारीरकं जैमिनीयेन षोडशलक्षणेन इति शास्त्रैकत्वसिद्धिः'' इति ॥**

**கருத்து**- மீமாம்ஸையின் பூர்வபாகமான கர்மகாண்டத்தால் அறியப்பட்ட கர்மாக்கள் அல்பங்களாயும் நச்வரங்களாயும் உள்ள பலன்களுடன் கூடியதாயிருக்கிறது. மேலேயுள்ள உபநிஷத் பாகத்தில் நிச்சயிக்கப்பட்டுள்ள ப்ரஹ்ம ஜ்ஞானமானது முடிவில்லாததாயும், அழிவில்லாததாயுமுள்ள பலத்தை உடையதாயிருக்கிறது. முன்பு நடைபெற்றிருக்கிற கர்மவிசாரத்திற்குப் பிறகு கர்மாக்கள் அல்பாஸ்திர பல ப்ரதங்கள் என்கிற காரணத்தாலேயே ப்ரஹ்மம் அறியத்தக்கதென்று கூறப்பட்டதாகிறது. முன்பு நடந்த கர்ம விசாரத்திற்குப் பிறகு ப்ரஹ்மத்தை அறியவேண்டுமென்கிற இச்சை-விருப்பம்-என்று பகவத் போதாயனர் வ்ருத்தி க்ரந்தத்தில் அருளிச் செய்துள்ளார். கர்ம மீமாம்ஸை ப்ரஹ்ம மீமாம்ஸை இரண்டும் ஒரே ஶாஸ்த்ரம் என்று இனி சொல்லப்போகிறார். இந்த ஶாரீரக ஶாஸ்த்ரமானது பதினாறு அத்யாயங்களுடன் கூடின ஜைமிநி ப்ரோக்தமான பூர்வ மீமாம்ஸையோடு நியத பௌர்வாபர்யம் (நியதமான பூர்வபாகம், பின் பாகம்) உள்ள வ்யாக்யேய

வ்யாக்யாநரூபங்களாக இசைந்து இருப்பதனுல் ஒரே ஶாஸ்த்ரம் என்பது ஸித்திக்கிறது.

**விரிவுரை-** பிறகு மீமாம்ஸா என்று தொடங்கி ஸூத்ரத்தினுடைய வாக்யார்த்தத்தைக் கூறுகிறுர். 'அத்ர' இவ்விடத்தில் **பூர்வ வ்ருத்தாத் கர்ம ஜ்ஞாநாதநந்தரம் தத ஏவ ஹேதோ;** என்று अथ, अत: ஶப்தங்களுடைய அர்த்தம் சொல்லப்பட்டது. **ப்ரஹ்ம ஜ்ஞாதவ்யம்** என்பதினுல் ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா பதத்தின் அர்த்தம் சொல்லப்பட்டது. **ஜ்ஞாதவ்யம்-விசாரயோக்யம்** -விசாரிக்கத்தக்கது என்று அர்த்தம். **தத ஏவ** என்கிற ஏவ காரத்தால் ஸூத்ரத்திலுள்ள अथ ஶப்தத்தால் பலிதமான ஶாஸ்த்ராந்தரங்களுடைய ஜ்ஞானத்தின் நைரபேக்ஷ்யம் அபிப்ரேதம். **உக்தம் பவதி** -ஶப்தத்தாலும் அர்த்தத்தாலும் இவ்விதம் உக்தம் பவதி என்று அபிப்ராயம்.

இந்த ஸூத்ரத்திற்கு இந்த அர்த்தம் எவ்வாறு ஏற்படும் என்ற ஸந்தேஹம் வர, அதை உபபாதிக்கிறுர். **மீமாம்ஸா** இது முதலியதால். கர்ம ப்ரஹ்ம மீமாம்ஸைகள் ஒரே ஶாஸ்த்ரமாதலால், अथ, अत: இது முதலான பதங்களுக்கு இவ்விதமே பொருள் கூறவேண்டும். நியத பௌர்வாபர்ய- இரண்டு பாகங்களுடைய வேதமாகிற ப்ரபந்தத்திற்கு-ஶாஸ்த்ரத்திற்கு வ்யாக்யானரூபமாக இருப்பதால் கர்ம ப்ரஹ்ம மீமாம்ஸா ஶாஸ்த்ரங்களிரண்டும் ஒரே ஶாஸ்த்ரம் என்கிறோம்.

இவ்விடத்தில் வ்யாக்யானம் பண்ணத்தக்க வேதமானது பூர்வ, உத்தர (முன்பகுதி பின்பகுதி) என இரண்டு பாகங்களாக இருக்கிறது என்ற காரணத்தினுல் வ்யாக்யானமான மீமாம்ஸையும் பௌர்வாபர்ய விஶேஷ விசிஷ்ட பாகத்வய ரூபமாக இருப்பதானது பதயோஜனையிலும் வாக்ய யோஜனையிலும் கூறத்தக்கது. அவ்வாறு இருந்தபோதிலும் க்ரந்தத்தைச் சுருக்கமாகச் சொல்லுவதின் பொருட்டு ஸூத்ரத்தின் பதயோஜனையில் வ்யாக்யேயமான (வ்யாக்யானிக்கத்தக்க) வேதத்தின் பௌர்வாபர்யத்தை மட்டுமே, ★அதீத ஸாங்க ஸசிரஸ்க வேதஸ்ய★ என்று அருளிச் செய்துள்ளார். ஸூத்ரத்தின் வாக்ய யோஜனையைச் சொல்லும் இப்ரகரணத்திலோ என்றுல் வ்யாக்யானமும் நியத பௌர்வாபர்யங்களான இரண்டு பாகங்களோடு கூடியிருப்பதால் வ்யாக்யானத்தையும் ஒரே ஶாஸ்த்ரமாக அருளிச் செய்துள்ளார். இப்பௌர்வாபர்ய நியமங்கள் இரண்டிடத்திலும் அநுஸந்திக்கத்தக்கவைகள்.

भाग ஶப்தங்களால் மீமாம்ஸா இரண்டும் ஒரேஅவயவி-ஒன்றே என்பது ஸூசிதம். பூர்வ உபரிதன ஶப்தங்களால் முற்பகுதி பிற்பகுதி என்றும் வரிசைப்படுத்திக் காண்பிக்கப்பட்டது. கர்ம ப்ரஹ்ம ஶப்தங்கள் நடைபெற்ற, இனி நடைபெறப் போகிறவைகளைத் தெரிவிக்கின்றன. அல்பாஸ்திரபலத்வ அநந்தஸ்திரபல ஶப்தங்களால் அவைகளுக்கு ஹேது ஹேதுமத்பாவம் உபபாதிக்கப்பட்டதாகிறது. இவ்விதம் க்ரம நியதியுடன் கூடிய வ்யாக்யேயமான ஒரு க்ரந்தத்திற்கு பூர்வோத்தர மீமாம்ஸைகள் வ்யாக்யானமாக இருப்பதால் கர்ம ப்ரஹ்ம மீமாம்ஸா ஶாஸ்த்ரங்களுக்கு ஐகஶாஸ்த்ர்யம் ஏற்படுவதால் ஸூத்ரத்திற்குக் கீழே கூறப்பட்ட அர்த்தங்களே பொருத்தமானவை.

ACAD ... ARCH
18481

*பாஷ்யத்தின் ஆரம்பத்தில் வ்ருத்திக் க்ரந்தத்தை அநுஸரித்து இந்த வ்யாக்யானம் பண்ணப்படுகிறது என்று ப்ரதிஜ்ஞை பண்ணியபடி தாம் அருளிச்செய்த ஐகஶாஸ்த்ரயத்திற்கு வ்ருத்திகாரருடைய ஸம்வாதத்தைத் தெரிவிக்கிறார்* **ததாஹ வ்ருத்திகார:** *என்று. கீழே நடைபெற்ற கர்ம விசாரத்திற்குப் பிறகு ப்ரஹ்மத்தை அறியவேண்டுமென்றே விருப்பம் என்று வ்ருத்திகாரர் அருளிச்செய்துள்ளார்.* **வ்ருத்தாத்** *என்று தொடங்கியிருப்பதும்* **ஸம்ஹிதம்** *என்கிற பதத்தை முதன்மையாகக் கொண்டிருப்பதும் வ்ருத்திக்ரந்தத்தில் காண்க. அதாவது*

वृत्तात् कर्माधिगमादनन्तरं ब्रह्मविविदिषा इति। वक्ष्यति च कर्मब्रह्म मीमांसयोः ऐकशास्त्र्यं सहितमेतत् शारीरकं जैमिनीयेन षोडशलक्षणेनेति शास्त्रैकत्वसिद्धिः *என்று*

*ஶாரீரகம் -ப்ரஹ்ம மீமாம்ஸை.* जगच्छरीरकः - *ஜகத்தைச் ஶரீரமாக உடையவன் பரமாத்மா. (சேதநங்களையும்-அசேநதங்களையும் ஶரீரமாகக் கொண்டிருப்பதால் பரமாத்மா ஶாரீரன் எனப்படுகிறான்)* ★**தஸ்யைஷ ஏவ ஶாரீர ஆத்மா**★ *(அவனுக்கு அந்த ஶாரீரனே ஆத்மா) என்கிறது ஶ்ருதி. அந்த ஶாரீரனை விஷயமாகக் கொண்ட ஶாஸ்த்ரம் ஶாரீரகம்* ★**ஶாரீரம் காயதி-ப்ரதிபாதயதி இதி ஶாரீரகம்.**★ *ஶாரீரனான பரமாத்மாவைப் பற்றிய ஶாஸ்த்ரம். அதாவது அந்த பரமாத்மாவைப் ப்ரதிபாதிக்கும் ஶாஸ்த்ரம் ஶாரீரக ஶாஸ்த்ரம் எனப்படுகிறது. இந்த ஶாரீரக ஶாஸ்த்ரமானது* **ஷோடஶலக்ஷணேந**-*பதினாறு அத்யாயங்கள் கொண்ட பூர்வ மீமாம்ஸையோடு* **ஸம்ஹிதம்**-*ஸங்கதம்-சேர்ந்தது. அதாவது நியத பௌர்வாபர்யத்துடன் கூடின வ்யாக்யேயமான வேதத்திற்கு வ்யாக்யானரூபமாக இருப்பதால் ஸங்கதமென்று கருத்து.* अर्थैकत्वात् एकं वाक्यम् *(பொருள் ஒன்றாகவே இருப்பதால் வாக்யம் ஒன்று)* **என்கிற** *ந்யாயத்தால் ப்ரதிபாத்யவஸ்து ஒன்றாக இருப்பதால் வ்யாக்யேயமான வேதத்திற்கு ஏக ப்ரபந்தத்வம் கூடும். வேதம் புருஷார்த்தபரமாகவும்-தர்ம அர்த்த, காம, மோக்ஷரூப பலன்களைப் பற்றித் தெரிவிப்பதாகவும்-ப்ரஹ்ம பரமாகவும் இருப்பதால் அர்த்தைகத்வம் சொன்னது-ப்ரதிபாத்யவஸ்து ஒன்றாக இருப்பதால் உபபந்நமாகிறது.* ★**ஸர்வே வேதா: யத்பதம் ஆமநந்தி**★ *(எல்லா வேதங்களும் அடையத்தக்க எந்த ப்ரஹ்மத்தைச் சொல்லுகின்றனவோ* ★**வேதைஶ்ச ஸர்வை: அஹமேவ வேத்ய:**★*[கீதை 15-15](எல்லா வேதங்களாலும் நானே அறியத்தக்கவன்) என்ற ஶ்ருதி ஸ்ம்ருதிகள் கூறுவதைக் காணலாம். வேதார்த்த விசாரம் தொடர்ந்து வருவதால் மீமாம்ஸைக்கு ஏக ப்ரபந்தத்வம் ஸித்திக்கிறது. இந்த ஐகஶாஸ்த்ர்யத்தால் கர்மவிசாரத்திற்கு பூர்வ வ்ருத்தத்வம் ஆக்ஷிப்தமாகிறது.*

**நநு**--*கர்ம ப்ரஹ்ம மீமாம்ஸைகள் இரண்டும் ஒரே ஶாஸ்த்ரம் என்று சொன்னால் அப்பொழுது ஶாஸ்த்ராரம்பத்தில்* अथातो वेदार्थजिज्ञासा *என்று இரண்டு மீமாம்ஸைகளுக்குப் பொதுவாக ப்ரதிஜ்ஞை பண்ணியிருப்பார். அவ்விதமாகப் ப்ரிதிஜ்ஞை பண்ணவில்லை. ஆனால் கர்ம விசாரத்திற்குத் தக்கவாறு* अथातोधर्मजिज्ञासा *என்று ப்ரதிஜ்ஞை பண்ணப்பட்டிருக்கிறது. ஆகையால் ஐகசாஸ்த்ர்யம்-இரண்டும் சேர்ந்து ஒரே சாஸ்த்ரம் என்று சொல்வதற்கில்லை.*

**பரிஹாரம்**-अथातो ब्रह्मजिज्ञासा என்றே இரண்டு பாகங்களுக்கும் ஸாதாரணமாக இருக்கும் அர்த்தத்தின் ப்ரதிஜ்ஞை. கர்மவிசாரமானது ப்ரஹ்ம மீமாம்ஸையின் மூன்றுவது அத்யாயத்தின் நான்காவது பாதத்தில் சேர்ந்துவிடுகிறது. கர்மவிசாரமானது ப்ரஹ்ம விசாரத்தில் அந்தர்கதமாக (உள்ளடங்கியதாக) இருந்தபோதிலும் தனிப்படுத்தப்பட்டிருப்பது உபபத்திமத்தாகிறது. அதாவது நிக்ரஹாந்தர்கதமான **சலம்** (சலம் என்பது அர்த்தாந்தர அபிப்ராயத்தால் ப்ரயோகிக்கப்பட்ட வாக்கியத்திற்கு வேறு அர்த்தத்தைக் கல்பித்து தூஷிப்பது)-ஜாதிகள்- அஸதுத்தரம்-தவறுன பதிலைச் சொல்லுவது இரண்டும் ஆஹ்நிக பேதத்தால் எவ்விதம் தனித்துச் சொல்லப்பட்டிருக்கிறதோ, ★**நிக்ரஹாந்தர்கதமான ஹேத்வாபாஸங்கள்** ★ (ஹேதுக்களைச் சேர்ந்த தோஷங்கள் அல்லது துஷ்ட ஹேதுக்கள்) தனியாக வேறு அத்யாயத்தில் படிக்கப்பட்டிருக்கின்றனவோ அவ்விதமே இங்கு சொல்லப்படுவதும் யுக்தமேயாகும். அநேக க்ரந்தங்களால் உபபாதிக்கத்தக்கதாக இருப்பதைப் பற்றி தனியாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

கர்மவிசாரத்திற்கு பூர்வபாவித்வமானது உபஜீவ்ய உபஜீவக பாவாதிகளால் ஸித்திக்கிறது. एतदुक्तं भवति - அர்த்த க்ரமத்தைக் கொண்டு பார்த்தால் ப்ரஹ்ம மீமாம்ஸையில் மூன்றும் அத்யாயம் நான்காம் பாதத்தில் கர்மவிசாரமானது ஸங்கதமாகிறது. அறிவதற்கு ஸௌகர்யமாக இருப்பதால் (ப்ரதிபத்தி ஸௌகர்ய க்ரமத்தால்) பாடக்ரமத்தை அநுஸரித்து கர்மவிசாரத்திற்கு பூர்வபாவித்வமானது பொருத்தமுள்ளதாகிறது.

ननु - अथातो ब्रह्मजिज्ञासा इति இரண்டிற்கும் சேர்த்து ஸாதாரணமான-பொதுவான ப்ரதிஜ்ஞை என்று சொல்லவொண்ணுது. அவ்விதம் சொன்னுல் अथ ஶப்தத்திற்கு கர்மவிசாராநந்தர்யம் சொல்லமுடியாது. மேலும் கர்ம விசாராநந்தர்யமானது-விம்ஶதி-இருபது அத்யாயங்களைக் கொண்ட மீமாம்ஸா ஶாஸ்த்ரத்திற்கு ஸம்பவிக்காது. अपितु நான்கு அத்யாயங்களுக்கே கர்ம விசாராநந்தர்யம் ஸம்பவிக்கும் என்கிற அஸ்வாரஸ்யம் ஏற்படுகிறது.

இதற்கு பரிஹாரம் சொல்லுகிறும், கேண்மின். இரண்டு ஶாஸ்த்ரங்களுக்கும் அஸாதாரணமாயிருக்கிற இரண்டு ப்ரதிஜ்ஞைகள் செய்யப்பட்டால் ஸாதாரணமான அர்த்த ப்ரதிஜ்ஞை பண்ணப்பட்ட போதிலும் கூட அஸாதாரணமான அர்த்தம் தனித்தே ப்ரதிஜ்ஞை செய்யலாம். பூர்வ மீமாம்ஸையின் ஆரம்பத்தில் अथातो धर्मजिज्ञासा என்று தர்ம ஜிஜ்ஞாஸையானது ஸாதாரணமாக பொதுவாக ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டிருந்தபோதிலும் அதே ஶாஸ்த்ரத்தில் மேலே अथातो शेषलक्षणम्, अथातो क्रत्वर्थपुरुषार्थयोः जिज्ञासा என்று அஸாதாரணமான அர்த்த விஷயமான சில ப்ரதிஜ்ஞைகளும் பண்ணப்பட்டிருப்பதைக் காணலாம். ஆகையால், இரண்டு பாகங்களுக்கும் அஸாதாரணமாயிருக்கிற அர்த்தங்களின் ப்ரதிஜ்ஞையினுல் அதை அநுஸரித்திருக்கிற ஸாதாரணமான அர்த்தத்தின் ப்ரதிஜ்ஞையும் ஆர்த்தமாக ஆகலாம் என்று முதலில் अथातो धर्मजिज्ञासा என்று ப்ரதிஜ்ஞை பண்ணப்பட்டது. இவ்விதமாக தர்க்க ஶாஸ்த்ரத்திலும் ஜாதி விஷயமாகப் பண்ணப்பட்டிருப்பதைக் காணலாம்.

ஆகையினுலேயே अथातो वेदार्थजिज्ञासा என்று பண்ணப்படவில்லை. अथवा - अथातोधर्मजिज्ञासा என்பதே இரண்டிற்கும் ஸாதாரணமான ப்ரதிஜ்ஞை. अलौकिक श्रेयः साधनं हि धर्मः (அலௌகிகமாகவும் ச்ரேயஸ்ஸுக்கு ஸாதகமாகவும் இருப்பதல்லவோ தர்மம்) அதை அநுஸரித்திருப்பது ப்ரதிபாதிக்கத்தக்கது தர்மம்-ஸாத்யதர்மமென்றும் ஸித்ததர் மமென்றும் இருவகைப்படும். ஸித்த ரூபமான ப்ரஹ்மத்தினிடத்தில் தர்ம ஶப்த ப்ரயோகமானது மஹாபாரதத்தில்

ये च वेदविदो विप्राः ये च अध्यात्मविदो जनाः। ते वदन्ति महात्मानं कृष्णं धर्मं सनातनम्॥ என்று படிக்கப்பட்டுள்ளது.

வேதார்த்தத்தையறிந்த ப்ராஹ்மணர்களும் வேதாந்தார்த்தத்தை அறிந்த ப்ராஹ்மண ஶ்ரேஷ்டர்களும் மஹாத்மாவான க்ருஷ்ணனே ஶாஶ்வதமான தர்மம் என்று சொல்லுகிறுர்கள்.) இவ்விதமே ஆப்தர்களாக உள்ள ப்ராஜ்ஞர்கள்- ★அலௌகிகத்வேஸதி ச்ரேய: ஸாதநத்வம்★-தர்மத்தின் ப்ரவ்ருத்தி நிமித்தமாக (அஸாதாரண தர்மமாக) நிச்சயித்து ஸித்தரூபமான அர்த்தத்தில் தர்ம ஶப்தத்தைப் ப்ரயோகித்துள்ளார்கள். ஆகையால் இரண்டு பாகங்களிலும் விசாரத்திற்குப் பொதுவானது முதலில் ப்ரதிஜ்ஞை பண்ணப்பட்டது. அவற்றில் தர்ம ஶப்தத்திற்கு ஸாத்யதர்மவிஷயமாக ப்ரஸித்திப்ராசுர்யமிருப்பதாலும் புத்திஸ்தமாக இருப்பதாலும் வேதத்தின் பூர்வபாகத்தால் அறியப்பட்டபடியால் முதன்மை வாய்ந்திருப்பதாலும் தர்மஜிஜ்ஞாஸா பதத்திலுலேயே तन्त्रेण (ஒரே ஶப்தத்தை அர்த்தங்களின் வேறுபாட்டைக் கருதி இருமுறை ஆவ்ருத்தி செய்துகொள்வதற்குத் தக்கவாறு கூறுதல்), தந்த்ரத்தாலேயோ அர்த்தத்தாலேயோ ப்ரதிஜ்ஞாவிஷயத்வம் ஸம்பந்நமாத லாலும், ★சோதநா லக்ஷணோர்த்தோ தர்ம:★ என்கிற சோதநா ஸூத்ரத்தில் (ஜைமிநி பூர்வமீமா 2வது ஸூத்ரம்) அதின் லக்ஷணம் கூறப்பட்டது. ஸித்தரூப தர்மவிஶேஷமானது अथातो धर्मजिज्ञासा என்கிற ஸாதாரண (பொதுவான) ப்ரதிஜ்ஞையி னுலேயே अर्थतः ப்ரதிஜ்ஞை பண்ணப்பட்டிருந்தபோதிலும் அதற்கு (सिद्धरूपधर्मस्य) பஹு க்ரந்த வ்யவதானம்-இடைவெளி ஏற்பட்டிருப்பதால் ஶப்தத்தால் அது போதிக்கத்தகுந்ததாக ஆகாது என்கிற சங்கையைப் பரிஹரிக்க-ஸந்தேஹத்தைப் போக்குவதற்காக अथातो ब्रह्मजिज्ञासा என்று மறுபடியும் ப்ரதிஜ்ஞை பண்ணினுர். அதாவது தர்ம ஜிஜ்ஞாஸா என்பதாலேயே ஸித்தரூபமான தர்மத்தையும் சேர்த்துச் சொன்னதாக இருந்தபோதிலும் ஸாத்யரூபதர்மத்தைப் பற்றி விசதமாகச் சொல்ல வேண்டியிருந்ததால் அதை விஸ்தாரமாகச் சொன்னுர், அதனுல் இடைவெளி ஏற்பட்டுவிட்டது.

ஆக்ஷேபம்- ★விஷ்ணு நாமா ஸ வேதேஷு வேதாந்தேஷு ச கீயதே★ ★வேதைஶ்ச ஸர்வை: அஹமேவ வேத்ய:★ என்றும் ★யே ச வேதவிதோ விப்ரா: யே ச அத்யாத்ம விதோ ஜநா: । தே வதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம் ॥★ என்றும் சொல்லும் வசநங்களோடு முரண்பாடு இருப்பதால் பூர்வபாகம் ஸாத்யதர்ம ப்ரதானம்-அதாவது கர்மாவைத்தான் ப்ரதானமாகச் சொல்கிறது என்று சொல்வது கூடாது.

பரிஹாரம்-பூர்வ மீமாம்ஸையிலும் ஸித்தரூபமான பரமாத்மா யாகாதி கர்மாக்க ளால் ஆராதிக்கப்படுகிறுன் என்று சொல்லுவதால் ப்ரதான ப்ரதிபாத்யத்வம்-முக்யமாக ஸித்தரூபனுன பரமாத்மாவே சொல்லப்படுகிறுன் என்று ஏற்படுவதால்- விரோதம் ஒன்றுமில்லே. மஹாபாரத வசநத்தில் வேதவித் என்ற சொல் பூர்வபாகத்தை அறிந்தவர்களேச் சொல்லுகிறது. அதாவது பூர்வ மீமாம்ஸையை அதிகரித்தவர்களும் அத்யாத்ம ஶாஸ்த்ரத்தை அதிகரித்தவர்களும் க்ருஷ்ணனே ஸநாதன தர்மமாகச் சொல்லுகிறுர்கள் என்றதாயிற்று.

ஆக்ஷேபம்-ஜைமிநி மஹர்ஷியானவர் கர்மாக்களுக்கு ப்ராதான்யத்தைச் சொல்லியி ருக்கிறுர். நீரும் அவ்விதமே ஒப்புக்கொண்டிருக்கிறீர். இவ்விதமிருக்க ஸித்ததர்ம மான பகவானுக்கு ப்ராதான்யத்தையும் அவனது ஆராதநரூபமாக கர்மாவையும் சொல்லி அதை குணபூதமாகப் ப்ரதிபாதிப்பது யுக்தமாகுமா?

பரிஹாரம்-ஸத்யம்-உண்மையே. ராஜபுருஷன்-அரசனேச் சேர்ந்த புருஷன்-என்கிற வ்யவஹாரத்தில் ராஜாவிற்கு தாத்பர்யத்தால் ப்ராதான்யமானது எவ்விதம் இருக்கிறதோ அவ்விதமே ஸித்தரூபனுன-ஆராத்யனுன பரம புருஷனுக்கு தாத்பர்யத்தால் ப்ராதான்யம் ஸித்திக்கிறது. ராஜபுருஷனுக்கு ஶப்தத்தால் ப்ராதான் யம் ஸித்திப்பதுபோல் கர்மாவிற்கும் ஶப்தத்தால் ப்ராதான்யம் ஸித்திக்கிறது. இவ்விதமான கர்மப்ராதான்யத்தை ஒருவரும் ஆக்ஷேபிக்கவில்லே. பூர்வ மீமாம்ஸை யில் கர்மாக்கள் பாமபுருஷாராதனரூபம் என்று நிர்தாரணம் பண்ணுவதால் கர்மாவிற்கு ப்ராதான்யம் ஸித்திக்கிறது. யாகாதிகளேப் பண்ணுபவர்கள் அவைகள் பகவதாராதன ரூபங்கள் என்பதை முன்னமே தெரிந்துகொள்ளவேண்டுமென்கிற நிர்பந்தமில்லே. கர்மாக்கள் அல்பமாயும் அஸ்திரமாயும் உள்ள ஸ்வர்காதி பலன்களேயே கொடுக்கக் கூடியவை என்கிற விவேகம் உண்டாவதற்கு பரதேவதா ஜ்ஞாநாபேக்ஷை வேண்டியதில்லே என்பதை ஶ்ருதி ஸ்ம்ருதிகளால் அறிகிறுேம். ★யோஹ வா ஏததக்ஷரம் கார்கி அவிதித்வா அஸ்மிந் லோகே ஜுஹோதி யஜதே தபஸ்தப்யதே பஹூநி வர்ஷஸஹஸ்ராணி அந்தவதேவாஸ்ய தத் பவதி ★ (ஓ: கார்கி, ஶாஶ்வதமான ப்ரஹ்மத்தைப் பற்றித் தெரிந்துகொள்ளாமல் இவ்வுலகில் எவன் ஹோமம் செய்கிறுனே யாகம் செய்கிறுனே, தவம் புரிகிறுனே அவன் உயர்ந்த ஸ்வர்காதி பலனேப் பெற்றும் அதனின்று நழுவி விடுகிறுன். புண்யம் கழிந்தவாறே மனித உலகில் பிறக்கிறுன்.) ★அஹம் ஹி ஸர்வ யஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச.। ந து மாம் அபிஜாநந்தி தத்வேந அத: ச்யவந்திதே★ (நான் எல்லா யாகங்களாலும் ஆராதிக்கப்பட்டு அதனுல் ப்ரீதியை அடைந்து அவர்களுக்கு வேண்டிய பலனேத் தருகிறேன். இந்த உண்மையை அவர்கள் அறிகிறுர்களில்லே. அதனுல் அவர்கள் மறுபிறவியைப் பெறுகிறுர்கள் என்று ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் கூறியிருப்பதைக் காணலாம். ஆகையால் கர்மாக்கள் பகவதாராதன ரூபங்கள் என்பதை அறியாமலும் யாகாதிகளேப் பண்ணலாம் என்று தெரிவதால் கர்மாக்களுக்கும் ப்ராதான்யம் ஸித்திக்கிறது. பிறகு கர்மாக்கள் பகவதாராதன ரூபங்கள் என்று தெரிந்துகொள்வதும் முன் சொன்னதற்கு முரணுகாது-அவிருத்தமே: ஆதலால் ஶாஸ்த்ர ஐக்யம் சொன்னது உபபந்நமேயாகும்.

யத்யபி ஜைமிநி மஹர்ஷியானவர் கர்ம ப்ரஹ்ம மீமாம்ஸைகளுக்கு ஐகஶாஸ்த்ர்யத்தைச் சொல்லவில்லை. ஆகிலும் பாதராயணர், ஜைமிநி மஹர்ஷி அருளிச்செய்ததை ஒப்புக்கொண்டு ப்ரஹ்மமீமாம்ஸையோடு ஐகஶாஸ்த்ர்யத்தை அங்கீகரித்து ப்ரஹ்ம ஸூத்ரத்தை அருளிச் செய்துள்ளது யுக்தமேயாகும். அதாவது अतदर्थतया क्लृप्तमपि योग्यमपेक्षितम्। तादर्थ्यमर्हति ग्रामे कल्प्ये पूर्वतटाकवत् (ஒரு க்ராமத்தை புதிதாக நிர்மாணம் பண்ணுவதாக இருந்தால் இதற்கு முன் வெட்டப்பட்டிருந்த நீர் நிறைந்த குளத்தை க்ராமத்திற்கு உபயோகப்படுத்திக் கொள்வது போல) ப்ரஹ்ம ஜ்ஞான ஸம்பாதநார்த்தம் ஜைமிநியினுல் ஶாஸ்த்ர ஐக்யம் சொல்லப்படாமலிருந்த போதும்கூட வ்யாஸமஹர்ஷி ப்ரஹ்மஜ்ஞாநத்தின் பொருட்டு ஶாஸ்த்ர ஐக்யத்தைச் சொன்னது யுக்தமேயாகும்.

* * * *

**(भाष्यम्) अतः प्रतिपिपादयिषितार्थभेदेन षट्कभेदवत् अध्यायभेदवच्च पूर्वोत्तरमीमांसयोः भेदः। मीमांसा शास्त्रं 'अथातो धर्मजिज्ञासा' इत्यारभ्य 'अनावृत्तिःशब्दाद नावृत्तिः शब्दात्' इत्येवमन्तं संगतिविशेषेण विशिष्टक्रमम्।**

**கருத்து**-ஆகையால் ப்ரதிபாதிக்கவேண்டுமென்று விரும்பப்பட்ட அர்த்தபேதத்தால் ஷட்கபேதம்போலவும் (ஷட்கம்-ஆறு அத்யாயங்களடங்கிய க்ரந்த ஸந்தர்பம். பூர்வ மீமாம்ஸா ஶாஸ்த்ரத்திலிருக்கிற பன்னிரண்டு அத்யாயங்களும் ஆறு அத்யாயங்கள் வீதம் இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. முதல் ஆறு அத்யாயங்களடங்கிய க்ரந்த ஸந்தர்பம் ப்ரதம ஷட்கம், இதை ப்ரக்ருதி ஷட்கமென்று கூறுவார்கள். இரண்டாவது ஆறு அத்யாயங்களடங்கிய க்ரந்தஸந்தர்பம் த்விதீயஷட்கம். இதை விக்ருதி ஷட்கம் என்பார்கள்). அத்யாயபேதம் போலவும் பூர்வோத்தர மீமாம்ஸைகளின் பேதம். மீமாம்ஸா ஶாஸ்த்ரமானது 'அதாதோ தர்ம ஜிஜ்ஞாஸா' என்று தொடங்கி 'அநாவ்ருத்தி: ஶப்தாத் அநாவ்ருத்தி: ஶப்தாத்' என்கிற ஸூத்ரம் ஈருக முந்தினது பிந்தினது என்பதற்கு நியாமகமான ஸம்பந்த விஶேஷத்தால் க்ரமவிஶேஷமுள்ளதாக அமைந்திருக்கிறது.

**(விரிவுரை)** ननु - பூர்வோத்தர மீமாம்ஸைகளிரண்டும் சேர்ந்து ஒரே ஶாஸ்த்ரம் என்று சொன்னது பொருந்தாது. ஏனென்றால் ஶாரீரக ஶப்தத்தால் ஸூசிக்கப்பட்டிருக்கிற ப்ரதானவஸ்துவானது வேறாக இருப்பதாலும், ஜைமிநி ஶப்தத்தால் கர்த்ரு பேதத்தைத் தெரிவித்திருப்பதாலும், அவ்விரண்டினாலும் பலித்த ப்ரயோஜன பேதத்தாலும், அர்த்த விரோதமிருப்பதாலும் இரண்டும் சேர்ந்து ஒரே ஶாஸ்த்ரம் என்று சொல்லக்கூடாது என்கிற ஆசங்கையை अत: என்று தொடங்கி பரிஹரிக்கிறார்.

अत: - ஆகையால்-ஏகவ்யாக்யேய -(வ்யாக்யானிக்கப்படுகிற வேதம் ஒன்றாயிருப்பதால்) அதன் வ்யாக்யானங்களும் ஒன்றே என்று வ்ருத்திகாரரால் சொல்லப்பட்டிருப்பதால் பூர்வமீமாம்ஸையிலேயே ப்ரதிபாதிக்க வேண்டுமென்று விரும்பப்பட்ட

*அர்த்த பேதத்தால் ஷட்க பேதத்தைச் சொல்லுவதுபோலும் அத்யாய பேதத்தைச் சொல்லுவது போலும் பூர்வோத்தர மீமாம்ஸைகளுக்கு பேதத்தைச் சொல்லுகிறோம். பூர்வமீமாம்ஸையில் ஷட்க பேதாதிகளைச் சொன்னது த்ருஷ்டாந்தார்த்தம். அர்த்த பேதமில்லாவிட்டால் ஒரே அத்யாயமாகவே இருக்க வேண்டிவரும். ஆகையால் ஒரே அவயவி என்று த்திக்த அளவில் அவாந்தரங்களான அர்த்தங்களின் பேதமானது மஹாவாக்யத்தினுடைய ஏகத்வத்திற்கு விரோதியாகாது. அநேக பதங்களைக் கொண்ட ஒரு வாக்யத்தில் ஒவ்வொரு பதத்திற்கும் அர்த்தபேதம் இருந்தபோதிலும் ஏகவாக்யத்வமானது எப்படி பாதிக்கப்படுகிறதில்லையோ அதேபோல் மஹாவாக்யத்திலும் கொள்ளவேண்டும். இதனுல் ப்ரதிபாத்ய பேதத்தால் ஶாஸ்த்ர பேதம் சொன்னது பரிஹரிக்கப்பட்டது. இதனுல் முதல் ஷட்கத்தில் ப்ரக்ருதியைப் பற்றியும் இரண்டாவது ஷட்கத்தில் விக்ருதியைப் பற்றியும் ப்ரயோஜன பேதத்தைச் சொல்லியிருந்தபோதிலும் பூர்வமீமாம்ஸா ஶாஸ்த்ரமானது ஒன்றே என்று சொல்லுவதற்கு பாதகமில்லாதாற்போலே பூர்வோத்தர மீமாம்ஸா ஶாஸ்த்ரங்களிரண்டிற்கும் ப்ரயோஜன பேதமிருந்தபோதிலும் ஶாஸ்த்ரம் ஒன்றே என்பது அர்த்தாத் ஸித்திக்கிறது.*

ப்ரதிபிபாதயிஷித *என்பதனுல் அர்த்தவிரோதம் பரிஹரிக்கப்பட்டதாகிறது.* ப்ரதிபாதயிதும் இஷ்டம் ஹி ப்ரதிபிபாதயிஷிதம். *அதாவது ப்ரதிபாதிப்பதற்கு இஷ்டப்பட்ட வஸ்து ப்ரதிபிபாதயிஷிதம். இது தாத்பர்ய விஷயமான அர்த்தம். உத்தர மீமாம்ஸையில் நிர்ணயித்திருப்பதற்கு விருத்தமாகப் பூர்வ மீமாம்ஸையில் பண்ணியிருக்கும் தேவதா நிரஸநாதிகள் விஷயத்தில் ஜைமிநிக்கு முக்ய நோக்கில்லை னெறு தாத்பர்யம்.*

*இவ்விஷயத்தில் ஒரு ஆக்ஷேபம் பண்ணலாம். அதாவது ஜைமிநிமஹர்ஷியானவர்* ★ஆம்நாயஸ்ய க்ரியார்த்தத்வாத்★ *என்கிற ஸூத்ரத்தில் வேதமானது யஜ்ஞாதிக்ரியாநுஷ்டாநங்களை ப்ரயோஜனமாகக் கொண்டிருப்பதால் ஸித்தபரவாக்யங்களெல்லாம் அந்த க்ரியைகளுக்குச் சேஷமாகிறது என்றல்லவோ கண்டோக்தமாகச் சொல்லியிருக்கிறுர். ஆகையால் உத்தர மீமாம்ஸா நிர்ணயத்திற்கு விருத்தமாகயிருப்பதால் ஶாஸ்த்ர பேதத்தை ஒப்புக்கொண்டே ஆகவேண்டும்-என்று.*

பரிஹாரம்-*ஸாதாரணமாக பூர்வமீமாம்ஸையில்* ★ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி★ ★-அக்நீஷோமீயம் பசும் ஆலபேத★ (ஒன்றையும் ஹிம்ஸிக்கக்கூடாது-பசுவை யஜ்ஞத்தில் கொல்லவேண்டும்) என்கிற இடத்திலும், ★பதே ஜுஹோதி★ ★-ஆஹவநீயே ஜுஹோதி★ *(காலடியில் ஹோமம் செய்யவேண்டும் - ஆஹவநீயாக்நியில் ஹோமம் செய்யவேண்டும் என்கிற இடத்திலும் உத்ஸர்காபவாத ந்யாயத்தைக் கொண்டு விரோதத்தை எவ்விதம் பரிஹரிக்கிறோமோ-அதாவது ஹோமஸாமாந்யமாநது ஆஹவநீயாக்நியில் பண்ணப்பட வேண்டுமென்று பொதுவாக நிச்சயித்திருந்தபோதிலும் ஸோமவிக்ரயண வேளையில் பண்ணும் ஹோமவிஶேஷமானது குதிரையின் காலடியில் பண்ணவேண்டுமென்றும், ஸாதாரணமாய் ப்ராணிஹிம்ஸா நிஷேதமிருந்தபோதிலும் யாகத்தில் பசுஹிம்ஸை பண்ணலாமென்று எவ்விதம் நிச்சயிக்கப்படுகிறதோ அவ்விதமே இவ்விடத்திலும் ஸித்த*

பரவாக்யங்களுக்கு க்ரியா சேஷத்வம் சொல்லப் பட்டிருந்தாலும், ஸித்தபரவாக்யவி சேஷத்திற்கு விதிசேஷத்வம் உண்டா இல்லையா என்று விசாரித்து, ஸ்வயம் புருஷார்த்தங்களாயிராத ஸித்தபரவாக்யங்களே அந்த க்ரியைக்கு சேஷமாம் என்று நிர்ணயிப்பதே யுக்தமாகும். ஆகையால் ஶாஸ்த்ர பேதம் சொல்வதற்கில்லை.

ஜைமிநி மஹர்ஷிக்கு தேவதா நிராகரணத்தில் முக்ய நோக்கில்லை. வேதாந்த ஶாஸ்த்ரத்தை அப்யஸிக்காதவர்களுக்கு கர்மாவில் ஶ்ரத்தை குறையாமல் இருப்பதன் பொருட்டு பூர்வ மீமாம்ஸையில் கர்மப்ராதான்யத்தைச் சொல்லியுள்ளார். नहि निन्दा निन्द्यं निन्दितुं प्रवर्तते । अपितु निन्दितात् इतरत् प्रशंसितुम् (நிந்தையானது நிந்திக்கப்படுவதை நிந்திப்பதற்காகவே ப்ரவ்ருத்திப்பதில்லை. ஆனால் நிந்திக்கப்படும் வஸ்துவைக் காட்டிலும் வேறொன்றின் மேன்மையை வெளியிடுவதற்காக) என்று ந்யாயம் அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். இந்த ந்யாயத்திற்கு न हि निन्दा न्यायम् என்று பெயர். ஜைமிநிமஹர்ஷி தேவதைகளை ஒப்புக்கொண்டிருக்கிறார். கர்மாவைப் ப்ரஶம்ஸிப்பதற்காகவே தேவதாதிகரணத்தில் கர்ம ப்ராதான்யத்தைச் சொன்னார் என்று சொல்லுவதே யுக்தமாகும். மேலே ★**ஸம்பத்தேரிதி ஜைமிநி: ததா ஹி தர்ஶயதி** ★ (1-2-32) என்ற ஸூத்ரத்தால் (வைச்வாநர வித்யைக்கு அங்கபூதமான ப்ராணாஹுதிக்கு அக்நிஹோத்ரத்வத்தைச் சொல்லுகிறார். அதாவது அக்நிஹோத்ரதுல்யம் என்று ஜைமிநிமஹர்ஷி சொல்லுகிறார். ★**ததாஹி தர்சயதி** என்பதால் பரமாத்மோபாஸநத்திற்குத் துல்யமான ஸர்வபாபநிவ்ருத்திரூபபலனையும் ப்ராணாஹுதிக்கு அக்நிஹோத்ரத்வ ஸம்பத்தியையும் ஶ்ருதி காண்பிக்கிறது என்கிறார்.

"**அந்யார்த்தம் து ஜைமிநி:** (1-4-18) (து ஶப்தமானது முன்பு ஜீவபரமாகச் சொன்ன அர்த்தத்தை வ்யாவர்த்திக்கிறது. அங்கு சொல்லப்பட்ட ஜீவ ஸங்கீர்தனம் அந்யார்த்தம். ஜீவ அதிரிக்த ப்ரஹ்மத்தை ப்ரதிபாதிப்பதற்காக) என்று ஜைமிநி மஹர்ஷி சொல்லுகிறார். ★**பரம் ஜைமிநிர் முக்யத்வாத்** ★ (4-3-11) பரமாத்மாவை உபாஸநம் பண்ணியவர்களையே ஆதிவாஹிககணம் அர்ச்சிராதி மார்க்கத்தில் அழைத்துச் செல்கிறது என்று ஜைமிநி ஆசார்யர் அபிப்ராயப்படுகிறார். ★**ப்ராஹ்மேண ஜைமிநி: உபன்யாஸாதிப்ய:** ★ (4-4-5) ப்ரஹ்ம ஸம்பந்தியான அபஹத பாப்மத்வாதி குணங்கள் உண்டாகின்றன என்று ஜைமிநி ஆசார்யர் அபிப்ராயப்படுகிறார். இது முதலான ப்ரஹ்மஸூத்ரங்களாலேயே ப்ரஹ்ம ஸ்வரூபம் அதன் குணம், அதன் உபாஸநம், அவற்றின் பலன் முதலியவற்றின் அங்கீகாரம் ஜைமிநிக்கு இருப்பதாக அறிகிறோம். மஹாபாரதத்தில் ஹயஶிர -ஹயக்ரீவ உபாக்யாநத்தில் வ்யாஸருடைய உபதேசத்தால் பெற்ற பரமாத்ம தத்வ ஜ்ஞாநமுடையவர் ஜைமிநிமஹர்ஷி என்பது தெரியவருகிறது. கீழே கூறப்பட்டவைகளால் பாதராயணருடைய ஸித்தாந்தத்திற்கு விருத்தமான அர்த்தத்தில் தாத்பர்யமில்லாமையால் பூர்வோத்தர மீமாம்ஸைகளுக்கு அர்த்த விரோதம் என்பதில்லை.

**ஆக்ஷேபம்**- மேலும் அர்த்த விரோதம் எவ்விதத்திலும் பரிஹரிக்க முடியாது. ப்ரஹ்ம ஸூத்ரங்களிலேயே ஜைமிநியின் பக்ஷம் அநுவதித்து கண்டிக்கப்பட்டிருப்பதைப் பல அதிகரணங்களில் காண்கிறோம்;. அதாவது பலாதிகரணத்தில்

★தர்மம் ஜைமிநி: அத ஏவ★ (3-2-39) (யாகாதிரூபமாயும் உபாஸநரூபமாயும் உள்ள கர்மமே பலப்ரதம்-பலனைக் கொடுக்கக்கூடியது) என்னும் ஜைமிநி மதத்தை அநுவாதம் செய்து ★பலமத உபபத்தே: ★ (3-2-37) என்கிற ஸூத்ரத்தில் அத: யாகஉபாஸநரூப கர்மாவினால் ஆராதிக்கப்பட்ட பரம புருஷனிடத்திலிருந்து போகாபவர்கரூபமான பலன் உண்டாகிறது. ஈஶ்வரன்தான் பலப்ராதனம் பண்ணுகிறார்-என்று கண்டித்துள்ளார். மேலும் புருஷார்த்தாதிகரணத்தில் ★சேஷத் வாத் புருஷார்த்தவாதோ யதா அந்யேஷ்ˇ இதி ஜைமிநி: ★ (3-4-2) என்கிற ஸூத்ரத்தில் வேதாந்தத்தினால் சொல்லப்பட்ட ஆத்மஜ்ஞானம் கர்மசேஷமாதலால் ஆத்மாக்கள் கர்மங்களுக்கு சேஷம் என்று ஜைமிநி சொல்லுகிறார். இந்த பக்ஷமானது ★அதிகோபதேசாத் ★ என்கிற பாதராயண ஸித்தாந்தத்தோடு விரோதிக்கிறது. இதை விகல்பமாகக் கொள்ளலாம் என்று சொல்வதற்கில்லை. வஸ்துக்களுக்கு விகல்பம் சொல்வது ஶாஸ்த்ர ஸம்மதமாகாது. மேலும் ஜைமிநி மஹர்ஷியானவர் பிறமதத்தை அநுவதித்துச் சொன்னார் என்று சொல்லவும் முடியாது. அவ்விதமாகில் ஸித்தாந்தியினால் ஜைமிநி மதமாகச் சொல்லி அதை நிராகரித்தது பொருந்தாது.

பரிஹாரம் -இவ்விதம் கூறுவது ஸரியல்ல. பௌத்தாதிகளை நிரஸிப்பதற்காக ஜைமினியின் அந்வாருஹ்ய வாதத்திற்கு அவ்விதம் உபந்யாஸமும், நிராஸமும் பொருத்தமுள்ளதேயாகும். ஜைமினியின் அந்வாருஹ்ய வாதத்தை அறியாதவர்கள் அவர் சொல்லிய விஷயத்தில் தத்வபுத்தி உண்டாகும் என்றெண்ணி அதைப்போக்கு வதற்காக ப்ரஹ்ம ஸூத்ரத்தில் அதன் உபந்யாஸ நிராஸங்கள் இரண்டும் பண்ணப்பட்டன.

* * * *

(அவ) ஆரம்பத்தில் அங்கங்களோடும் ஶிரஸ்ஸோடும் கூட வேதாத்யயனம் பண்ண வேண்டுமென்று அருளிச்செய்தார். அவ்விதமாக வேதாத்யயனம் பண்ண வேண்டுமென்பதற்குப் ப்ரமாணத்தைக் காண்பிக்கிறவராய்க்கொண்டு ஸாதந சதுஷ்டயத்தை இங்கு சொல்லுவதற்கு அவகாசமில்லாததையும் தெரிவித்து முன்பு ப்ரதிஜ்ஞை செய்யப்பட்ட ஐக ஶாஸ்த்ரியம், பௌர்வாபர்ய நியமம் ஶாஸ்த்ரத்திற்கு ஆரம்பிக்க வேண்டிய யோக்யதை ஆகியவை ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டது. இம்மூன்று அர்த்தங்களையும் விவரித்துக் கூறுவதற்காக ததாஹி என்று ஆரம்பிக்கிறார்.

प्रकृतस्यैकशास्त्र्यस्य ब्रह्मचिन्तोद्यमस्य च । क्रमादेश्चोपपत्त्यर्थं तथाहित्यादि भाष्यते ॥

**(भाष्यम्) तथाहि प्रथमं तावत् 'स्वाध्यायोऽध्येतव्यः' इति अध्ययनेनैव स्वाध्याय शब्दवाच्यवेदाख्याक्षरराशेः ग्रहणं विधीयते ॥** (யஜு.ஆ. 2-15) **तच्चाध्ययनं किं रूपं ? कथं च कर्तव्यम् ? इत्यपेक्षायाम् • अष्टवर्षं ब्राह्मणमुपनयीत तमध्यापयेत्** ★ (சதபத ப்ரா) **इत्यनेन श्रावण्यां प्रौष्ठपद्यां वा उपाकृत्य यथाविधि । युक्तश्छन्दांस्यधीयीत मासान्विप्रोऽर्धपञ्चमान् ॥** (மநு. 4-95) **इत्यादिव्रतनियमविशेषोपदेशैश्च अपेक्षितानि विधीयन्ते ॥**

(கருத்து) கீழே கூறியதை விவரித்துக் கூறுகிறோம்.-ததாஹி . முதன் முதலில் ''வேதம் அத்யயனம் செய்யவேண்டும்'' என்கிற விதியினால் அத்யயனத்தினாலேயே ஸ்வாத்யாய ஶப்தத்தால் சொல்லத்தகுந்த வேதம் என்கிற அக்ஷரராசிகளின் க்ரஹணம் விதிக்கப்படுகிறது. அந்த அத்யயனம் எப்படிப்பட்டது- किं रूपं ? எவ்விதம் பண்ண வேண்டும் - कथं च कर्तव्यम् ? என்கிற அபேக்ஷை உண்டாக ''எட்டு வயதுள்ள ப்ராஹ்மணனுக்கு உபநயனம் செய்து வேதத்தை அத்யயனம் செய்துவைக்க வேண்டும்'' என்கிற விதி இருப்பதனால் ச்ராவண மாதத்தின் பௌர்ணமியிலாவது ப்ரோஷ்டபத மாதத்தின் பௌர்ணமியிலாவது விதிப்படி உபாக்ருத்ய - வேதாரம்பம் செய்து ப்ராஹ்மணன் நியமத்துடன் நாலரை மாதம் அத்யயனம் செய்ய வேண்டும்'' இதுமுதலான வ்ரத நியம விசேஷ உபதேசங்களால் அபேக்ஷிக்கப்பட்டவைகள் விதிக்கப்படுகின்றன.

यद्यपि 'अध्यापयित' इत्येव मीमांसक ग्रन्थेषु लिख्यते । अत्र तु 'अध्यापयेत्' इति श्रुतिर्लिख्यते । तथापि 'बुधयुधनशजनेङ्' इति सूत्रानुकूलत्वेन अस्यैव पाठस्य सामीचीन्यम् (भाव) அதாவது ण्यन्तात् 'इङ् अध्ययने' इत्यतः परस्मैपदस्यैव विधानेन आत्मनेपदाप्रसक्त्य 'अध्यापयीत' इत्यस्य छान्दसं सधुत्वं आश्रयणीयम् । 'अध्यापयेत्' इति पाठे तु नायं क्लेश इति द्रष्टव्यम् (मूल भाव)

**விரிவுரை** இங்கு கர்மவிசாரத்திற்கு முன்பே ப்ரஹ்மவிசாரம் செய்யலாமே என்று எண்ணுகிற நீ அத்யயனத்திற்கு முன்பே ப்ரஹ்மவிசாரம் பண்ணலாமென்று நினைக்கின்றாயா? அல்லது வேதாத்யயனம் பண்ணியவன் கர்ம நிரூபணத்திற்கு முன்பே ப்ரஹ்மவிசாரம் பண்ணவேண்டுமென்று நினைக்கின்றாயா? என்கிற விகல்பத்தை மனத்தில் கொண்டு முதல் பக்ஷத்தைக் கண்டிக்கிறார் '**ப்ரதமம் தாவத்**' என்று. **ப்ரதமம் தாவத்**-ப்ரதமத ஏவ- முதன்முதலில். ★யாவத் தாவத் ச ஸாகல்யே அவதௌ மாநே அவதாரணே★ (யாவத் தாவத் இரண்டு ஶப்தங்களும் முழுமையும் என்கிற அர்த்தத்திலும் அவதி (எல்லை) அளவு அவதாரணம் என்கிற அர்த்தங்களிலும் ப்ரயோகிக்கப்படுகின்றன. என்று நிகண்டுகளைச் செய்தவர்கள் கூறுகின்றனர். இங்கு அவதியை - வயதின் அவதியை தாவத் ஶப்தம் குறிப்பதாகக் கொள்ளவேண்டும். முதன்மையாவது ஶாஸ்த்ர விஶேஷங் களை கேட்பதற்குரிய வயதை அபேக்ஷித்து பூர்வ பாவித்வம் - முந்தியிருத்தல். கர்ப்பகாலம் தொடங்கி எட்டாவது வர்ஷத்தில் உபநயனம் செய்யப்பட்டிருக்கிறவ னுக்குத்தானே அத்யயநம் விதிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு முன் ஶாஸ்த்ராந்தர பரிசயம் பண்ணுவதற்கு அநர்ஹனானபடியினால் அத்யயந விதி பரதந்த்ரனான மாணவனுக்கு ஸாங்க அத்யயநத்திற்குப் பிறகு கர்மவிசாரம் பண்ண வேண்டுமென் பது தானாகவே ஏற்படுவதால் இதர ஸித்தாந்தி சொல்லும் ஸாதநசதுஷ்டயம் முதலிய பூர்வவ்ருத்த விசேஷங்களால் ஏற்பட வேண்டுமென்பது ஸந்தர்ப்ப விருத்தம் என்கிற விஷயம் ப்ரதமம்தாவத் என்பதனால் பலிக்கிறது. **तावत् शब्दः अध्ययनानन्तर्यस्य सर्वसम्मतिं दर्शयति** । தாவத் ஶப்தமானது அத்யயநத்திற்குப் பிறகுதான் விசாரம் பண்ண வேண்டும் என்பதில் ஸர்வஸம்மதியைக் காட்டுகிறது என்று அர்த்தம். இதனால் விசாரமானது அத்யயநாநந்தரம்தான் பண்ணவேண்டும் என்கிற நியதி ஏற்பட்டதுபோல், ஏகவிதிஸித்த அத்யயநஸம்ஸ்காரத்திற்கு விஷயமான

வ்யாக்யேயமான வேதத்திற்கு நியத க்ரமத்தோடு கூடின ஏக ப்ரபந்தத்வமும் அத்யயநவிதிபலத்தால் க்ருத்ஸ்ந ஸ்வாத்யாய (வேதபாகம் பூராவிற்கும்) விஷயத்வமும் ஸித்திக்கிறது. ஆகையாலேயே அதன் விசாரத்தையும் முழுமையாகச் செய்ய வேண்டியதாகிறது. இதனால் யதாக்ரமம் கர்ம ப்ரஹ்ம விசாரம் பண்ணவேண்டும் ஒன்றையும் விடுவதற்கில்லை என்று வ்யஞ்சிதமாகிறது.

'வேதாக்ய' என்கிற ஶப்தமானது லௌகிகமான அக்ஷரராசியை விலக்குவதற்காகச் சொல்லப்பட்டுள்ளது. வேதாக்ய என்கிற ஶப்தத்தால் வேதம் பூராவையும் அத்யயநம் பண்ணவேண்டும் என்று ஸூசிக்கப்பட்டது. வேதாந்த பாக மாத்திரம் ஸ்வாத்யாய ஶப்தவாச்யமாகாது. அத்யயநேந என்பதால் அத்யயநத்திற்கு அப்ரதான கர்மத்வம் ஸூசிதமாயிற்று. அத்யயநத்தாலேயே வேதாக்ய அக்ஷரராசியை ஸம்பாதிக்க வேண்டுமென்று भावार्थस्य - தாத்வர்த்தத்திற்கு அந்நியனிடத்தில் ஸ்திதி அறியப்படுவதால் (भावार्थस्य अन्यनिष्ठत्व प्रतीतेः) குண கர்மத்வம்தான் சொல்ல வேண்டும். அத்யயநத்திற்கு ப்ரதானகர்மத்வத்தைச் சொல்லவேண்டுமென்று விருப்பமுள்ளவராக இருப்பாரேயானால் அப்பொழுது स्वाध्यायेन अध्ययनं संपाद्यम् - ஸ்வாத்யாயத்தினுல் அத்யயநம் ஸம்பாதிக்கத்தக்கது என்று வசநம் இருந்திருக்கும். अध्ययनेनैव என்கிற ஏவகாரத்தால் நியம விதித்வம் த்யோதிக்கப்பட்டதாகிறது. இதனுல் வேதத்தை புஸ்தகம் பார்த்து தெரிந்து கொள்ளக்கூடாதென்று நிஷேதித்ததாகிறது. இங்கு अध्यापयेत् என்கிற வாக்யத்தை எடுக்காமல் स्वाध्यायोऽध्येतव्यः - என்று அத்யயந விதிவாக்யத்தை எடுத்ததனுல் ஸ்வவிதிப்ரயுக்தத்வம் ஸூசிக்கப்பட்டது. ப்ராதம்ய வசநத்தில் அத்யயநமானது உபநயநத்தை அங்கமாகவுடையது என்பது பலித்தது. ஶாஸ்த்ராந்தரங்களை அப்யஸிக்க முடியாத கர்ப்பாஷ்டம வர்ஷ அபிப்ராயத்தால் ப்ராதம்யமானது 'ப்ரதமம்' முதன்முதலில் என்று சொல்லப்பட்டது. அத்யயநத்திற்கு ப்ராதம்யமானது ★அஷ்டவர்ஷம்ப்ராஹ்மணம் உபநயீத★ என்று உபநயந விஷயமாகக் குறிக்கப்பட்டிருக்கிற காலத்திற்கு உபநயத்வாரா அத்யயந சேஷத்வம் இருந்தாலன்றி உபபந்நமாகாது. இவ்விதமாக அர்த்தபஞ்சகம் - ஐந்து அர்த்தங்கள் சுருக்கமாக ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டதாகிறது. அதாவது 1. அத்யயநத்திற்கு அவகாதம் போல குணகர்மத்வம். 2. நியம விதித்வம். 3. ஸ்வவிதிப்ரயுக்தத்வம். 4. உபநயநத்திற்கு அத்யயநாங்கத்வம். 5. அக்ஷரராசிக்ரணமாத்ர பர்யந்தத்வம் என்பவை.

அத்யயநேந வேதாக்ய அக்ஷரராசிக்ரஹணம் இஹ விதீயதே அத்யயந விதியினுல் அர்த்தஜ்ஞான பர்யந்தத்வம் கொள்ளவேண்டுமென்று சிலர் சொல்லுகிறார்கள். அக்ஷரராசிக்ரஹண பர்யந்தத்வம்தான் பாதராயணருடைய திருவுள்ளம் என்று தெரிகிறது. ★அத்யயந மாத்ரவத:★ (3.4-12) அத்யயந மாத்ரமுள்ளவனுக்கென்று ஸூத்ரகாரர் மேலே அருளிச் செய்துள்ளதைக் காணலாம். அத்யயநத்திற்கு அக்ஷரராசிக்ரஹணமாத்ரபர்யந்தத்வம் நிரூபிக்கப்பட்டால் ஶாஸ்த்ராரம்பணீயத்வம் ஸித்திக்கிறது. க்ருத்ஸ்நம் (முழுவதும்) விஷயம் என்பது நிரூபிக்கப்பட்டால் ஐகஶாஸ்த்ரியமும் பௌர்வாபர்யமும் ஸித்திக்கிறது.

நநு- இந்த அத்யயந விதி வாக்யத்தில் அத்யயநத்திற்கு ப்ராதம்யமும், ஸாங்கத்வமும், உபநயநத்தை அங்கமாகக் கொண்டிருத்தலும் தோன்றவில்லை. ஏனென்றால் ★உபநயீத தம் அத்யாபயேத்★ என்று வேறு வாக்யத்தால் அத்யயநத்திற்கு அத்யாபக விதிப்ரயுக்தத்வமும் அத்யாபநத்திற்கு உபநயநாங்கத்வமும் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது உபநயீத-உபநயநம் செய்து வைத்து அவனுக்கு வேதத்தைச் சொல்லிவைக்கவேண்டுமென்று ஆசார்யனுக்கன்றோ விதியிருக்கின்றது. அத்யாபந விதியினுல் அத்யயநம் ப்ராப்தமாவதால் அத்யாபந விதிப்ரயுக்தத்வம் அத்யயநத்திற்கு. உபநயநம் செய்துவைத்த பிறகு வேதத்தைச் சொல்லிவைக்கவேண்டுமென்று அத்யாபநத்திற்கு உபநயநாங்கத்வம் (அத்யாபநத்திற்கு உபநயநம் அங்கம் என்று) சொல்லலாம்போல் தோன்றுகிறது என்று அபிப்ராயம். இந்த ஸந்தேஹத்திற்கு ஸமாதானம் அருளியிருக்கிறார் 'தத் ச' என்று. சகாரமானது கீழே கூறிய ஸந்தேஹத்தை நிவர்த்திக்கிறது. தத்- அத்யயநமானது ★ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய:★ என்கிற வாக்கியத்தால் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஜபாதிகளும் அத்யயந ஶப்தத்தால் சொல்லப்படுவதால் அவைகளில் ப்ரஸ்துதமான அத்யயநத்திற்கு ஆத்ய அத்யயநத்வ நிச்சயத்தின் பொருட்டு சொல்லுகிறார் -கிம்ரூபம்? என்று. அதாவது ஜபாதிகள் போல் ஸ்வதந்த்ரோச்சாரண ரூபமா? அல்லது பரதந்த்ர அநுச்சாரணரூபமா?-ஆசார்யன் சொல்லுவதைத் திருப்பிச் சொல்லுவதா? அல்லது பாராயணம் போல் ஒரு தடவை சொல்லுவதா - ஸக்ருத்துச்சாரண ரூபமா? அல்லது அவகாதத்தைப்போல் ஆவ்ருத்திரூபமா? எனில், பரதந்த்ர உச்சாரண ரூபத்வமும் அஸக்ருத் உச்சாரண ரூபத்வமும் இருந்தால்தான் அத்யயநத்வம் ஸித்திக்கும். கதம்ச கர்த்தவ்யம் கதம்-எதை அங்கமாக உடையது? இத்யபேக்ஷாயாம் அபேக்ஷிதாநி விதீயந்தே (என்கிற அபேக்ஷை உண்டாகும்போது அபேக்ஷிதங்கள் விதிக்கப்படுகின்றன) என்று அந்வயம். ப்ராதம்யத்தையும், ஆசார்யன் சொன்ன பிறகு அதை அனுஸரித்து அவர் சொன்னதையே உச்சரிக்கவேண்டுமென்பதையும் உபநயநத்தை அங்கமாக உடையது என்பதையும் தெரிவிப்பதற்காக ★அஷ்டவர்ஷம் ப்ராஹ்மணம் உபநயீத தம் அத்யாபயேத்★ என்று சொல்லுகிறுர். அஷ்டவர்ஷம் என்று சொன்னதனால் ப்ராதம்யம் ஸித்திக்கிறது. அத்யயநம் ப்ரதாநம். உபநயநம் பண்ணுமல் அத்யயநம் செய்யக்கூடாதாகையால் உபநயநம் அத்யயநத்திற்கு அங்கமாகிறது. அந்த உபநயநத்தை கர்ப்பாஷ்டமத்தில் பண்ணவேண்டுமாகையால் உபநயநத்தின் மூலமாகக் காலமானது அத்யயநத்திற்கு சேஷமாகிறது. சேஷமென்றுல் சேஷிக்கு அதிசயத்தையுண்டுபண்ணுகிறதென்று அர்த்தம். ★ப்ராஹ்மணம் உபநயீத★ என்கிற இடத்தில் ப்ராஹ்மணம் என்று த்விதீயாவிபக்தி இருப்பதால் மாணவக சேஷத்வம் அறியப்படுவதால் உபநயநத்திற்கு தத்கத - அவனை அடைந்துள்ள அத்யயநாங்கத்வம் ஸித்திக்கிறது (உபநயநம் என்றால் ஆசார்யன் பக்கலில் வேதாத்யயநத்திற்காக மாணவனைச் சேர்ப்பித்தலாகும். எந்த கர்மாவில் இது ஏற்படுகிறதோ அதானது உபநயநம் எனப்படுகிறது) உபநயநமானது ★ஸ்வரிதஞித: கர்த்ரபிப்ராயே க்ரியாபலே★ என்கிற ஸூத்திரத்திஞல் விதிக்கப்படாததாலும் அதற்கு அத்யாபநாங்கத்வ ஸித்தி இல்லை. அதாவது ★ஸ்வரிதஞித: கர்த்ரபிப்ராயே க்ரியாபலே★ என்கிற

ஸூத்ரத்திலிருக்கிற கர்த்தரபிப்ராய பதம் கர்த்தாவை நாடியிருக்கிறதென்கிற அர்த்தத்துடன் கூடியது. அதாவது க்ரியையின் பலமானது கர்த்தாவை அடைவதாக இருக்குமேயாகில் உபயபத தாதுக்களின் மீது ஆத்மநேபத ப்ரத்யயங்கள் வரும். அந்த தாதுக்கள் ஸ்வரிதத்தையாவது ஞகாரத்தையாவது இத்தாகக் கொண்டிருக்க வேண்டுமென்று ஸூத்ரத்தின் அர்த்தம். உபநயீத-அத்யயநம் செய்விப்பதற்காக மாணவகனை விதியினால் தன்பக்கலில் அடையச் செய்து கொள்ள வேண்டுமென்று அர்த்தம் ஏற்படும். அங்ஙனமாகில் உபநயநத்தால் உண்டாகிற பலமாகிய ஆசார்யகரணம் சிஷ்யனால் செய்யப்படும் சுச்ரூஷை முதலியவைகள் ஆசார்யனைச் சேர்வதால் உபநயநம் அத்யாபநத்திற்கு அங்கமாகிவிடும்; அத்யயநாங்கமாகாது. ஆகையால், உபநயீத என்கிற இடத்தில் இந்த ஸூத்ரத்தால் ஆத்மநேபத ப்ரத்யயத்தைச் சொல்லக் கூடாது. ★ஸம்மாநந★ என்கிற ஸூத்ரத்தாலேயே ஆத்மநேபதப்ரத்யயத்தை விதிக்கவேண்டும். அப்பொழுது அதற்கு ஆசார்யகரணமே அர்த்தம். உபநயந பூர்வகமான அத்யயநத்தினால் அன்றோ உபநயிதாவினிடத்தில் ஆசார்யத்வம் ஸ்வீகரிக்கப்படுகிறது என்று அர்த்தம்.

அத்யாபயேத் என்பதினால் பரதந்த்ர உச்சாரண ரூபத்வம் ஸித்திக்கிறது. அதனால் அஷ்டவர்ஷம் ப்ராஹ்மணம் உபநயீத என்று அத்யயநத்திற்கு அங்கமாக உபநயநமானது விதித்த அளவில் உபநயநத்திற்கு த்ருஷ்டார்த்தத்தின் பொருட்டு உபநேயா ஸத்தி த்வாரமாக பரிகல்ப்ய அதற்கு ஸ்வதந்த்ராத்யயநம் பண்ணினால் த்ருஷ்டத்வாரா உபகாரத்வாஸம்பவாத் குருமுக உச்சாரண ஆநூச்சாரணலக்ஷண பரதந்த்ர உச்சாரணம்தான் த்ருஷ்டத்வாரா உபயோகமாக ஸம்பவிக்குமாதலால் உபநயநரூப அங்கமஹிமையால் அத்யயநத்திற்கு பரதந்த்ர உச்சாரணத்வம் ஸித்திக்கிறது என்று தாத்பர்யம். ★த்வாதசாஹேந ப்ரஜாகாமம் யாஜயேத்★ ★அந்நாத்ய காமம் யாஜயேத்★ ★நிஷாதஸ்தபதிம் யாஜயேத்★ என்கிற விதிகளால் ஏற்பட்ட யாஜநம் போல் அத்யாபநமும் பணத்தை ஸம்பாதிப்பதற்குக் காரணமாகயிருப்பதால் ராகப்ராப்தமானதினால் அத்யாபனமானது விதேயமாகாததாலும் அத்யாபநத்தில் அதிகாரி விசேஷ ச்ரவணமில்லையாமையாலும் அத்யயனத்திற்கு, அத்யாபநம் செய்விக்கிற ஆசார்யனை முன்னிட்டிருத்தல் கூறபடுகிறது என்பதனால் இது அத்யயந விதியென்று அபிப்ராயம்.

உபாகர்மம் முதலிய வ்ரத நியமங்களைக் கொண்டிருப்பதையும் அங்கங்களோடு கூடியிருப்பதையும் காட்டுவதற்காகச் சொல்லுகிறார் ச்ராவண்யாம் என்று. (ச்ராவண்யாம் - ச்ரவண நக்ஷத்திரம் கூடிய பௌர்மணியிலோ, ப்ரோஷ்டபதா நக்ஷத்திரம் கூடிய பௌர்ணமியிலோ விதிப்படி வேதாத்யயநத்தைச் செய்து ப்ராஹ்மணன் நாலரை மாதம் அத்யயநம் செய்ய வேண்டும். அர்த்தம் பஞ்சமம் யேஷாம் தே அர்த பஞ்சமா:.) இத்யாதி என்கிற விடத்திலுள்ள ஆதி மப்தத்தால்

अत ऊर्ध्वं तु छन्दांसि शुक्लेषु नियतः पठेत् । वेदाङ्गानि च सर्वाणि कृष्णपक्षेषु संपठेत्॥

(அத ஊர்த்வம்- தை மாதத்தில் புஷ்ய நக்ஷத்ரத்துடன் கூடிய பௌர்ணமியில் உத்ஸர்ஜநம் செய்துவிட்டு அதன்பிறகு அத்யயநம் செய்த வேதபாகங்களை சுக்ல

பக்ஷங்களில் ஆவ்ருத்தி செய்ய வேண்டும். வேதாங்கங்களான வ்யாகரணம், சிக்ஷை முதலியவைகளை க்ருஷ்ணபக்ஷங்களில் படிக்க வேண்டும்.) இது முதலான வசநங்களை அங்காத்யயநத்திற்குக் காலத்தைச் சொல்லுகின்ற வசநங்களாக கொள்ளவேண்டும். வ்ரதம் - வேதாரம்பம் காண்ட வ்ரதம் முதலியன. நியமம் - ★சூத்ரஸமீபே நாத்யேதவ்யம்★ சூத்ரன் ஸமீபத்தில் அத்யயநம் பண்ணக்கூடாது. இது முதலான வசநங்களில் கூறப்பட்டிருக்கிற தேசம், காலம், பக்ஷ்யாபக்ஷ்யம் (சாப்பிடக்கூடியது சாப்பிடக்கூடாதது), சௌசாசாரங்கள் முதலிய வ்யவஸ்தைகள் நியமங்களாகும். ★அத்யாபயேத்★ என்றும் ★வ்ரத நியம விசேஷ உபதேசை:ச★ என்றும் தனித்து நிர்தேசமானது. ஶ்ருதி ஸ்ம்ருதி விபாகத்தாலும் விப்ரதிபத்திக்கு விஷயமாக இருத்தல், விப்ரதிபத்திக்கு விஷயமாகாமல் எல்லோராலும் ஏகமுகமாக ஒப்புக் கொள்ளப்பட்டிருத்தல் முதலான விபாகத்தாலும் செய்யப்பட்டிருக்கிறது. உபாகர்ம முதலிய வ்ரத நியமங்கள் போல உபநயநமும் அத்யயநத்திற்கு அங்கமாகும். கிம் ரூபம்-அது எந்த ஸ்வரூபமுள்ளது? கதம் ச கர்தவ்யம்-எவ்வாறு செய்யத்தக்கது என்று அபேக்ஷை வர அங்கங்களை விதிக்கிற இந்த வாக்யங்களால் அபேக்ஷிக்கப்பட்டவைகள் விதிக்கப்படுகின்றன என்று அர்த்தம்.

**(भाष्यम्) एवं सत्सन्तानप्रसूतसदाचारनिष्ठात्मगुणोपेतवेदविदाचार्योपनीतस्य व्रतनियम विशेषयुक्तस्य आचार्योच्चारणानूच्चारणरूपम् अक्षरराशिग्रहणफलम् अध्ययनम् इत्यवगम्यते।**

**கருத்து** :—இவ்வண்ணம் நற்குலத்திற் பிறந்தவனும் ஸதாசாரத்தில் நிஷ்டை (நிலை) பெற்றவனும் ஆத்ம குணங்களுள்ளவனும் வேதார்த்தங்களையறிந்திருப்பவனுமான ஆசார்யனால் உபநயநம் பண்ணப்பட்டு வ்ரதநியமவிசேஷங்களோடுகூடிய மாணவனுக்கு ஆசார்யோச்சாரண அநூச்சாரணரூபமான அத்யயநமானது அக்ஷரராசி க்ரஹணத்தை பலமாகக் கொண்டதென்று அறியப்படுகிறது.

**விரிவுரை** :—அங்க விதியுடன் கூடின ப்ரதான விதியினால் அங்கஸ்வரூபமும் அங்கிஸ்வரூபமும் எவ்விதம் அறியப்பட்டதாயிற்று என்றால் - ஏவம் என்று தொடங்கிச் சொல்கிறார். ஏவம்-இவ்விதமாகக் கீழே கூறப்பட்ட ஶ்ருதிஸ்ம்ருதிகளோடு கூடிய ஸ்வவிதிஸித்த ஸாங்கவேதாத்யயந விதாந ப்ரகாரேண என்று அர்த்தம். ஸத்ஸந்தாந என்பதால் அந்த உபநயந விஷயத்தில் நல்ல வம்சம் வித்யை என்கிற ஆபஸ்தம்பருடைய வசநத்தின் அர்த்தமானது அனுஸந்திக்கப்பட்டது. அதாவது

तस्मिन् अभिजन विद्या समुदेतं समाहितं संस्कर्तारं ईप्सेत् *(ஆப.தர்ம.ப்ர/க/ஸூ.12)*

ஒரு வம்சத்தில் பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹாதிகள் எல்லோரும் வேதவித்துக்களாக இருந்தால் அந்த வம்சத்தில் பிறந்தவன் அபிஜனன் எனப்படுகிறான். அங்கங்களோடு யதாவத் அர்தஜ்ஞான பர்யந்தம் வேதத்தை அத்யயனம் பண்ணினால் அதுவித்யை. அபிஜந வித்யைகளோடு ஸம்பந்நனாயும் ஆத்ம குணங்களோடு சேர்ந்தவனாயுமிருக்கிற உபநயந ஸமஸ்கர்த்தாவை அடைய வேண்டுமென்று இச்சிக்கவேண்டும்.

அடையக் கடவன். ஆசார்யன் ஆத்மகுண பரிபூர்ணனாய் இருக்க வேண்டும். அதாவது १. दया सर्वभूतेषु २. क्षान्तिः ३. अनसूया ४. शौचं ५. अनायासम् ६. मङ्गलम्, ७. कार्पण्यं ८. अस्पृहम् (கௌதம தர்ம ஸூத்ரம்). இதனால் அபிஜந என்கிற ஆபஸ்தம்ப ஸூத்ரத்திலுள்ள ஸமாஹித ஶப்தத்தினுடைய அர்த்தம் சொல்லப்பட்ட தாகிறது. வேத வித் ஶப்தத்தால் வித்யா ஸமுதேத என்கிற ஶப்ததத்தின் அர்த்தம் சொல்லப்பட்டது. மேலே கூறிய யோக்யதையற்ற ஆசார்யனிடம் அத்யயநம் பண்ணும் சிஷ்யனுக்கு நன்மையுண்டாகாதென்கிறார். तमसो वा एष तमः प्रविशति यं अविद्वान् उपनयते... (ஆப/தர்ம ப்ர/க/ஸூ.11) ஒருவன் அவித்வானிடம் வித்யை கற்றானேயாகில் அவன் அவித்வானாகவே இருப்பான் என்று இந்த ஸூத்ரத்தின் தாத்பர்யம். ஆகையால் ஸத்ஸந்தானப்ரஸூத ஸதாசார நிஷ்டனையே ஆசார்யனாகப் பற்றவேண்டும். ஸத்ஸந்தாந ப்ரஸூதி ஸதாசார நிஷ்டை ஆத்ம குணபூர்த்தி முதலியன ஆசார்ய விசேஷணம். வ்ரத நியமாநுஷ்டானம் முதலியன மாணவக விசேஷணம். வேதவிதாசார்யோபநீதஸ்ய என்கிற ஆசார்யனுக்கு சொல்லப்பட்ட குணங்கள் உபநயநத்தின் மூலமாக மாணவகனுக்காகச் சொல்லப்பட் டிருக்கிறது. அத்யயநமானது அர்த்தபர்யந்தமென்று சொல்லுகிறவர் பக்ஷத்தில் (அத்யாபக விதியாகச் சொல்கிறவர்) அஷ்டவர்ஷத்வாதி மாணவக விசேஷணம் ஆசார்யார்த்தம் என்று எவ்விதம் சொல்லுகிறாரோ அவ்விதமே ஆசார்ய விசேஷணம் மாணவகார்த்தம் என்று ப்ரதிபந்தி ஸூசநாய வ்ரதநியம விசேஷயுக்தஸ்ய என்று உதாஹரித்தார். ★... ஆசார்யோபநீதஸ்ய, வ்ரதநியம விசேஷயுக்தஸ்ய ★ என்கிற இரண்டு ஷஷ்ட்யந்த பதங்களால் அதிகாரி ஸ்வரூபமும் இதிகர்த்தவ்யதையும் ஸித்திக்கிறது. இதனால் அத்யயநமானது அங்கங்களோடு கூடவே பண்ணவேண்டு மென்பதும் ஶாஸ்த்ராந்தரங்களை படிப்பதற்கு அவஸர நிரோதகத்வமும் ஸித்திக்கி றது. அங்காத்யயநமும் நியம விசேஷமாகையால் அஷ்டவர்ஷாத்யுபநீதனுக்கு அத்யயந விதிக்கு விரோதமில்லை. ஆசார்யோச்சாரண அநூச்சாரணமென்றதால் பரதந்த்ர உச்சாரணரூபத்வம் காட்டப்பட்டது. அதாவது ஆசார்யன் சொன்ன வேத ஶப்தங்களை அநுஸரித்து சிஷ்யன் அந்த ஶப்தங்களையே உச்சரிக்க வேண்டும் என்றதால் பரதந்த்ர உச்சாரணரூபமென்று தாத்பர்யம். ஆசார்யோச்சாரண அநூச்சார ணம் என்றதனால் ஸ்வதந்த்ர உச்சாரணம் கூடாதென்பதும் விசாரமும் அத்யயந ஶாஸ்த்ரார்த்த அநுப்ரவேசம் (ப்ரஹ்ம விசாரமும் அத்யயந விதியில் சேர்ந்தது) என்னும் பக்ஷமும் நிராகரிக்கப்பட்டது. அக்ஷரராஶிக்ரஹணமென்கிற பதமானது அஸக்ருதாவ்ருத்தி செய்யத்தக்கதென்கிற அர்த்தத்திற்கு ஆக்ஷேபகம். ★வ்ரீஹீந் அவஹந்தி★ நெல்லைக் குத்த வேண்டும் என்கிற இடத்தில் நெல்லைக் குத்துவதானது உமி போகிற பர்யந்தம் என்று சொல்லப்படாமலிருந்த போதிலும் ஆவ்ருத்தி ஸித்தமாகயிருப்பதுபோல இவ்விடத்திலும் ஸாமர்த்யத்தினால் ஆவ்ருத்தி ஸித்திக்கிறது. நெல்லைக் குத்த வேண்டுமென்பதினால் நகத்தால் கிள்ளியோ வேறுவிதமாகவோ அரிசியை எடுக்கக்கூடாதென்று நியமம் சொல்லப்பட்டதாகிறது. நியமவிதிக்கு அத்ருஷ்டபலம்தானே சொல்ல வேண்டும். த்ருஷ்டபலம் சொல்லலாமோ எனில் த்ருஷ்டப்ரயோஜநத்தை விடாமலேயே நியமம் விதிக்கத்தக்க தாயிருக்கிறது. கேவலஅத்ருஷ்டமாத்ரம் பலமென்றால் ப்ரோக்ஷணாதிகளைப்போல

ஒருதடவைமாத்ரம் குத்தவேண்டிவரும். இதனால் அத்யயநமும் ஸக்ருதுச்சாரணமாத்ரம் ஸ்யாத். நெல்லைக் குத்தி அரிசியாக்கி அந்த மாவைக் கொண்டு புரோடாசம் பண்ணி யாகத்தில் உபயோகப்படுத்தவேண்டுமென்று மேலே விநியோகம் சொல்லியிருப்பதால் த்ருஷ்டபரத்வமும் சொல்ல வேண்டும். த்ருஷ்ட ப்ரயோஜநத்தை விடாமலேயே நியமம் விதிக்கத்தக்கதாயிருக்கிறது.

नियमाददृष्टं तु दृष्टफलपरत्वेऽपि स्वीकृतम्; केवलादृष्टपरत्वे तु सकृन्मात्रमेवाध्ययनं स्यात् । दृष्टपरत्वं च भाविविनियोगापेक्षया ।

ஆசார்யோச்சாரண அநூச்சாரணமென்றதினாலும் வேதவிதாசார்யோபநீதஸ்ய என்றதினாலும் அத்யயநம் அத்யாபிதாவை - ஆசார்யனை எதிர்பார்த்திருப்பதால் அதற்கு (அத்யயநத்திற்கு) பரதந்த்ர உச்சாரணரூபத்வமும் ஸ்வவிதி ப்ரயுக்தத்வமும் உபநயநாங்கத்வமும் சொல்லப்பட்டது. ★ஆசார்யோச்சாரண அநூச்சாரணம் **அக்ஷரராசிக்ரஹணபலம்**★ என்கிற பதங்களால் அத்யயநம் எந்த ஸ்வரூபமுள்ளது? கிம்ரூபம்? என்கிற ஆகாங்க்ஷைக்குப் பதில் கூறப்பட்டது. **வேதவிதாசார்யோபநீதஸ்ய வ்ரத நியம விசேஷஸ்ய** என்கிற பதங்களால் எவ்வாறு செய்யத்தக்கது?-கதம்ச கர்த்தவ்யம்? என்கிற ஆகாங்க்ஷைக்குப் பதில் சொல்லப்பட்டது. அக்ஷரராசிக்கரஹண பலமென்பதினால் ஸ்வாத்யாயத்தை க்ரஹிப்பதில் விருப்பத்தோடு கூடியிருத்தல் வேண்டுமென்பதாயிற்று. அதாவது அக்ஷர ராசிக்ரஹண காமத்வம் அதிகாரி விசேஷணம் என்று ஸுசிக்கப்பட்டது.

* * * *

**(भाष्यम्) अध्ययनं च स्वाध्यायसंस्कारः । "स्वाध्यायोऽध्येतव्यः" इति स्वाध्यायस्य कर्मत्वावगमात्। संस्कारो हि नाम कार्यान्तरयोग्यताकरणम्। संस्कार्यत्वं च स्वाध्यायस्य युक्तम् । धर्मार्थकाममोक्षरूपपुरुषार्थचतुष्टयतत्साधनाववबोधितत्वात्, जपादिना स्वरूपेणापि तत्साधनत्वाच्च। एवम् अध्ययनविधिः मन्त्रवत् नियमवदक्षरराशिग्रहणमात्रे पर्यवस्यति। अध्ययनगृहीतस्य स्वाध्यायस्य स्वभावत एव प्रयोजनवदर्थावबोधित्वदर्शनात् गृहीतात् स्वाध्यायात् अवगम्यमानान् प्रयोजनवतः अर्थान् आपाततो दृष्ट्वा तत्स्वरूपप्रकार विशेषनिर्णयफलवेदवाक्यविचाररूपमीमांसा श्रवणे अधीतवेदः पुरुषः स्वयमेव प्रवर्तते। तत्र कर्मविधिस्वरूपे निरूपिते कर्मणाम् अल्पास्थिरफलत्वं दृष्ट्वा, अध्ययनगृहीतस्वाध्यायैकदेशोपनिषद्वाक्येषु च अमृतत्वरूपानन्तस्थिरफल आपातप्रतीतेः तन्निर्णयफलवेदान्तवाक्यविचार रूपशारीकमीमांसायाम् अधिकरोति ॥**

**கருத்து** :— அத்யயநம் ஸ்வாத்யாயமென்று சொல்லப்படுகிற வேதத்திற்கு ஸம்ஸ்காரம். स्वाध्यायोऽध्येतव्यः (ஸ்வாத்யாயம், அத்யயநம் செய்யத்தக்கது) என்கிற விதியினால் ஸ்வாத்யாயத்திற்கு கர்மத்வம் அறியப்படுகிறது. ஸம்ஸ்காரமானது

கார்ய விசேஷத்தில் யோக்யதையை உண்டுபண்ணுதல். ஸ்வாத்யாயத்திற்கு ஸம்ஸ்கரிக்கப்படத்தக்க தன்மை பொருத்தமுள்ளது. தர்ம, அர்த்த, காம மோக்ஷமென்கிற நான்கு புருஷார்த்தங்களையும் அவைகளின் ஸாதனங்களையும் அறிவிப்பதனாலும் ஜபம் முதலியதால் ஸ்வரூபத்தாலும் அவைகளுக்கு ஸாதனமாகயி ருப்பதாலும். இவ்விதமாக அத்யயந விதியானது அத்யயந உபகாரகமான ★ஶந்நோமித்ர:★ இது முதலிய மந்த்ரம் போல நியமத்தோடு கூடின அக்ஷரராசி க்ரஹண மாத்ரத்தில் பர்யவஸான மடைகிறது. அத்யயநத்தினால் க்ருஹீதமான வேதத்திற்கு ஸ்வபாவத்தினாலேயே ப்ரயோஜனங்களுள்ள அர்த்தங்களைத் தெரிவிக்கிற தன்மை காணப்படுவதால், க்ரஹிக்கப்பட்ட வேதத்தால் அறியப்படுகிற ப்ரயோஜநங் களுள்ள அர்த்தங்களை ஆபாததோத்ருஷ்ட்வா-மேலெழக்கண்டு-அவைகளின் ஸ்வரூப, ஸ்வபாவவிசேஷ நிர்ணயங்களைப் பலமாகக் கொண்ட வேத வாக்ய விசார ரூபமான மீமாம்ஸா ஶ்ரவணே - மீமாம்ஸையைக் கேட்டுணர்வதில் வேதாத்யயநம் செய்த புருஷன் தானாகவே ப்ரவர்த்திக்கிறான்.

வரிவுரை :—★ஸக்தூந் ஜுஹோதி★ என்கிறவிடத்தில் புருஷன் ஸக்துஹோமஜந்ய அத்ருஷ்டத்தை அடைந்தவனாயிருப்பதால் ஸக்துஹோமமானது எவ்வாறு புருஷ ஸம்ஸ்காரமாகிறதோ அவ்வாறே அத்யயநம் புருஷனுக்கு ஸம்ஸ்காரமென்றே சொல்லவேண்டும். அதாவது முன்போ பின்போ உபயோகப்படாததான (विधुरेण) மாவுகளுக்கு ஹோம ஸம்ஸ்காரத்வமில்லாததால் ஸக்து ஹோமத்திற்கு குணகர்மத்வ மில்லை. ஆதலால் ப்ரதான கர்மத்வம் எப்படி சொல்லுகிறோமோ அவ்வாறே என்று தாத்பர்யம். இந்த அபிப்ராயத்தால்தான் புருஷ ஸம்ஸ்காரத்வம் சொல்லப்பட் டது. இவ்விதம் சொன்னால் அத்யயநத்திற்கு அக்ஷரராசி பலத்வம் ஸித்திக்காது. அபூர்வஸித்தியை பலமாகக் கொண்டிருப்பதால் ஸ்வாத்யாயஸித்தியானது பலமா காது. அதனால் அக்ஷரராசி க்ரஹணம் பலமில்லாமற் போவதால் ஆவ்ருத்தி ஸித்திக்காது. ஆதலால் அத்யயநமானது ஸக்ருதுச்சாரண ரூபமாகவே ஆகிவிடு மென்று ஸந்தேஹம் வர அருளிச்செய்கிறார்-அத்யயநம் ச ஸ்வாத்யாயஸம்ஸ்கார: என்று. அத்யயநம் ச என்கிற இடத்திலுள்ள ச: சங்கா-நிவ்ருத்யர்த்த:- உபநயநாங்கத்வம் போலவும் ஸ்வவிதிப்ரயுக்தத்வம் போலவும் இதையும் உபபாதிக்கவேண்டுமென்று சகாரத்திற்கு அர்த்தம். यद्वा-பிந்நக்ரம: அஸக்ருது உச்சாரணத்வாதினா ஸஹ ஸம்ஸ்காரரூபத்வஸ்ய ஸமுச்சயார்த்த:. संस्कार: पुंस एव इष्ट: मन्त्रेण प्रोक्षणादिभि: என்று சொல்லுகிறவர்கள் அத்யயந ஸமஸ்காரமும் கர்த்தாவிற்கே என்று ஸ்வீகரித்துள்ளார்கள். அதனால் உம்முடைய விவக்ஷை ஸித்திக்காது என்கிற ஶங்கையை நிவர்த்திப்பதற்காகச் சொல்லுகிறார் - ஸ்வாத்யாய ஸம்ஸ்கார: என்று. ஸக்துஹோமம் அபூர்வத்தை விஷயமாகக் கொண்டிருப்பதால் எவ்வாறு புருஷ ஸம்ஸ்காரமோ அவ்வாறு புருஷ ஸம்ஸ்காரமல்ல என்று அர்த்தம். ஏனென்றால் ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய: இதி ஸ்வாத்யாயஸ்ய கர்மத்வாவகமாத் (ஸ்வாத்யாயம் - அத்யயநம் செய்யத்தக்கது என்கிற (விதியினால்) ஸ்வாத்யாயத்திற்கு கர்மத்வம் அறியப்படுகிறது). என்று சொல்லுகிறார். கர்து: க்ரியையா ஆப்தும்

**இஷ்டதமத்வம் ஹி கர்மத்வம்** - *(கர்த்தாவினுடைய க்ரியையினால் அடைவதற்கு இஷ்டதமமாகயிருப்பதல்லவோ கர்மா. ஆதலால் அத்யயநம் ஸ்வாத்யாயஸ்ய ஸம்ஸ்காரம். புருஷனுக்கில்லை என்று தாத்பர்யம். அத்யயநமானது ஸ்வாத்யாய ஸம்ஸ்காரம் என்னும் விஷயத்தில் கர்மத்வம் ஹேது என்பதில் வேறுபாடில்லை* न वैयधिकरण्यम् - अयं भावः । *இவ்விடத்தில்* तव्य: *ப்ரத்யயத்திற்கு வேறு அர்த்தம் பொருந்தாது. ஆகையால்* ततश्च द्वितीयाश्रुते: तत्यादेर्वा कर्मर्थत्वे विशेषाभावात् कारकाणां क्रियार्थत्वेपि द्रव्यनिष्ठस्य भावार्थस्य द्रव्यार्थत्वात् अवहन्त्यादिनयो अत्र युक्त: *அவஹந்தி ந்யாயமானது இவ்விடத்தில் யுக்தமாகிறது. அவஹந்த்யாதே: தத் தத் த்ரவ்ய ஸம்ஸ்காரத்வம் பேதலக்ஷணத்தில்* ★தாநி த்வைதம் குணப்ரதாந பூதாநி★ *(பூ.மீ. 2-1-6) என்பதினால் ஸித்திக்கிறது. ஆகையால்* तव्य: *ப்ரத்யயத்தால் கர்மத்வம் அறியப்படுகிறது. ஸ்வாத்யாயத்திற்கு கர்மத்வமே தவிர்த்து புருஷனுக்குக் கர்மத்வமில்லை.* कर्तु: क्रियया आप्तुं इष्टतमत्वं हि कर्मत्वम्- *(கர்த்தாவினுடைய க்ரியையினால் அடைவதற்கு இஷ்டமாக இருப்பதல்லவோ கர்மா) ஆதலால் அத்யயநம்* स्वाध्यायस्य *ஸம்ஸ்காரம் புருஷனுக்கில்லை என்று தாத்பர்யம். ஹரி என்பவர் கர்மாவானது மூன்று விதம் என்கிறார்.* ★ निर्वर्त्यं च विकार्यं च प्राप्यं चेति त्रिधा मतम्। तच्च ईप्सिततमं कर्म. [ *ஈப்ஸிததமம் கர்மாவானது நிர்வர்த்யாதி பேதேந மூன்று விதம்). க்ரியா ஜந்ய பலாஶ்ரயத்வ ரூபம் கர்ம இத்யார்த்த:*

**நநு**- *க்ரியையினால் நிஷ்பாத்யமான வஸ்து முதலியவற்றிற்கும் கர்மத்வமானது பொதுவாயிருக்க, ஸம்ஸ்கார்யத்வத்தில் ஹேதுவாக எவ்விதம் சொல்லப்படுகிறது என்று கேள்வி வர, நிர்வர்த்யத்வ விகார்யத்வ அநுபபத்தியை அபிப்ராயத்தில் கொண்டு ஸ்வாத்யாயஸ்ய என்று மறுபடியும் சொன்னார்.* **வஸ்து** *ஸாமர்த்யத்துடன் கூடிய கர்மத்வஜ்ஞாநம் ஸம்ஸ்கார்யத்வத்தில் ஹேது என்று அபிப்ராயம்.*

न खल्वसौ निर्वर्त्य:, अनादिसिद्धक्रमत्वात्, यथापूर्वोच्चारणे वाक्यनिर्माण व्यवहाराभावाच्च; नापि विकार्य:, दुग्धदध्यादिवदन्यथाभावादृष्टे:; नापि प्राप्यत्वमात्ररूप: उपयोगान्तरत्वे तदयोगात्; अत: परिशेषसहकृत कर्मत्वावगति: संस्कार्यत्वे हेतुरिति । *(இதுவானது நிர்வர்த்யமாக க்ரியையினால் நிஷ்பாத்யமாக - உண்டுபண்ணப்பட்டதாக ஆகாது. அநாதிகாலஸித்தமாக வந்துகொண்டிருப்பதால் முன்னோர்கள் உச்சரித்தபடியே உச்சரிப்பதனால் வாக்ய நிர்மாண வ்யவஹாரம் ஸம்பவிக்காது. விகார்யமாகவும் ஆகாது. பால் தயிராக விகாரத்தை - மாறுதலை அடைவதுபோல இங்கு காணப்படவில்லை. ப்ராப்யத்வமும் ஸம்பவிக்காது. வேறு பலம் ஸம்பவிக்கிறதாகயிருக்க ப்ராப்யத்வ மாத்ரத்தில் பர்யவஸாநமும் சொல்லத்தகாது. ஆகையால் அகத்யா - வேறுவழியில்லாமையை ஒப்புக்கொள்ளப்பட்டதோடு கூடின கர்மத்வ மாத்ரம் ஸம்ஸ்கார்யத்வத்தில் ஹேதுவாக ஆகிறது.*

**நநு** - *கர்மத்வ அவகமே அபி (ஸ்வாத்யாயத்திற்கு கர்மத்வம் ஸித்தித்தாலும்)* श्रुत्यादिभिरविनियुक्तस्याद्रव्यस्य - *ஶ்ருத்யாதிகளால் விநியோகிக்கப்படாத அத்ரவ்யமான ஸ்வாத்யாயத்திற்கு ஸம்ஸ்கார்யத்வம் எவ்விதம் சொல்லக்கூடும் எனில் ஸமாதாநம் அருளிச் செய்கிறார்* - **ஸம்ஸ்காரோ ஹி நாம கார்யாந்தர யோக்யதாகரணம்.**

*ஹி நாமப்யாம் ப்ரஸித்தி: ப்ரதியோக்யப்யுபகமச்ச ஸூச்யதே. ஹி ஶப்தமானது ப்ரஸித்தியைக் காட்டுகிறது. நாம என்னும் ஶப்தமானது இதற்கு பரனுடைய (ப்ரதியோகியின்) அங்கீகாரமும் இருக்கிறதென்கிற உத்கர்ஷத்தைச் ஸூசிப்பிக்கிறது. அல்லது அபி ச என்கிற அவ்யயம் போல அநேக அவ்யயங்களுக்குத் துல்ய ரூபமுள்ள ஒரு ஶப்தமாகவும் கொள்ளலாம்.* **ஸ்வாத்யாய ஸம்பாவித பாவீ உபயோக ஸம்ஸ்காராபிப்ராயேண அத்ர கார்யாந்தர யோக்யதா கரணோக்தி:** - *ஸ்வாத்யாயத்தால் ஸம்பாவிதமான மேலே வரப்போகும் கார்ய விசேஷத்தில் யோக்யதையை உண்டுபண்ணுதலென்கிற அபிப்ராயத்தால் கார்யாந்தர யோக்யதா கரணம் என்று சொல்லப்பட்டது. யத்தூக்தம்-ஶ்ருதிகளில் அவிநியுக்தத்வாத் ஸம்ஸ்கார்யமாக ஆகாதென்று சொன்னது ஸரியல்ல. விநியோகமில்லாமலிருந்தாலும் உபயோக த்ருஷ்டியிலேயே ஸம்ஸ்கார்யத்வம் ஸம்பவிக்கும் -* **★ரிக்வேதேந ஹோதா கரோதி-★** *இது முதலியவைகளால்* **ஸாமாந்யத: விசேஷதச்ச** *விநியோகமிருப்பதைக் காணலாம். 'அத்ரவ்யமாக இருப்பதால் ஸம்கார்யத்வம் கூடாது என்பதும் ஸரியல்ல. யதோக்தமான அத்யயந க்ருஹீதத்வே விரோதமில்லாமையால் க்ரஹண விஷயத்வாதிகள் குணங்கள் விஷயத்திலும் ஸர்வ ஸம்மதமாகும். ஸ்வோதித க்ரியா ஸாத்யத்திற்கு ஈஶ்வர அநுக்ரஹ ரூப அதிசயமானது ஸ்வாத்யாயத்திற்கு ஆதாரமாக இல்லாமற் போனாலும் அத்யயந ப்ராப்ததயா ஆராத்ய புத்தி ஸங்க்ருஹீதேந - அத்யயநம் பண்ணியதால்* **★''விஷ்ணுநாமா ஸ வேதேஷு வேதாந்தேஷு ச கீயதே★** *என்கிறபடி ஆராத்யனை ஸர்வேச்வரன்தான் வேதத்தில் சொல்லப்படுகிறன் என்கிற புத்தியிலேயே யதார்ஹம் உச்சாரண. க்ரியைக்கு ஶாஸ்த்ரத: நியமாத் ந அதிப்ரஸங்க: - ஸ்வாத்யாயத்திற்கு ஸம்ஸ்கார்யத்வம் சொன்னதில் தவறென்றும் இல்லை. ஶாஸ்த்ர ஸம்மதியே உள்ளது. வ்ரீஹ்யாதி ப்ரோக்ஷணத்தில் கண்ணுக்குத் தெரியாத அதிசயம் இருக்கட்டும், இல்லாமற்போகட்டும், கீழே கூறியபடி எல்லா இடங்களிலும் ஈச்வராநுக்ரஹரூப அதிசயம் இருக்கத்தானிருக்கிறது.*

**★யத்யபி** *ஸத: உத்கர்ஷ ஆதாநம் இருக்கிற ஸ்வபாவத்திற்கு மேன்மேலும் உத்கர்ஷத்தை உண்டுபண்ணுதல் ஸம்ஸ்காரமென்று கடந்தகாலத்திற்கும் வரும்காலத்திற்கும் (भूत, भावि) உபயோகியான ஸம்ஸ்கார அநுரூபமான அநுகத லக்ஷணம் சொல்லலாம். ஆயினும் ஸ்வாத்யாயத்திற்கு பூதோபயோகித்வம் ஸம்பவிக்காதாகையால் வரும்காலத்திற்கு (பாவ்யுபயோகி) உபயோகப்படக் கூடிய ஸம்ஸ்காரலக்ஷணம் இங்கு கூறப்பட்டது.)*

**நநு - ★ஸக்தூந் ஜுஹோதி★ ★ஸுவர்ணம் பார்யம்★** *இது முதலான இடங்களில் ப்ரத்யய ஸ்வாரஸ்யத்தால் நிர்வர்த்யாதி ரஹித கர்மத்வமானது அறியப்பட்டாலும் த்ரவ்யத்திற்கு - ஸக்து ஸுவர்ணங்களுக்கு ஸம்ஸ்கார்யத்வமில்லை. ஸக்துஹோம ஜந்ய அத்ருஷ்ட பாக்காக புருஷன்தான் சொல்லப்படுகிறன். இதனால் ஸம்ஸ்கார்யத்வ அபாவவதி ஸக்த்வாதி த்ரவ்யங்களில் கர்மத்வ ரூப ஹேது இருப்பதால் அநைகாந்த்யம்'* என்கிற *தோஷம் வருகிறது. அதாவது ஸம்ஸ்கார லக்ஷணம் உபபந்நமாகாமையால்* **★ஸக்தூந் ஜுஹோதி★ ★ஸுவர்ணம் பார்யம்★** என்கிற

இடங்களில் ப்ரத்யய ஸ்வாரஸ்யத்தால் அறியப்பட்ட கர்மத்வம் பக்ஷம் என்று அர்த்தம். அதவா, புருஷனுக்காவது அஸம்ஸ்கார்யத்வ ப்ரஸங்க:. ஆதலால் ★ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய: 'ஸ்வாத்யாயம் அதீயீத' ★ இது முதலான வைகளிலும் ஜபவிதிகளிலும் கர்மத்வம் துல்யமாகவே இருப்பதால் கர்மத்வரூப ஹேதுவைக் கொண்டு அத்யயநமானது ஸ்வாத்யாய ஸம்ஸ்காரமென்று சொல்லவொண்ணுது. பரிஹாரம்:- ★ஸம்ஸ்கார்யத்வம் ச ஸ்வாத்யாயஸ்ய யுக்தம்★ (ஸ்வாத்யாயத்திற்கு ஸம்ஸ்கரிக்கப்படத்தக்க தன்மை பொருத்தமுள்ளது.) என்று. சகாரம் சங்கையின் நிவ்ருத்தியைக் காட்டுகிறது. இவ்விடத்தில் அவ்வாறு அநுபபத்தி இல்லை. அயம் பாவ:- ஸக்து முதலியவைகளுக்கு பூதபாவி உபயோகமில்லை. ஜபாதிகளுக்கு க்ருஹீத அக்ஷர விஷயத்வம் அவச்யம் பாவாத் அதாவது முன்பு அதிகரித்த விஷயத்தையே ஜபிக்கவேண்டியிருக்கிறது. ஆகையால் இவ்விடத்தில் அறியப்பட்ட கர்மத்வத்திற்கு பாதகம் ஒன்று மில்லை. ஆதலால் அவ்விடத்தில்போல் இவ்விடத்தில் சொல்வதற்கில்லை. எதனுல் இவ்விதம் சொல்லப்படுகிறது ? என்ருல் சொல்லுகிருர் - **தர்ம, அர்த்த, காம, மோக்ஷரூபபுருஷார்த்த சதுஷ்டய தத்ஸாதநாவபோதித்வாத்** (தர்ம, அர்த்த, காம, மோக்ஷம் என்கிற நான்கு புருஷார்த்தங்களையும் அவைகளின் ஸாதநங்களையும் அறிவித்ததனுல்) என்று. உபயோகம் காணப்படாமையால் ஸக்து முதலியவைகளில் கர்மாவிற்கு பாதம் சொல்லப்பட்டது. ஸ்வாத்யாயத்திற்கோ என்ருல் மேலே வரப்போகிற த்ருஷ்ட அத்ருஷ்ட அநேக ப்ரயோஜநம் இருப்பதைக் காண்கையால் ஸக்துவைப்போல அஸம்ஸ்கார்யத்வம் யுக்தமாகாதென்று தாத்பர்யம். இவ்விடத்தில் புருஷார்த்த சதுஷ்டயத்திற்கு வேதவேத்யத்வம் சொல்லியிருப்பதானது ஸர்வபாகாநுவ்ருத்தமான ப்ரயோஜந ஸாமாந்யம் சொல்லப்பட்டிருப்பதால் க்ருத்ஸ்நமும் (வேதபாகம் முழுவதும்) மீமாம்ஸிதவ்யம் - விசாரம் பண்ணவேண்டுமென்பதைத் தெரிவிப்பதற் காகவும் பாஹ்ய ஆகமங்களில் சொல்லப்பட்டிருப்பவைகளில் ச்ரத்தை கொள்ளக்கூ டாதென்பதற்காகவுமாம். புருஷார்த்த சதுஷ்டய தத்ஸாதந என்பதனுல் முன்பு சொல்லப்பட்டுள்ள வ்யாக்யேயத்தின் (வேதத்தின்) ஐகபத்யத்தின் பொருட்டு ப்ரயோஜநவத் அர்த்தாவபோதித்வம் (ப்ரயோஜந முடைய அர்த்தத்தைத் தெரிவித் தல்) என்பது அநுகதம், (பொதுவானது) என்று கூறப்பட்டதாகிறது அல்லது புருஷார்த்த பரத்வம் (புருஷார்த்தத்தைச் சொல்லுகிறது) அநுகதம் எனலாம். இஷ்டமான பலனும் அதன் ஸாதநமும் (இரண்டும்) புருஷார்த்தமாகையாலே அவைகள் வேதத்தின் இரண்டு பாகங்களிலும் சொல்லப்பட்டிருப்பதால் புருஷார்த்த பரத்வம் அநுகதம் என்று சொல்லப்பட்டது. யத்யபி அர்த்த காமங்கள் அவைகளைப் பெற செய்யப்படும் உபாயங்கள் சில லோக ஸித்தங்கள். ஆயினும் தனேசனுன குபேரன் ஸுரேசனுன இந்த்ரன் முதலானவர்களுடைய விபூதி ரூப அதிசயித அர்த்த காமங்களும் ஐஸ்வர்யமும், காமமும், அவைகளின் ஸாதநங்களும், லோக ஸித்தமான பசு புத்ராதிகள், சித்ராயாக புத்ரகாமேஷ்டியாக ஸாத்யங்கள் என்பதும் லௌகிக ப்ரமாணத்திற்குக் கோசரமல்லாமையால் (லௌகிக ப்ரத்யக்ஷாதி ப்ரமாணத்தால் அறியமுடியாதாகையால்) வேதோக்தங்களென்று சொன்னது யுக்தமே யாகும். தர்மம் த்ரவ்யாத்மநா ப்ரத்யக்ஷமாகிலும் ஶ்ரேயஸ்ஸாதநத்வேந ஶாஸ்த்ர க்ராஹ்யமாகிறது.

श्रेयस्साधनता ह्येषां नित्यं वेदात्प्रतीयते । तद्रूपेण च धर्मत्वं तस्मात् न इन्द्रियगोचरः ॥
*(ச்லோ-வா.சோ.ஸூ. 14 ஶ்லோ)*

*(இவைகளுக்கு நித்யமாக ஶ்ரேயஸ்ஸாதநதையானது வேதத்தால் அறியப்படுகிறது. ஶ்ரேயஸ்ஸாதநமென்பதால் இவைகளுக்கு தார்மத்வம் ஸித்திக்கிறது. ஆகையால் தர்மம் இந்திரிய கோசரமல்ல) என்று சொல்லியிருப்பதைக் காணலாம். மோக்ஷமும் நம் கண்ணுக்குத் தெரியாது. (ந அஸ்மதாதி ப்ரத்யக்ஷ:) அநுமானத்தாலும் அறியமுடியாது. ஆத்மா கதாசித் ஸமஸ்த விஶேஷகுண ஶூந்ய: - அநித்ய விஶேஷ குணவத்வாத் - கடவத் என்கிற அனுமானத்தினுல் ஸாதிக்கிறேமெனில் விபக்ஷபாதகம் ஒன்று மில்லாமையால் அநுமாநத்வம் ஸித்திக்கிறது. முக்திபர ஶாஸ்த்ரத்தைக் கொண்டு விபக்ஷத்தில் பாதகம் சொல்லுகிறேமெனில் அநுமானம் வ்யர்த்தமாகும். நிரதிசயாநந்த ப்ரஹ்மத்தை அநுபவிக்கிற ஆத்மாவினிடத்தில் மோக்ஷத்தில் ஹேது ப்ரவ்ருத்திப்பதற்கு ப்ரஸக்தியே இல்லை. இதற்கு விபரீதமாக ஸாதித்தால் ஆகமத்திற்கு பாதகம் வரும். மேலும்* ★**ஜீவ: கதாசித் ஸமஸ்தவிஶேஷ குணசூந்யோ ந பவதி ஆத்மத்வாத் ஈச்வரவத்** ★ *என்றும் ப்ரத்யநுமானம் சொல்லலாம். ஆகையால் மோக்ஷரூப புருஷார்த்தமும் வேதத்தைக் கொண்டே அறியப்படுகிறதென்பது ஸர்வஸம்மதம்.* அவபோதித்வாத் - *அநுஷ்டானத்திற்கு உபயோகமான ஜ்ஞானத்தை உண்டுபண்ணுவதால் என்று அர்த்தம்.*

**நநு** - *அர்த்தத்தை அறிவிக்கும் தன்மையானது ★ஹூம்★ முதலிய மந்த்ர பீஜாக்ஷரங்களுக்கு இல்லாததால் அவ்யாப்தி: எனில் சொல்லுகிறுர்* **ஜபாதிநா ஸ்வரூபேணாபி தத்ஸாதநத்வாச்ச** *(ஜபம் முதலியதாலும் ஸ்வரூபத்தாலும் அவைகளுக்கு ஸாதகமாயிருப்பதாலும்). ஜபாதிநா என்கிற இடத்திலுள்ள ஆதிபதத்தால் அத்யயநம் க்ரஹிக்கத்தக்கது. ஸ்வரூபேணாபி - அர்த்தஜ்ஞானம் அநுஷ்டாநம் இவை இரண்டுமில்லாவிடினும் ஜபிக்கிற (ஜப்யமாந) அக்ஷர மாத்ரத்திஞலே கூட அதாவது அநுஷ்டானத்திற்கநுகுணமான ஜ்ஞானமும் ஜபம் முதலியதும் அத்யயநத்திஞல் (ஸம்ஸ்க்ருதமான) ஸம்ஸ்கரிக்கப்பட்ட ஸ்வாத்யாயத் திஞலேயே சொல்லப்பட்டதாகிறது என்று தாத்பர்யம். அல்லது புருஷார்த்தங்கள் அவைகளின் ஸாதநங்கள். இவைகளைத் தெரிவிப்பதோடு கூட அவைகளுக்கு ஸாதநத்வம் என்கிற அர்த்தமும் 'ச' ஶப்தத்தால் சொல்லப்படுகிறது. அதாவது அர்த்தம் போல் (தனம் போல்) தர்மத்திற்கும் நமக்கு வேண்டியதை ஸாதித்திக் கொடுக்கும் தன்மையிருப்பதால் புருஷார்த்தமாய்க் கொண்டு தர்ம விஶேஷமானது ஸாதநமாகவும் ஆகிறது. ஆகையால் புருஷார்த்த ஸாதந ஶப்தத்தால் சொல்லப்படு கிறது. அவைகளுக்கு ஸாதநமாயிருத்தல் இரண்டு விதம். ஜபம் முதலியவற்றால் மறக்காமல் தரிக்கப்படுகிறதாலும் ஸ்வரூபத்தாலும் என்று. (ஜபாதிநா, த்ரியமாநே* **ஸ்வரூபேண ச**). *ஆகையால் மத்தியில் ஸமுச்சயம் செய்துகொள்ளத்தக்க அர்த்தத்தை சேர்த்துக்கொள்வதில் கருத்துள்ளது* **அபி** *ஶப்தம் மந்த்ரார்த்த வாதங்களுக்கும் யதார்ஹம் சதுர்வித புருஷார்த்த போதகத்வம் தத்போதக உபகாரத்வம் ச க்ரஹித்துக் கொள்ளவேண்டும். இவ்விதமாக நியமவிதித்வம் உபபாதிக்கப்பட்டதாகிறது.*

அர்த்த ஜ்ஞான பர்யந்தத்வம் ஸப்தஸ்வாரஸ்யத்தால் கொள்ளப்படுகிறதா? அல்லது அர்த்தானுபபத்தியினுலா? என்கிற விகல்பத்தை மனத்தில் கொண்டு அவற்றுள் ஸப்த ஸ்வாரஸ்யத்தைப்பற்றி பதில் சொல்லப்போகிறவராய்க் கொண்டு அத்யயந விதிநிரூபணத்தை உபஸம்ஹரிக்கிருர். ஏவம் என்று ஆரம்பித்து **ஏவம் அத்யயநவிதி:** என்பதால் அர்த்த ஜ்ஞான பர்யந்தத்வம் அபூர்வ விஷயத்வமும் தஸ்ய நாஸ்தீத்யுச்யதே. மந்த்ரவத் என்று தனித்துச் சொன்னதானது வ்ரதத்திற்கு உட்பட்டோ உட்படாமலோ அத்யயநத்திற்கு உபகாரகமான மந்த்ரங்களைக் கொள்ள வேண்டுமென்று அபிப்ராயம். அதாவது **★சந்நோமித்ர:★** என்கிற மந்த்ரமும் **★ப்ரணவம் ப்ராக் ப்ரயுஞ்ஜீத வ்யாஹ்ருதி: ததநந்தரம் ததோ அதியீத★** என்கிற மந்த்ரமும் இதனுல் ப்ரணவாதி மந்த்ரங்களுக்கு வ்ரதாநுப்ரவேசமில்லாமலிருந்தாலும் கூட கதநமாத்ரத்தால் உபகாரத்கவமுண்டு என்று தெரிகிறது. நியமங்கள் முன்பு சொல்லப்பட்டவைகள். அதாவது **★நீசைராஸீத ச ஆஸநாத்★** என்கிறபடி ஆசார்ய ஸகாசத்தில் தாழ்ந்ததான ஆஸநத்தில் உட்காரவேண்டும். ஆசார்யன் முகத்தைப் பார்த்தவண்ணமிருக்கவேண்டும் என்கிற நியமங்கள் விவக்ஷிதங்கள். அல்லது சிறுவனுக்கு உபநயந காலத்திலும் ஸந்த்யோபாஸநம் முதலிய கர்மாக்களை அனுஷ்டிக்கும் காலத்திலும் விதிக்கப்படுகிற உச்சாரணமானது நியமத்துடன் கூடின அக்ஷர மாத்ரத்திற்கே தவிர அர்த்தஜ்ஞான ஸம்பாதநம் எவ்விதமில்லையோ அதேபோல சிறுவர்களுக்கு ஆரம்பத்தில் மந்த்ரார்த்தங்களை அறிவது ஸம்பவிக்காது.

**அக்ஷரராசிக்ரஹணம்** - நியமத்துடன் கூடின வேதாக்ஷரங்களின் உச்சாரணமே அத்யயந ஸப்தத்திற்கு முக்யமான அர்த்தம். **★வேதாநாம் கிஞ்சித் அதீத்ய ப்ராஹ்மண:★ ★ஏகாம் சாகாம் அதீத்ய ஸ்ரோத்ரிய:★ ★அங்காத்யாயீ அநூசாந:★ ★கல்பாத்யாயீ ரிஷி:★ ★கல்பஸூத்ர ப்ரவசநாத்யாயீ ப்ரூண:★** (வேதங்களில் சொற்பபாகத்தை - சிலவற்றை அத்யயநம் பண்ணியவன் ப்ராஹ்மணன் எனப்படுகிருன். ஒரு சாகையை மட்டும் அத்யயநம் பண்ணியவன் ஸ்ரோத்ரியன். அங்கங்களை அத்யயநம் பண்ணியவன் அநூசானன். கல்பத்தை அத்யயநம் பண்ணியவன் ரிஷி. கல்ப ஸூத்ர ப்ரவசன அத்யயநம் பண்ணியவன் ப்ரூணன் எனப்படுகிருன்) என்றிவை முதலான ப்ரயோகமிருப்பதால் தன்னுடைய சாகையின் ஒரு பாகத்தை மட்டும் அத்யயநம் செய்தவனுக்கு அர்த்தஜ்ஞாநம் ஸம்பவிக்காது. அங்காத்யயநத்தை தனித்துச் சொல்லியிருப்பதால் அங்கங்களை அத்யயநம் பண்ணு விட்டால் அர்த்தஜ்ஞானத்திற்கு ப்ரஸக்தியே இல்லை. ஸ்வாத்யாய ஸப்தமும் அர்த்த ஜ்ஞானத்தை உணர்த்தாது. அபிது தன் ஸாகையை மட்டும் சொல்லும். ஆதலால் அத்யயந கர்மத்வம். ஸ்வாத்யாயத்திற்கே யுக்தமாம். அர்த்த ஜ்ஞாநத்திற்குப் பொருந்தாது. அத்யயநம் பண்ணுவதால் என்ன ப்ரயோஜனம்? என ஆகாங்க்ஷையுண் டானுல் த்ருஷ்டப்ரயோஜநம் ஸம்பவிப்பதாக இருக்கும்போது அத்ருஷ்டப்ரயோஜந கல்பநம் கூடாது. அக்ஷரராசிக்ரஹணமே ஸந்நிஹிதமாக இருப்பதாலும் **★ஹூம்★** முதலிய வற்றில் அநுகதமாக இருப்பதாலும் அக்ஷரராசிக்ரஹண மாத்ரத்தை ஸ்வீகரிப்பதே யுக்தமாகும். வ்யவஹிதமாயிருப்பதாலும் அஸார்வத்ரிகத்வாச் ச ஹூம் முதலிய இடங்களில் இல்லாமையாலும் அர்த்தஜ்ஞாந பர்யந்தத்வம்

கூடாதென்று அபிப்ராயம். ஒரு தடவை உச்சரிப்பதை அவதியாகக் கொண்டிருக்கும் தன்மையை வ்யாவ்ருத்திப்பதற்காக அக்ஷரராசிக்ரஹணத்தில் பர்யவஸாநம் கூறப்பட்டது. அக்ஷரராசிமாத்ரக்ரஹணம் என்கிற இடத்தில் மாத்ரச் ப்ரத்யயத்தால் விதி வ்யாபாரத்திற்கு அர்த்தஜ்ஞான பர்யந்தத்வத்தை விலக்குகிறது.

**பர்யவஸ்யதி** - ★அக்நீந் ஆததீத★ என்கிற விதிவாக்யம் எவ்விதம் ஆதாந மாத்ரபரமோ-மேலுள்ள க்ரது விநியோக பர்யந்தமாகிறதில்லையோ அவ்விதமே இங்கு கொள்ளவேண்டும். அதாவது பூர்வமீமாம்ஸையில் ★தத் ப்ரக்ருத்யர்த்தம் யதா அந்யே அநாரப்ய வாதா:★ என்கிற அதிகரணத்தில் அக்நி ஆதாந விதியானது பர்ணதாதிகள்போல க்ரதுபர்யந்தத்வம் சொல்லுகிறதென்று பூர்வபக்ஷம்பண்ணி அலௌகிகமான ஆஹவநீயாக்நிக்கே பலாகாங்க்ஷயானது சாந்தமாகிறபடியால் அது மாத்ரத்திலேயே ஆதாநவிதியானது முடிந்துவிடுகிறது. க்ரதுபர்யந்தத்வம் சொல்லக்கூடாதென்று ஸித்தாந்தம் பண்ணியுள்ளார். அதேபோல் அத்யயந விதியானது அக்ஷரராசிக்ரஹணமாத்ரத்தைத்தான் சொல்லுகிறது. அர்த்தஜ்ஞாந பர்யந்தம் சொல்லாதென்று தாத்பர்யம். ★யதா காரீரயா வ்ருஷ்டிகாமோ யஜேத★ (மழை வேணுமென்கிற எண்ணமுள்ளவன் காரீரியாகத்தால் தேவதைகளையாராதித்து அவைகளை ஸந்தோஷிக்கச் செய்யவேண்டும்) என்கிற விதிவாக்யம் வ்ருஷ்டி ஸித்திபர்யந்தம்தான். (மழை பெய்கிறவரையில்தான்) அந்த கர்மாவைச் செய்யச் சொல்லுகிறதோ- வ்ருஷ்டிக்குப் பிற்பட்டுள்ள பலஸித்தியின் உபயோகத்தை ப்ரதானமாகக் கொள்ளாதோ - அவ்விதமே இங்கும் கொள்ளவேண்டும்.

இவ்விதமாக ஶப்த ஸ்வாரஸ்யத்தினுல் அர்த்தஜ்ஞாநபர்யந்தத்வம் சொல்லும் பக்ஷம் நிரஸிக்கப்பட்டது. இனி அர்த்தாநுபபத்தியை பரிஹரிக்கிறுர். அர்த்தாநுபபத்தி சங்கை மூன்று விதமாயுள்ளது. அவைகளாவன:

1. விதியானது அக்ஷரக்ரஹண மாத்ரமாக இருக்கும் பக்ஷத்தில் ग्रहणशेषतया विनियुक्तस्य स्वाध्यायस्य அர்த்த பர்யந்தத்வத்தில் அவிவக்ஷிதார்த்தத்வம் ஏற்படும் (श्रुत)..

ஸித்தாந்தத்தில் ஸ்வாத்யாயமானது ஶேஷி அது அக்ஷர க்ரஹணத்திற்கு ஶேஷமாகாது. ஆகையால் ग्रहणशेषतया अविनियुक्तस्य என்று பதத்தைப் பிரித்துக் கொள்ள வேண்டும். க்ரஹண ஶப்தமானது அர்த்தக்ரஹணபரம். அர்த்தஜ்ஞாநஶேஷதயா அவிநியுக்தஸ்ய ஸ்வாத்யாயஸ்ய அர்த்தபரத்வே ப்ரமாணுபாவாத் அவிவக்ஷிதார்த்தத்வம் ஏற்படும் என்று அர்த்தம். (भाव.प्र)

2. மீமாம்ஸைக்கு ப்ரவர்த்தகமில்லாததால் அநாரம்பணீயத்வம் வரும்.

3. அக்ஷரத்தை க்ரஹிப்பதென்பதானது துக்கரூபமாதலால் விதிக்கு ப்ரயோஜன பர்யவஸாநம் இல்லாமற் போகவேண்டிவரும்.

இம்மூன்று ஶங்கைகளை நிராகரிப்பதின் மூலம் அத்யயந விதிக்கு அர்த்தஜ்ஞாநபர்யந்தத்தையும், அதை நிமித்தமாகக் கொண்டுவந்த ப்ரஹ்ம விசார அநாரம்ப

ஶங்கையையும் போக்குகிறவராய் வேதமென்கிற ஏக ப்ரபந்தத்திற்கு வ்யாக்யாந ரூபமாகவிருப்பதால் கர்ம ப்ரஹ்ம விசாரங்கள் இரண்டிற்கும் ஐகஶாஸ்த்ரயத்தையும் தெரிவிக்கிறார். அத்யயந க்ருஹீதஸ்ய என்று.

இவ்விடத்தில் அத்யயநம் என்பதை ஸாங்காத்யயநம் - அங்கங்களுடன் கூடிய அத்யயநம் என்று சொன்னதாகக் கொள்ள வேண்டும். கீழே ★அதீதஸாங்க வேதஸ்ய★ என்று சொல்லியிருப்பதாலும் மேலேயும் ★நநுச ஸாங்கவேதாத்யய நாத்★ என்று சொல்லியிருப்பதாலும் இவ்விடத்திலும் ஸாங்கவேதாத்யயநம் என்று சொன்னதாகத்தான் கொள்ள வேண்டும். அதனால்தான் (அங்கங்களுடன் அத்யயநம் பண்ணியதால்தான்) ப்ரயோஜனமுள்ள அர்த்தத்திற்கு ஆபாத ப்ரதீதியானது ஸித்திக்கிறது. அர்த்தங்கள் - யக்ஞம், உபாஸநம் முதலியவை. அவைகள் ஸ்வர்கம், மோக்ஷம் முதலியவைகளை ப்ரயோஜநமாகக் கொண்டவை. ப்ரயோஜநவதர்த்த ஶப்தத்தால் காக்கைக்கு எத்தனை பற்கள் உள்ளன என்று வ்யர்த்தமாக விசாரம் சொல்வது போன்றதன்று என்று தெரியவருகிறது.

★ப்ரயோஜநவத் அர்த்தாவபோதித்வ தர்சநாத் ★இதனால் அத்யயந விதிக்கு பரம்பரையாக புருஷார்த்தத்தில் பர்யவஸாநம் சொல்லப்பட்டதாகிறது. அத்யயநத் திற்கு ஸாக்ஷாத் ப்ரயோஜநம் அக்ஷர ராசிக்ரஹணமென்பது அத்யயநக்ருஹீதஸ்ய என்கிற பதத்தால் சொல்லப்பட்டது. விதிக்கு அர்த்த ஜ்ஞாநபர்யந்தத்வம் கொள்ள வேண்டுமென்பவரைக் கேழ்க்கிறேன். உமக்கு விதிக்கு ஸாக்ஷாத் புருஷார்த்த பர்யவஸாயித்வம் விவக்ஷிதமா? அல்லது பரம்பரையாகவா? அர்த்தஜ்ஞாந ப்ர்யந்தம் சொன்னபோதிலும் அநுஷ்டானத்தையும் அபூர்வத்தையும் இடையிட்டு ஸ்வர்கமே ப்ரயோஜநமாக இருப்பதாலும் அத்யயந விதிக்கு ஸ்வர்க பர்யந்தத்வம் ஒப்புக்கொள்ளப்படாமையாலும் விதிக்கு ஸாக்ஷாத் ப்ரயோஜந பர்யவஸாயித்வம் பொருந்தாது. ஆகையால் பரம்பரையா புருஷார்த்த பர்யவஸாநத்தைச் சொன்னார். அது எங்கள் பக்ஷத்திலும் ஸம்பவிக்கிறது.

ஸ்வபாவத ஏவ ஶப்தத்திற்கு அர்த்தத்தை அறிவிக்கும் சக்தி ஸ்வபாவத்திலேயே உண்டென்று அர்த்தம்.★ விதிவ்யாபாரம் அநபேக்ஷ்ய இத்யர்த்த: வ்யுத்பந்ந பதார்த்தாதே: இதிஶேஷ:: ★வ்யுத்பந்ந பதார்த்தங்களைக் குறித்து ஶப்தத்திற்கு உணர்த்தும்-தன்மையானது விதிவ்யாபாரத்தை அபேக்ஷிக்காமலேயே ஸ்வபாவஸித்த மென்பது உலகப் ப்ரஸித்தம். ஏவகாரமானது விதியின் நைரபேக்ஷ்யத்தைக் காட்டுகிறது. ஜபவிதிபோல வேறு அர்த்தத்தில் ப்ரயோகிப்பது ஶப்தத்திற்கு ஸ்வபாவ ஸித்தமாக அர்த்த பரத்வத்தை விலக்காது. அதாவது याजयित्वा प्रतिगृह्य वा अनश्नन् त्रिः स्वाध्यायं वेदं अधीयीत त्रिरात्रं वा सावित्रीं (பிறருக்கு யாகம் செய்வித்தாலும் அல்லது ப்ரதிக்ரஹம் பண்ணினாலும் அந்த பாப நிவ்ருத்தியின் பொருட்டு உபவாஸமிருந்து மூன்று தடவை தன் வேதத்தை அத்யயநம் பண்ண வேண்டும். அல்லது மூன்றுநாள் காயத்ரீ ஜபம் பண்ண வேண்டும்). 'वेदमेव जपेन्नित्यं (வேதத்தையே நித்யம் ஜபிக்க வேண்டும்). இது முதலான விதியானது வேதத்தினுடைய அர்த்த பரத்வத்தை தடை செய்யாது. இதனால் அவிவக்ஷிதார்த்தத்வம் ஏற்படுமென்று சொன்ன முதல் ஶங்கைக்குப் பரிஹாரம் சொல்லப்பட்டது.

அத்யயநம் செய்யப்பட்ட வேதம் ஸ்வத: தானுகவே அர்த்தததை உணர்த்துமேயா ஞல் மீமாம்ஸையால் என்ன ப்ரயோஜநம் என்கிற ஶங்கைக்கு இனி பதில் கூறுகிருர் - க்ருஹீதாத் என்று. க்ருஹீதாத் - க்ரஹிக்கப்பட்ட மாத்ரத்திஞல். அத்யயந க்ருஹீதஸ்ய (அத்யயநத்திஞல் க்ரஹிக்கப்பட்டிக்கிற) என்று சொல்லியிருப் பதைக் காணலாம். ★தேந மீமாம்ஸாக்ய இதிகர்தவ்யதா ராஹித்யம் விவக்ஷிதம்- இதஞல் மீமாம்ஸா ஶாஸ்தரத்தை அப்யஸித்து அர்த்தத்தை அறிய வேண்டுமென்ப தில்லை என்று தெரிகிறது. ஆபாத ப்ரதீதியானது ஸம்சய விபர்யயங்களோடு சேர்ந்திருப்பதால் அவைகளை பரிஹரிப்பதற்காகத்தான் மீமாம்ஸா ஶாஸ்த்ரம் வேண்டும் என்று அபிப்ராயம். ★'அத்யயந க்ருஹீதஸ்ய ஸ்வாத்யாயஸ்ய ஸ்வபாவத ஏவ ப்ரயோஜநவத் அர்த்தாவபோதித்வ தர்ஶநாத்'' ★ என்பதஞல் வேதத்திற்கு அர்த்த போதகத்வ ஸ்வபாவம் சொல்லப்பட்டது. இவ்விடத்திலுள்ள ப்ரயோஜநவ தர்த்த ஶப்தமானது பரம்பரையாக புருஷார்த்தத்தில் பர்யவஸாநத்தைத் தெரிவிப்ப தற்காக. மேலே அதற்குக் காரணமான ஆபாத ப்ரதீதியை உண்டுபண்ணுதலென்கிற தன்மையானது ஸஹகாரிகளின் வைகல்யத்தால் உண்டாகிறதாகையால் புநருக்தி தோஷமில்லை. வேதத்திற்கு ஆபாத ப்ரதீதியை உண்டுபண்ணுவது ஸ்வபாவமாகமாட் டாதே. ப்ரதீதியை (ஜ்ஞாநத்தை) உண்டுபண்ணுவதே அதன் ஸ்வபாவம். மீமாம்ஸையாகிற பரிகரமில்லாதபோது அந்த வேதம் ப்ரமையை உண்டுபண்ண மாட்டாது என்று சொல்லுவது ஶ்ருதியினுடைய ப்ரமிதி ஜநகத்வ ஸ்வபாவத்திற்கு விரோதியன்று. (ரூபம் முதலியவற்றை பார்ப்பதற்கு ஆலோகஸஹக்ருத சக்ஷுரிந்த்ரி யம் காரணம். அதாவது ரூபம் முதலியவற்றைக் கண்ணுல் சக்ஷுரிந்த்ரியத்தால் - பார்த்துத் தெரிந்து கொள்ளுகிறோம். ரூபம் முதலியவை இருட்டிலிருந்தால் அவைகளைப் பார்க்கமுடிகிறதில்லை. ஏனென்றால் அங்கு ஆலோகம் வெளிச்சம் - என்னும் ஸஹகாரி இல்லை. ஆக ஸூர்ய வெளிச்சம் அல்லது தீபத்தின் ஒளி என்கிற ஸஹகாரி காரணமில்லாவிடில் ரூபம் முதலியவை அறியப்படாமலிருப் பதஞலேயே அந்த ரூபாதிகளுடைய அநுபலம்பமானது (தெரியாமலிருப்பதானது) கண் முதலிய இந்திரியங்களுக்கு இயற்கையாகவுள்ள ரூபாதி ஸாக்ஷாத்கார ஶக்தியை எவ்விதம் கெடுக்காதோ அவ்விதமே இங்கும் கொள்ள வேண்டும். ஆபாதப்ரதீதிஸம யத்திலும் ப்ரயோஜநமுள்ளது என்கிற ஜ்ஞானமிருக்கிறது என்பதைக் காண்பிப்பதற்காக மறுபடியும் ★'ப்ரயோஜநவதர்த்த' ★என்று சொன்னார். ப்ரயோஜனமுள்ள அர்த்தத்தின் ஆபாத ப்ரதீதியன்றோ அதன் நிர்ணயத்தில் இச்சையை உண்டுபண்ணும். ப்ரயோஜனமற்ற காக்கையின் தந்தம் முதலியவற்றின் ஆபாதப்ரதீதியானது அதன் நிர்ணயத்தில் ஆசையை உண்டுபண்ணுகிறதில்லையே!

வ்யாகரணம் முதலிய ஶாஸ்திரங்களின் பலஸ்வரூபாதிகளைக் காட்டிலும் விலக்ஷணங்களான மீமாம்ஸாபல ஸ்வரூபங்களைக் காட்டுகிறார். தத்ஸ்வரூப ப்ரகார விஶேஷ நிர்ணயபல வேத வாக்ய விசாரரூப மீமாம்ஸா ச்ரவணே என்று. ஸ்வரூபவிஶேஷங்கள் அங்கிகள். ப்ரகாரவிஶேஷங்கள் - அங்கங்கள். பூர்வபக்ஷத்தில் கூறப்பட்டுள்ள ஸ்வரூப ப்ரகாரங்களைக் காட்டிலும் ஸித்தாந்தத்தில் சொல்லப்பட்டி ருக்கிற ஸ்வரூப ப்ரகாரங்களுக்கு வைஷம்யமானது விஶேஷ ஶப்தத்தால்

விவக்ஷிதம். ப்ரயோஜநவதர்த்த ஸ்வாத்யாய வேதமீமாம்ஸா ஶப்தங்கள் பூர்வோத்தர பாகங்கள் இரண்டிற்கும் பொதுவாக இருக்கின்றன.

ஸ்வயமேவ - தானாகவே விதியினாலல்ல. **அதீதவேத: புருஷ:** என்கிற இரண்ட பதங்களும் அதற்கு உபபாதகங்கள். அதீதவேத: என்று அத்யயந விதிவ்யாபரமானது அநுஷ்டிதாம்ஶத்தில் பர்யவஸிப்பதால் மீமாம்ஸையில் அதற்கு ப்ரவர்த்தகத்வ மில்லை என்பது த்யோதிதம. சேதநநாக இருப்பதால் பலனுடன் கூடின அர்த்தங்களுடைய ஆபாத ப்ரதீதியினால் ஸ்வயமேவ ப்ரவர்ததே - தானாகவே ப்ரவர்த்திக்கிறானென்பது புருஷ ஶப்தத்தின் அபிப்ராயம்.

ஐகஶாஸ்த்ரியமும் ராகத்தினால் ப்ரவ்ருத்தியும் இருக்கட்டும். பௌர்வாபர்ய நியமம் எதனால் சொல்லுகிறீர் என்பதற்கு தத்ர என்று ஆரம்பித்து பதில் சொல்லுகிறார். தத்ர - அந்த வேதத்தில். கர்மவிதி ஸ்வரூபே நிரூபிதே - கர்மபாகமானது வேதத்தின் உபக்ரமத்திலிருப்பதால் அத்யயநம் பண்ணியே க்ரமப்படி விசாரம் செய்வது யுக்தமாகவிருப்பதால் கர்ம விசாரத்தை முதலில் செய்யப் ப்ராப்தமாகிறது.

நநு - கர்மாக்களுக்கு அநந்தஸ்திரபலத்வமும் அல்பாஸ்திரபலத்வமும் பூர்வ பக்ஷஸித்தாந்த ரூபமாக ஓரிடத்திலும் சொல்லப்படவில்லை. அப்படியிருக்க அல்பாஸ்திரத்வஜ்ஞாநம் எவ்விதமுண்டாகும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு பதில் சொல்லுகிறார் - **கர்மவிதி ஸ்வரூபே நிரூபிதே கர்மணாம் அல்பாஸ்திர பலத்வம் த்ருஷ்டவா** (கர்மவிதி ஸ்வரூபத்தை நிரூபணம் செய்ய கர்மாக்கள் அல்பமாயும் நச்வரமாயுமுள்ள பலனுள்ளவைகள் என்பதைக் கண்டு (அறிந்து) என்பதால். கேவலகர்மவிதி ஸ்வரூபமே நிரூபிக்கப்பட்டது. அல்பாஸ்திர பலத்வ ஜ்ஞாநமானது மீண்டும் மீண்டும் செய்யவேண்டுமென்று சொல்லுகிற விதி (ஆவ்ருத்தி விதாநம்) முதலியதால் பலித்தது என்று அபிப்ராயம்.

யத்வா நநு பரமாத்ம ஆராதந கர்மாக்களுக்கு ★**ஸ்வகர்மணா தம் அப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவ:**★ என்று அநந்த ஸ்திர பலம் சொல்லப்பட்டிருக்கும்போது எவ்விதம் அல்ப அஸ்திரத்வ நிச்சயம் பண்ணப்படுகிறது?

**பரிஹாரம்-கர்ம விதிஸ்வரூபே நிரூபிதே** என்று கர்ம விதிஸ்வரூபம் நிரூபிக்கப்பட்டது. ஆராதிக்கத் தகுந்த பல தேவதா ஸ்வரூபம் நிரூபிக்கப்படவில்லை என்று கருத்து, அவனுடைய ஆராதநமாக கர்மாக்கள் செய்யப்பட்டாலன்றோ அநந்த ஸ்திரபலத்வம் ஸித்திக்கும்.

**அதவா,** विधिश्च स्वरूपं च विधिस्वरूपं, कर्मविधौ कर्मस्वरूपे च निरूपिते इत्यर्थ: । ஒவ்வொரு ஸம்வத்ஸரமும் சாதுர்மாஸ்யாதி யாகங்களுடைய ஆவ்ருத்தி விதியானது நிரூபிக்கப் பட்ட அளவில் சாதுர்மாஸ்யாதிகள் நச்வரமான பலன்களை உடையவைகள் என்கிற நிச்சயமுண்டாகிறது. அக்ஷயபலம் என்றால் ஆவ்ருத்தி - வருஷம்தோறும் பண்ண வேண்டுமென்று விதித்தது வ்யர்த்தமாகும். அவ்விதமே சாதுர்மாஸ்யாதி

ஸ்வரூபமும் ஆயிரம் வருஷங்கள் பண்ண வேண்டிய விச்வஸ்ருஜாம் அயநாதி ஸ்வரூபமும் நிரூபிக்கிறவரால் ★பலஸ்ய நிஷ்பத்தே: தேஷாம் லோகவத் பரிமாணத: பலவிஶேஷஸ்யாத்★ (பலமானது கர்மாவினால் உண்டாகிறதென்றால் உலகத்தில் உழைப்பினால் உண்டாகிற பல விஶேஷமானது பரிமிதமாயும் நச்வரமாயுமிருப்பது போல்தான் இருக்கும்) என்பதை அறிந்திருப்பதினால் பகவதநுக்ரஹத்திற்குப் பாத்ரனான ஒருவன் ★தத்யதா இஹ கர்மசிதோலோக: க்ஷீயதே ஏவமேவ அமுத்ர புண்யசித: லோக: க்ஷீயதே★ (எவ்வாறு இவ்வுலகில் பயிரிடுதல் முதலிய வ்யாபாரங்களால் ஸம்பாதிக்கப்பட்ட நெல் முதலிய பலமானது நாசத்தை அடைகிறதோ அவ்வாறே மறுமையிலும் புண்யத்தினால் ஸம்பாதிக்கப்பட்ட ஸ்வர்கம் முதலிய பலன்களும் க்ஷயத்தையடைகின்றன) இது முதலான வாக்யங்களால் கர்மாக்கள் அநித்ய பலகங்கள் என்பதை நன்கு அறிகிறான் என்று கருத்து.

அத்யயந க்ருஹீத ஸ்வாத்யாய- அத்யயநத்திற்கு வேதம் முழுவதும் விஷயமாகவிருப்பதாலும் உபநிஷத்தானது ஸ்வாத்யாய ஶப்தத்தில் உள்ளடங்கியிருப்பதாலும் என்று அர்த்தம். ஏகதேஶ ஶப்தத்தால் ஒரு ப்ரபந்தத்தின் ஒரு பாகம் என்பது ஸூசிதம். ஸாதாரணமாக வேத ஶப்தத்தால் நிர்தேசிக்கப்பட்ட ஶப்தராசியில் உபநிஷத் ஶப்தமானது ப்ரஹ்மத்தை மட்டும் ப்ரதிபாதிக்கிறது. மற்றவைகளை ப்ரதிபாதிக்காமலிருப்பதால் இந்த பாகத்தைத் தனித்துக் காட்டுகிறார். வேத ஶப்தத்தால் விசாரத்தைச் சார்ந்த பௌர்வாபர்ய நியமத்திற்கு ஹேது காட்டப்பட்டது. ஶாரீரக மீமாம்ஸாயாம் என்பதனால் வ்யாக்யாநத்தில் ப்ரதேச பேதத்தைக் காட்டுகிறார். ★அந்நவாந் அந்நாதோ பவதி மஹாந் பவதி ப்ரஜயா பஶுபிர் ப்ரஹ்மவர்சஸேந★ (ஐஶ்வர்யமுள்ளவன் ஸுகாநுபவம் பண்ணுகிறான். ஸந்ததியினாலும் பசுக்களாலும் ப்ரஹ்ம வர்சஸ்ஸாலும் மஹிமையுள்ளவனாக ஆகிறான்) இது முதலியவைகளால் ப்ரஹ்மவித்துக்குச் சொல்லப்பட்ட ஆநுஷங்கிகமான அல்பாஸ்திர பலன்களை வ்யாவ்ருத்திப்பதற்காக 'அம்ருதத்வரூப' ஶப்தம் ப்ரயோகிக்கப்பட்டுள்ளது. அதாவது ஆநுஷங்கிக பலன்கள் அல்பாஸ்திர பலன்களாக இருந்தபோதிலும் ப்ரதாந பலமானது அநந்தமாயும் ஶாஶ்வதமாயும் இருப்பதால் ஆபாதப்ரதீதி இருக்கிறது என்று தாத்பர்யம். கர்ம மீமாம்ஸையினால் ஸம்ஸ்கரிக்கப்பட்ட மனத்துடன் கூடிய ஶ்ரோதாவிற்கு உபாஸநம் பண்ணினால் கர்மாக்களால் வரக்கூடிய பலன்களும் ஆநுஷங்கிகமாக கிடைக்கும். ப்ரதாந பலமும் ஸம்பவிக்கிறது என்று ஜ்ஞானம் நிச்சயம் உண்டாகிறது.

அதிகரோதி- அதிகாரீபவதி-அதிகாரியாகிறான். அதிகாரிஸித்தி:, கர்மவிசார அதீத: இதி பாவ்யம். இவ்விதம் கர்மவிசாரம் செய்தவனே அதிகாரியாகிறான். ஸாதந சதுஷ்டயமுள்ளவன் அதிகாரியாகமாட்டான் என்று அபிப்ராயம்.

இவ்வளவால் ஐகஶாஸ்த்ரியம், க்ரம, நியமம், ஆரம்பணீயத்வம் இவைகள் உபபாதிக்கப்பட்டன.

* * * * * *

(भाष्यम्) तथा च वेदान्तवाक्यानि केवलकर्मफलस्य क्षयित्वं ब्रह्मज्ञानस्य चाक्षयफलत्वं दर्शयन्ति-★तद्यथेह कर्मचितो लोकः क्षीयते एवमेवामुत्र पुण्यचितो लोकः क्षीयते★

(छा.उ. ८-१-६) ★अन्तवदेवास्य तद्भवति★ (बृ.उ. ५.८.१) ★न ह्यध्रुवैः प्राप्यते ★(कठ.उ. २-१०)★ प्लवाह्येते अदृढा यज्ञरूपाः★ (मुण्ड.उ. १-२-७) ★परीक्ष्य लोकान् कर्मचितान् ब्राह्मणो निर्वेदमायात् नास्त्यकृतः कृतेन । तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम्। तस्मै स विद्वानुपसन्नाय सम्यक्प्रशान्तचित्ताय शमान्विताय। येनाक्षरं पुरुषंवेद सत्यं प्रोवाच तां तत्त्वतो ब्रह्मविद्याम्॥ ★(मुण्ड.उ. १-१-१२,१३) ★ब्रह्मविदाप्नोति परम् ★(तै.उ. आन २-१-१)★ न पुनर्मृत्यवे तदेकं पश्यति ★नं पश्यो मृत्युं पश्यति★ (छा.उ. ७-२६-२)★ स स्वराड् भवति ★(छा.उ. ७-२५-२) ★ तमेवं विद्वानमृत इह भवति नान्यः पन्था अयनायविद्यते ★(तै.पु.सू. १७) ★पृथगात्मानं प्रेरितारं च मत्वा जुष्टस्ततस्तेनामृतत्वमेति ★(श्वे.उ. ३-१-६) ★ इत्यादीनि।

**கருத்து**- வேதாந்த வாக்யங்கள் ப்ரஹ்ம ஜ்ஞாநத்திற்கு அங்கமில்லாத கேவல கர்மாக்களுக்கு நச்வர பலத்தையும் ப்ரஹ்ம ஜ்ஞாநத்திற்கு அக்ஷய பலத்தையும் கூறுவதைக் காணலாம்.★ இவ்வுலகில் க்ரிஷி முதலிய வ்யாபாரங்களால் ஸம்பாதிக்கப்பட்ட நெல் முதலிய பலமானது எவ்விதம் நாசத்தை யடைகிறதோ அவ்வாறே புண்ணியத்தால் ஸம்பாதிக்கப்பட்ட ஸ்வர்கம் முதலிய பலன்களும் நாசத்தை யடைகின்றன★ கர்மாக்களால் அடையப்பட்ட லோகம் இவனுக்கு முடிவுள்ளதாகவே ஆகிறது. நிலைத்திருக்காததாகிற கர்மாக்களால் நிலைத்திருக்கும் உலகமானது அடையமுடியாதது★ ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தைத் தாண்ட எண்ணமுள்ளவர்களுக்கு யஜ்ஞரூபமான ஓடங்கள் த்ருடமுள்ளவைகளல்ல.★ ★ஸாங்கமாக வேதாத்யயநம் செய்த ப்ராஹ்மணன் கர்மாக்களால் ஸம்பாதிக்கப் பட்ட லோகங்களை-பலன்களை நன்கு ஆராய்ந்து அவைகளில் நிவ்ருத்தி அடையக்கட வன். செய்யப்பட்ட கர்மாவினுல் நித்யனான பரமபுருஷன் ஸித்திக்கமாட்டான், அந்த ப்ரஹ்ம ஜ்ஞாநத்தை ஸம்பாதிப்பதன் பொருட்டு நிர்வேதத்தை அடைந்த அவன் ஸமித் முதலியவற்றை கையில் கொண்டவனாக வேதாந்தத்தை அப்யஸித்தவரும் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் உள்ளவருமான ஆசார்யனையே நாடிச் செல்லவேண்டும் அவ்வாசார்யன் தன்னை வந்தடைந்தவனும், வணக்கம் உள்ளவ னும், மனத்தை நன்கு அடக்கியவனும், பாஹ்யேந்த்ரியங்களை ஜெயித்தவனுமான அந்த சிஷ்யனுக்கு ப்ரஹ்மத்தை அறிந்தவரான அந்த குரு எந்த விஜ்ஞாநத்தினால் (வித்யையினுல்) ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் விகாரமில்லாத புருஷனை அறிகிறாரோ அப்படிப்பட்ட ப்ரஹ்ம வித்யையை உண்மையாய் உபதேசிக்கக்கட வன்.★ ★ப்ரஹ்மத்தை உபாஸிப்பவன் உத்க்ருஷ்டமான ப்ரஹ்மத்தை அடைகிறுன்★ ★ஒப்பற்ற அந்த ப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்கரிப்பவன் மீண்டும் ஸம்ஸாரத்தைப் பார்க்கமாட்டான்★ அவன் கர்மவச்யனாக ஆகமாட்டான். இவ்விதம் அவனை அறிபவன் பத்த தசையிலேயே முக்த துல்யனாக ஆகிறுன். இவ்விதமாக அவனை

LIBRARY
ACADEMY OF SANSKRIT RESEARCH

*உபாஸநம் செய்து ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுகிறுன். அந்த பரமபுருஷனை அடைவதற்கு உபாஸநத்தைத் தவிர வேறு உபாயம் கிடையாது. ஜீவாத்மாவும் ப்ரேரகனான பரமாத்மாவும் வெவ்வேறானவர்கள் என்று அறிந்திருப்பவன் அந்த ப்ரஶஸ்த ஜ்ஞாநத்தினால் ப்ரீதனான பரமாத்மாவானவன் ப்ரீதனாய்-ப்ரஸந்நனாய்க் கொண்டு (ப்ரீதிக்கு விஷயமாக்கப்பட்டவனாக) மோக்ஷத்தை யடைகிறுன்.★ இது முதலிய வாக்யங்கள் தெரிவிக்கின்றன.*

*இவ்விதம் ஐகஶாஸ்த்ரியம் க்ரமம், நியமம், ஆரம்பணீயத்வம் இவைகள் உபபாதிக்கப்படட்டன. வேதாந்த வாக்யங்களால் ஆரம்பணீயத்திற்கு உபயுக்தமான ஆபாதப்ரதீதி உண்டாகிறது என்பதை 'ததா ச' என்பதால் சொல்லுகிறுர். ததா என்பதற்கு எவ்விதம் ஸூத்ரம் வ்யாக்யாநம் செய்யப்பட்டதோ அவ்விதமே என்று அர்த்தம். 'ச' என்பது ஶங்கையை நிவர்த்திக்கிறது. அல்லது ப்ரஸித்தியைக் காட்டுகிறது. வேதாந்த வாக்யங்கள் உபாஸநங்களல்லாத கர்ம பலத்திற்கு க்ஷயத்தையும் ப்ரஹ்மஜ்ஞாநத்திற்கு அக்ஷயபலத்தையும் சொல்லுவதைக் காணலாம்.*

நநு-*ஸ்வாமிந்! கர்ம விசாரம் பண்ணியதால் கர்ம பலன்கள் நச்வரங்கள் என்று நிர்ணயிக்கப்பட்டிருந்த போதிலும் மறுபடியும் அல்ப அஸ்திரபலத்வ ப்ரதீதியை உண்டுபண்ணும் வாக்யங்கள் எதற்காக இவ்விடத்தில் உதாஹரிக்கப் படுகின்றன? அநந்த ஸ்திரபல ஆபாதப்ரதீதியை உண்டுபண்ணும் வாக்யங்கள் அன்றோ உதாஹரிக்கத் தக்கவைகள்.*

பரிஹாரம்-*கர்மாக்களைப்பற்றி விசாரம் செய்து அறிந்த புருஷனுக்கல்லவா நிர்ணயிக்கப்பட்ட அர்த்தங்களோடு ஸம்வாதமுள்ள வாக்யங்களைக் காண்பதினுல் கர்மபலன்களின் அஸ்திரத்வம்போல ப்ரஹ்மஜ்ஞாநபலத்திற்கு அக்ஷயத்வஸ்ய ப்ராமாணிகத்வம் ஸம்பவதி என்கிற ஶ்ரத்தையை ஸ்திரீகரணம் செய்வதற்காக உதாஹரிக்கப்பட்டுள்ளன.*

**தத்யதா இஹ கர்ம சித: லோக:. லோக்யதே இதி லோக: பலம்.** *இங்கு லோக ஶப்தமானது பலத்தைச் சொல்லுகிறது. லோக ஶப்தத்திற்கு தேச பரமாக அர்த்தம் சொன்னால் 'இஹ, அமுத்ர' என்பவைகளோடு அந்வயிக்காது. அந்தவதேவ தத்பவதி என்கிற வாக்யத்தினால் உபாஸந அங்கமாக இல்லாத கர்மாக்கள் அநேக காலங்களாக அநுஷ்டிக்கப்பட்ட போதிலும் அவை பலவிதமாக இருந்தபோதிலும் அவைகள் நஶ்வரங்களென்று சொல்லப்பட்டதாகிறது. ஏனென் றால் அந்த வாக்யத்திற்கு முன்னதாக* **★யோ வா ஏததக்ஷரம் கார்கீ அவிதித்வா' அஸ்மிந் லோகே ஜுஹோதி, யஜதே, தபஸ்தப்யதே பஹூநி வர்ஷஸஹஸ்ராணி★** *(அக்ஷர ப்ரஹ்ம ஜ்ஞாநமில்லாமல் செய்யப்படும் ஹோமம், யாகம் பஹு கால ஸாத்யமான தபஸ் முதலானவை எல்லாம் இவைகளைச் செய்கிறவனுக்கு (அந்தவதேவ) நஶ்வர பலஸாதநமாகவே ஆகிறது) என்கிற வாக்யமிருப்பதைக் காணலாம். கர்மாக்கள் அந்தவத்-முடிவுள்ளது என்று சொன்னால் க்ரியையினுடைய ஸ்வரூபமானது முடிவுள்ளதென்றது யாவருமறிந்ததேயாகும். அதை இங்கு*

உபதேசிக்கவேண்டியது இல்லே. பலத்துக்கே அந்தவத்வம் அர்த்த ஸித்தமாகிறது என்பதைத் தெரியப்படுத்துவதற்காக முதலில் ★தத்யதா கர்மசிதோ லோக: க்ஷீயதே★ (கர்மாவினால் ஸம்பாதிக்கப்பட்டதான பலமானது நாசத்தை அடைவதுபோல) என்கிற வாக்யத்தை முதலில் எடுத்துள்ளார். ஸாம்ஸாரிக பலத்திற்கு அத்ருவத்வம் (ஸ்திரமில்லாத தன்மை) இருக்கலாம். கர்மாக்களாலேயே ஸ்திரமான பலன் ஸம்பாதிக்கப்படலாம் என்கிற எண்ணம் சிலருக்கு ஏற்படலாம். அதைப் போக்குவதற்காக ந ஹி அத்ருவை: ப்ராப்யதே என்று எடுத்துள்ளார். அத்ருவை:- அத்ருவபலஸாதநதயா சேர்திதை: இத்யர்த்த:. கர்மசித:-லௌகிக கர்மாக்களால் கிடைத்ததான என்று அர்த்தம். புண்யசித: என்று பொது வாகச் சொல்லியிருப்பதால் நிவ்ருத்தி தர்மத்தால் ஸம்பாதிப்பட்டதற்கும் க்ஷயித்வ ப்ரமத்தைப் போக்குவதற்காக 'அந்தவதேவ' என்ற இந்த வாக்யத்திற்கு மேலே த்ருவம் தத் என்றுள்ளது (த்ருவம் நித்யமான தத்-ஆத்ம தத்வமானது அத்ருவை: அநித்ய பல ஸாதந பூதங்களான கர்மாக்களாலே அடையமுடியாது என்றர்த்தம். இதற்கு உபபாதகமாக ப்லவாஹ்யேதே அத்ருடா: யஜ்ஞரூபா:★ (ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தைக் கடந்து அக்கறை சேரும்படிச் செய்வதற்கு இவை ஸாமர்த்ய முடையவைகள் அல்ல. ஏனெனில் நடுவில் உடைந்து போகக் கூடியவைகள்) என்கிற வேறு வாக்யத்தை உதாஹரித்துள்ளார்.

இதன் பிறகு ஸூத்ரயோஜநைக்கு-அதாவது अथतो ब्रह्मजिज्ञासा என்கிற ஸூத்ரத்திற் குக் கூறப்பட்ட அர்த்தத்திற்கு மிகவும் பொருத்தமுள்ளதான கர்மாக்களின் அல்பாஸ்திர பலத்வத்தையும் ப்ரஹ்மோபாஸநத்தின் அநந்த அக்ஷய பலத்வத்தையும் சேர்த்துத் தெரிவிக்கிற வாக்யத்தை உதாஹரிக்கிருர்- ★பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்ராஹ்மணோ நிர்வேதமாயாத் நாஸ்தி அக்ருத: க்ருதேந தத் விஜ்ஞாநார்த்தம் ஸ குருமேவ அபிகச்சேத் ஸமித்பாணி: ஶ்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம்.★ இந்த ஶ்ருதிக்கு ஸ்ரீபாஷ்யகாரரே வேதாந்த ஸாரத்தில் அர்த்தம் அருளிச் செய்துள்ளார். ஶ்ருதப்ரகாஶிகையிலும் தத்வடீகையிலும் வேதாந்த ஸாரத்தில் உள்ளபடியே எழுதியுள்ளார்கள். அதாவது-ப்ராஹ்மண:-வேதாப்யாஸரத:-உபநிஷத்துக்களுடன் வேதத்தை அங்கங்களோடு அத்யயநம் பண்ணியவன். கர்மசிதாந்-கர்மத்தால் ஸம்பாதிக்கப்பட்ட லோகாந்-ஆராத்யக்ஷயித்வேந க்ஷயஸ்வபாவாந்-கர்மாக்களால் ஆராதிக்கப்பட்ட தேவதைகளும் அவர்களுடைய லோகங்களும் நாசத்தை அடையக் கூடியவைகளாக இருப்பதால் நஶ்வரங்கள் என்பதை பரீக்ஷ்ய-கர்ம மீமாம்ஸா ந்யாயத்தால் அறிந்து, அக்ருத:-நித்யனான பரமபுருஷன் க்ருதேந-கர்மாவினால் நாஸ்தி ந ஸம்பத்யதே-கிடைக்காது இதி-என்று ய:-எவன் நிர்வேதமாயாத்-நிர்வேதத்தை அடைவானோ ஸ:-அவன் தத்விஜ்ஞாநார்த்தம்-அதை அறிவதன் பொருட்டு குருமேவ அபிகச்சேத் குருவையே அடையக்கடவன், ஏவகாரத்தால் நியமவிதித்வம் சொல்லப்பட்டதாகிறது. ஸமித்பாணி:-ஸமித்தை கையில் உபஹார மாக எடுத்துக்கொண்டு செல்லவேண்டும். ஆசார்யனிடம் செல்லும்போது வெறும் கையுடன் செல்லக்கூடாது என்று சொன்னதாகிறது. ★ரிக்த ஹஸ்தேந ந உபேயாத் ராஜாநம் தைவதம், குரும்★ (அரசன், பகவான், ஆசார்யன் இவர்களிடம்

செல்லும்போது வெறும் கையுடன் செல்லக்கூடாது) என்று ஸ்ம்ருதி கூறகிறது. ஶ்ரோத்ரியம்-வேதாந்தவேதிநம்-வேதாந்தத்தை ஆசார்யன் மூலம் அறிந்தவனை, ப்ரஹ்மநிஷ்டம் -ஸாக்ஷாத்க்ருதபரப்ரஹ்மஸ்வரூபம்- ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் பிறந்த வனை, ஸ:-அந்த வித்வான்-ஆசார்யன், ஸம்யகுபஸந்நாய-நன்ருக வணங்கின, தஸ்மை-அந்த ஶிஷ்யனின் பொருட்டு யேந-வித்யாவிஶேஷேண-எந்த வித்யையி ஞல், தம்-அந்த அக்ஷரம்-ஸ்வரூபத்தால் விகாரமற்றதாயும் ஸத்யம்-ஸ்வபாவத்தால்-குணத்தால் விகாரமற்றதுமான பரமபுருஷனை வித்யாத்-அறிந்திருக்கிறானோ, தாம்-அந்த ப்ரஹ்ம வித்யையை ப்ரோவாச-ப்ரப்ரூயாத்-உபதேசிக்கக்கடவன் என்று அர்த்தம். ★ஸ குருமேவ அபிகச்சேத் தஸ்மை ப்ரோவாச இத்யநந்வயாத் அப்ராப்தத்வாச் ச. ஸ:- நிர்வேதத்தை அடைந்தவன் ஆசார்யனை அடையக் கடவன். அவன் பொருட்டு அந்த வித்வான் ப்ரோவாச சொன்னான் என்று சொல்லுவது அந்வயிக்காதாகையாலும் அதற்கு ப்ராப்தி இல்லாமையாலும் அந்த ப்ரஹ்ம வித்யையை உபதேசிக்கக்கடவன் என்று அர்த்தம் பண்ணப்பட்டது. சந்தஸி, லுங், லங் லிட: (அஷ்-3 அ 4 பா 6 ஸூ) என்கிற ஸூத்ரத்தால் லிட் விதித்திருக்கிறது

கீழே கூறப்பட்ட வேதாந்த ஸாரத்திற்கு தத்வ டீகையில் வ்யாக்யாநம் பண்ணியுள்ளதை இனி எழுதுகிருேம். இங்கு சொல்லப்பட்ட ப்ராஹ்மண ஶப்தமானது ப்ராஹ்மண ஜாதியைச் சொல்லுவதாக இருந்தாலும் ப்ரக்ருத கர்ம பரீக்ஷணத்திற்கு உபயோகமுள்ளதாக ஸாங்க ஸஶிரஸ்க வேதாத்யேதாக்களை அஜஹல்லக்ஷணையால் த்ரைவர்ணிகளைச் சொல்லுவதாகக் கொள்ள வேண்டும் என்பதற்காக ★ வேதாப்யாஸ ரத. ★ என்று அர்த்தம் அருளிச்செய்துள்ளார். ப்ரஹ்ம அணதீதி நிருக்தியினால் ப்ராஹ்மண: ஶகந்த்வாதிஷு பரரூபம் வக்தவ்யம் (அஷ்.வா.6.1.94) என்பதனால் பரரூபம் வர ப்ராஹ்ம என்றாகிறது. ப்ரஜ்ஞாதித்வாத் அண் ப்ரத்யயம் வர ப்ராஹ்மண: என்றாயிற்று. ப்ரஹ்ம ஶப்தம் வேதத்தைச் சொல்கிறது. ஆகையால் ப்ராஹ்மண ஶப்தமானது வேதாப்யாஸரதர்க ளான த்ரைவர்ணிகர்களைச் சொல்கிறது. அக்ருத: என்று அக்ருத ஶப்தமானது புல்லிங்கமாக இருப்பதை அநுஸரித்தும் வாக்ய ஶேஷத்தைக் கொண்டும் பரம புருஷனை விஶேஷ்யமாக நிர்தேசித்துள்ளார். இவ்விடத்தில் நாஸ்தி இல்லை என்கிற ஶப்தத்தால் அக்ருதத்திற்கு ஸ்வரூப நிஷேதம் பண்ண முடியாதாகையாலும் கர்மணா என்பதோடு அந்வயிக்காதாகையால் உத்பத்தி நிஷேதம் இங்கு பண்ண வேண்டிய அவசியம் இல்லாமையாலும் நாஸ்தி ஶப்தத்திற்கு ந ஸம்பத்யதே-ஸித்திக்காது-கிடைக்காது என்று அர்த்தம் அருளிச் செய்துள்ளார். தத் விஜ்ஞாநார்த்தம்-ஆபததீஸ்தஸ்ய அக்ருதஸ்ய தஸ்ய விஶதபோதாய ஆபாதப்ரதீதியினால் புத்தியிலிருக் கும் அக்ருதனான பரம புருஷனை விஶதமாக அறிந்து கொள்வதன் பொருட்டு என்று அர்த்தம்.

ஸமித்பாணியாக ஆசார்யனிடத்தில் செல்ல வேண்டுமென்று இங்கு சொன்னது ப்ரஹ்ம வித்யையைக் கேட்பதற்கு தகுதியை உண்டு பண்ணும் உபநயநாந்தரம் உண்டு என்பதைத் தெரிவிப்பதாகிறது என்று சிலர் சொல்கிறார்கள். இதற்கு

ப்ரமாணமாக சில வ்ருத்தாந்தங்களைக் காட்டுகிறார்கள். அதாவது, சாந்தோக்யத்தில் ஜாபாலனைக் குறித்துக் கௌதமர் ★अब्राह्मणो विवेक्तुमर्हति समिधं सोम्य आहर उपत्वा नेष्ये★ (அப்ராஹ்மணனாக இருந்தால் இவ்விதம் உண்மையைச் சொல்ல மாட்டான். ஸமித்தைக் கொண்டு வா உபநயநம் செய்து வைத்து உபதேசிக்கிறேன்) என்றுள்ளதைக் காணலாம் என்கிறார்கள். வேறு சிலர் அநுபநீதனை ஜாபாலி விஷயத்தில் உபநயநம் பண்ணி வைப்பது யுக்தமேயாகும். மற்றவிடங்களில் ஸமித்பாணியாக சென்றார்கள் என்று சொல்லியிருப்பது ரிக்தபாணியாக (கையில் ஒன்றும் எடுத்துச் செல்லாமல்) போகக் கூடாது என்பதைத் தெரிவிப்பதற்காக. வைஶ்வாநர வித்யையில் ★तेह समित्पाणयः पूर्वान्हे प्रतिचक्रमिरे तान् अनुपनीयैव एतदुवाच★ (உத்தாலகர் முதலான ஆறு மஹர்ஷிகள் மறுநாட் காலையில் கேகையனான அஶ்வபதியினிடம் வைஶ்வாநர வித்யையை உபதேசம் பெறுவதற்காக ஸமித்பாணி களாகச் சென்றார்கள்.) அவர்கள் ஜாத்யபிமாநத்தை விட்டு வந்திருப்பதைக் கண்டு அவர்கள், வைஶ்வாநர வித்யையை உபதேசிக்கத் தக்கவர்கள் என்று நிச்சயித்து அப்ராஹ்மணேந ப்ராஹ்மண: ந உபநேதவ்யன் என்கிற ஶாஸ்த்ரார்த்தத்தை அறிந்து ஸமித்தை உபஹாரத்தைப் பெறாமலே உபதேசித்தான்) என்றுள்ளதை ப்ரமாணமாகக் காட்டுகிறார்கள். ப்ரஜாபதி வாக்யத்தில் ஒரு இந்த்ரனே ப்ரச்நங்கள் பண்ணும்போதெல்லாம் ஸமித்பாணியாகச் சென்றான். 'ஸமித்பாணி: புநரேயாய' என்று திரும்பத் திரும்பச் சொல்கிறார். அவ்விடத்தில் பல தடவை உபநயனம் இஷ்டமாகாது. அவ்விதம் காணவுமில்லை. ஸூத்ரகாரர் ★ஸம்ஸ்கார பராமர்சாத்'★ (1-3-36) என்று மாத்ரம் சொல்லப்போகிறார். ★ஏகாம் ஶாகாம் அதீத்ய ச்ரோத்ரிய:★ ஒரு ஶாகையை அத்யயநம் பண்ணியவன் ச்ரோத்ரியன் எனப்படுகிறான். அவனை இங்கு சொல்லவில்லை. ப்ரக்ருத விஷயத்திற்கு அதனால் வரக்கூடிய பயன் ஒன்றும் இல்லாமையால் ச்ரோத்ரிய பதத்திற்கு வேதாந்த வேதிநம் என்று அர்த்தம் அருளிச்செய்தார். ச்ரோத்ரிய ஶப்தத்திற்கு அகாமோபஹத ச்ரோத்ரியனாகக் காட்டப்பட்டது. அதாவது அகாமோபஹத:-ஸாம்ஸாரிக போகத்திலிருந்து விடுபட்ட ச்ரோத்ரியன் - வைராக்யஶாலி என்று தாத்பர்யம். ப்ரஹ்மநிஷ்டன்-நன்றாக விஶதமாக, ஸந்தேஹமற, உபதேசிக்கிரவராயும் அத்ருஷ்டத: உபகாரதமத்வமும்-அநுக்ரஹ விசேஷத்தால் கண்ணுக்குத் தெரியாமல் பரமோபகாரம் பண்ணுகிறவனுகவும் இருக்கக்கூடியவனே ப்ரஹ்மநிஷ்ட ஶப்தத்தால் சொல்லப்படுவதாகக் கொள்ளவேண்டும் என்னும் அபிப்ராயத்தால் சொல்லுகிறார் 'ஸாக்ஷாத்க்ருத பரமபுருஷ ஸ்வரூபம்' என்று. ப்ரஶாந்த சித்தாய-அந்த: கரணமான மனத்தை அடக்கியவனும், ஶமாந்விதாய-வெளி இந்த்ரியங்களை அடக்கியவனுமான ஶிஷ்யனின் பொருட்டு என்று அர்த்தம் மாத்ரம் விவக்ஷிக்கப்படுகிறது. அதாவது ஆசார்யன் உபதேசிக்கும் அர்த்தத்தைக் கவனமாகக் கேட்பவனாக இருத்தல் வேண்டும் என்பதைத் தெரிவிக்கிறது. உபாஸநத்திற்கு அங்கமாயுள்ள விஷய வைத்ருஷ்ணயம்-வைராக்யம் இவ்விடத்தில் விவக்ஷிதமில்லை. அதைப்பற்றி ★ஶமதமாத்யுபேதஸ்யாத்★ என்று இனி சொல்லப்போகிறார். ஶ்ருதியும் ஶாஸ்த்ரத்தினால் உண்டுபண்ணத் தகுந்த ஜ்ஞாநமுள்ள புருஷனுக்கு அதன் பிறகு வரக்கூடிய ஶமம் முதலியவற்றை அங்கமாகக் கொண்ட உபாஸநத்தைக் காட்டுகிறது- तस्मात् एवं

वित् शान्तो दान्त उपरतः तितिक्षुः समाहितो भूत्वा आत्मन्येव आत्मानं पश्येत् *(அதனால் இவ்விதமாக அறிந்தவன் வெளி இந்த்ரியங்களையும் மனத்தையும் அடக்கினவனாக வும் மற்ற கார்யங்களில் உபரதனாகவும் பொறுமையுள்ளவனாகவும், அவதாநமுள்ள வனாகவும் தன்னுள்ளத்தில் ஆத்மாவைப் பார்க்கவேண்டும்) என்று. 'ஏவம்வித்' 'என்றதால் ஶாஸ்த்ர ஜந்ய ஜ்ஞாநத்தை உடையவன் என்று கூறப்பட்டது. 'பூத்வா பஶ்யேத்' என்றதால் உபாஸநத்திற்கு ஶமம் முதலியவைகள் அங்கங்களாகக் கொண்டிருத்தல் ஸ்தாபிக்கப்பட்டது.*

*இனி 'ப்ரஹ்மவிதாப்நோதிபரம்' என்று ஆரம்பித்து அநந்த ஸ்திர பலன்களை மட்டும் சொல்லும் வாக்யங்களை உதாஹரிக்கிறார். இந்த அநுவாகத்தில் 'யதோ வாசோ நிவர்த்தந்தே' என்று சொல்லியிருப்பதால் அநந்தஸ்திரபலத்வம் ஸித்திக்கி றது. ப்ராப்யமான ப்ரஹ்மத்திற்கு அநந்தத்வம் ஸ்திரத்வம் இவைகள் இருந்தபோதி லும் ப்ராப்தியானது காதாசித்கம்:- ஏதோ ஒரு ஸமயத்தில்தான் கிடைக்கும் என்ற ஶங்கையைப் போக்குவதற்காக அபுநராவ்ருத்தியைக் கூறுகிறார். 'ந புந: ம்ருத்யவே ததேகம் பஶ்யதி' என்பதால். ம்ருத்யு ஶப்தத்திற்கு மோஹம் அல்லது ப்ரமாதம் என்று அர்த்தம்.* 'मोहो, मृत्युः संमतो यः कवीनाम् प्रमादं वै मृत्युमहं ब्रवीमि' *என்று, இரண்டிடத்திலும் ம்ருத்யு ஶப்த வ்யபதேசம் இருப்பதை காணலாம். மோஹமென்பது ப்ராந்தி ஜ்ஞாநம். ப்ரமாதமாவது ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி அறியாமை. ம்ருத்யு நிவ்ருத்தி மாத்ரமல்ல. அதன் கார்யமும் நிவ்ருத்தமாகிறது என்பதை 'ந பஶ்யோ ம்ருத்யும் பஶ்யதி' என்பதால் கூறுகிறார், ஏனென்றால் இந்த வாக்யத்துக்கு மேல்* ★न रोगं नोतदुःस्वताम्★ *என்று சொல்லப்பட்டிருக்கிறது. ந புந: இது முதலான வாக்யம் ப்ரஹ்மம் பார்க்கப்பட்டால் ம்ருத்யு முதலியது நிவ்ருத்தமாகிறது என்பதை தெரிவிப்பதற்காக. ந பஶ்யோ ம்ருத்யும் என்ற இடத்தில் கூட பஶ்ய என்று ஶப்தத்திற்கு ப்ரஹ்மத்தைப் பார்ப்பவன் என்று அர்த்தம். ததேகம் பஶ்யதி என்று, அடுத்தபடியாக உதாஹரிக்கப்பட்ட வாக்யத்தில் விஷயத்வம் காட்டப்பட்டிருக்கிறது. ஸ்வராட் பவதி என்பதற்கு கர்ம வஶ்யனாக ஆகிறதில்லை என்று அர்த்தம்.* स्वराट् स्वतन्त्रो विज्ञेयः *(எவன் ஸ்வதந்த்ரனோ அவன் ஸ்வராட் என்று அறியத்தக்கவன்) என்று நிகண்டுகாரர்கள் சொல்லுகிறார்கள். 'தமேவம் வித்வாந்' என்ற வாக்யத்தினால் நிர்விஶேஷ சிந்மாத்ரஜ்ஞான, தேவதாந்தர உபாஸநம் முதலிய உபாயாந்தர வ்யாவ்ருத்தி ஸித்திக்கிறது. புருஷோத்தம உபாஸநமே உபாயம் என்று சொல்லியிருப்பதால்*

योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना। श्रद्धावान्भजते यो मां स मे युक्ततमो मतः ॥ (भ.गी. ६.४७)

*(என்னைவிட்டு தரிக்கமுடியாத நிலையைப்பெற்று எப்பொழுதும் என்னிடத்தில் மனத்தை செலுத்தினவராய் ஒரு க்ஷணம் கூட என்னுடைய பிரிவைப் பொறுக்கமாட்டாதவராய் என்னைப்பெற துரிதப்பட்டு எவன் என் விஷயமான யோகத்தைச் செய்கிறானோ அவன் எல்லா யோகிகளைக் காட்டிலும் உயர்ந்த உபாயத்தை உடையவன் என்று ஸர்வஜ்ஞனான நான் நினைக்கிறேன்) ஶங்கர பாஷ்யத்தில்* ★**'யோகிநாமபி ஸர்வேஷாம்'** *ருத்ர ஆதித்யாதி த்யாநபராணாம்*

மத்யே, மத்கதேந-மயி வாஸுதேவே ஸமாஹிதேந, அந்தராத்மநா-அந்த: கரணேந ஶ்ரத்தாவாந் - ஶ்ரத்ததாந:ஸந் பஜதே ஸேவதே யோமாம் ஸ மே மம யுக்த தம:-அதிசயேந யுக்த: மத: அபிப்ரேத: இதி ★-என்று உள்ளதைக் காணலாம். இதற்கு விரிவுரை எழுதியவர்கள் ப்ரஹ்மன், ருத்ரன், இந்த்ரன், ஸூர்யன், ஸுப்ரஹ்மண்யன், கணபதி முதலிய தேவதைகளில் ஒன்றைக் குறித்து த்யாநம் செய்கிறவர்களைவிட வாஸுதேவனை த்யாநம் செய்கிற யோகியே ஶ்ரேஷ்டன் என்று குறிப்பிட்டுள்ளது கவனிக்கத்தக்கது. அதனுடைய உபாஸன ஸ்வரூபஜ்ஞான மும் ஆத்மைக்ய விஷயமன்று. பரதத்வ விஷயம் என்பதை ★ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரம் ச மத்வா★ என்பதால் காட்டுகிறார். மத்வா-அறிந்து. தத:-ப்ருதகத்வ ஜ்ஞானத்தினால் தேநஜுஷ்ட:- ப்ரீதிக்கு விஷயமாக்கப்பட்டவன். அநுக்ரஹிக்கப்பட் டவன் மோக்ஷத்தை அடைகிறான் என்று அர்த்தம். இத்யாதீநி வேதாந்த வாக்யாநி- என்று முன்னதோடு அந்வயம்.

* __ * __ *

(அவ) - ஸ்பஷ்டமான அர்த்தத்துடன் கூடிய வாக்யமாத்ரத்தினால் த்ருப்தியடைந்த ஒருவன் கர்மவிசாரமானது ப்ரஹ்ம விசாரத்திற்குப் பூர்வபாவியாக விருந்தபோதிலும் ப்ரஹ்ம விசாரத்திற்குக் கர்மவிசாராபேக்ஷை வேண்டியதில்லையென்று ஆக்ஷேபிக்கி றான் :-

(भाष्यम्) ननु च - साङ्गवेदाध्ययनादेव कर्मणां स्वर्गादि फलत्वम्, स्वर्गादीनां च क्षयित्वं, ब्रह्मोपासनस्या अमृतत्वफलत्वं च ज्ञायत एव । अनन्तरं मुमुक्षुर्ब्रह्मजिज्ञासायामेव प्रवर्तताम्; किमर्था धर्मविचारापेक्षा? एवं तर्हि शारीरकमीमांसायामपि न प्रवर्तताम्, साङ्गाध्ययनादेव कृत्स्नस्य ज्ञातत्वात् । सत्यम् । आपातप्रतीतिर्विद्यत एव, तथाऽपि न्यायानुगृहीतस्य अर्थनिश्चायकत्वात् आपातप्रतीतोऽप्यर्थः संशयविपर्ययौ नातिवर्तते । अतः तन्निर्णयाय वेदान्तवाक्यविचारः कर्तव्यः - इति चेत्; तथैव धर्मविचारोऽपि कर्तव्य इति पश्यतु भवान् ॥

**கருத்து**- அங்கங்களோடு கூட வேதாத்யயனத்தை பண்ணியதாலேயே யாகாதிகர்மாக் கள் ஸ்வர்கம் முதலியவற்றை பலனாக உடையவைகள் என்றும் ஸ்வர்காதி பலன் களோ நச்வரங்களென்றும் ப்ரஹ்மோபாஸனமானது மோக்ஷத்தைப் பலனாகக் கொண் டது என்றும் அறியப்படுகிறது. பிறகு மோக்ஷத்தில் விருப்பமுள்ளவன் நேரிடையாக ப்ரஹ்மவிசாரத்திலேயே ப்ரவர்த்திக்கலாம். எதற்காக கர்மவிசாரம் பண்ணவேண்டும்? அவ்விதமாகில் ஶாரீரக மீமாம்ஸையிலும் ப்ரவ்ருத்திக்க வேண்டாமே;- ஸாங்கவேதாத்யயனம் பண்ணியதாலேயே எல்லாம் அறியப்பட்டிருப்பதால். **ஸத்யம்** - உண்மையே. ஆபாதப்ரதீதியானது இருக்கிறதென்றாலும் ந்யாநுக்ருஹீத வாக்யமே அர்த்த நிச்சாயகமாதலால் ஆபாத ப்ரதீதியினால் - ஜ்ஞாநத்தால் அறியப்பட்டிருந்தபோ திலும் அந்த அர்த்தமானது ஸம்ஶய விபர்யயங்களைப் போக்கக்கூடியதாக இராது.

*ஆகையால் அதன் நிர்ணயத்தின் பொருட்டு வேதாந்த வாக்ய விசாரம் செய்யவேண்டும் என்று சொல்லுவாயேயானால் அவ்விதமே தர்மவிசாரமும் செய்யத்தக்கது என்பதை நீ நன்கு அறிவாயாக.*

**(விரிவுரை) நநு ச** - *என்கிறவிடத்திலுள்ள சகாரத்தினால் இங்கு சொல்லப்படாத சோத்யங்களையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். அதாவது இவ்விடத்தில் வேறு ஆக்ஷேபங்கள் சொல்லப்படாமலிருந்தாலும் சில பரிஹாரங்களை மேலே சொல்லியிருப்பதால் சொல்லப்படாத சோத்யங்களையும் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று அபிப்ராயம்.*

*கர்மஜ்ஞானத்திற்குப் பூர்வ வ்ருத்தத்தை சொல்லுபவரும் கூட ஸாங்க வேதாத்யயனம் அபேக்ஷிதமென்று ஒப்புக் கொண்டிருப்பதால் அதைவிட அதிரிக்தமாக வேறொன்றும் அபேக்ஷிக்கத்தக்கதில்லை என்பதைக் காட்டுகிறது ★ஸாங்கத்யயநாதேவ★ என்கிறவிடத்திலுள்ள ஏவகாரம்.*

*அங்கங்களுடன் வேதாத்யயனம் பண்ணவேண்டியிருப்பதாலும் அங்கங்கள் அர்த்த ஜ்ஞானத்திற்குக் காரணமாகயிருப்பதாலும் மீமாம்ஸா ஶாஸ்த்ரத்தை அப்யஸிக்காமலேயே கேவல கர்மாநுஷ்டானத்திற்கு ஸ்வர்க்கம் முதலியவை பலன்களென்றும் அவைகள் நஶ்வரங்களென்றும், ப்ரஹ்மோபாஸனம் அக்ஷயமான - ஶாஶ்வதமான பலனுள்ளது என்றும் அறியப்படுகிறது. ஜ்ஞாயத ஏவ என்பதால் ஜ்ஞானம் உண்டாவற்குள்ள ஸாமக்ரியிருப்பதால் ஜ்ஞான ஸம்ப்ரதிபத்தியை ஸூசிப்பிக்கிறது. அதாவது கர்மாக்கள் அல்பாஸ்திர பலன்கள் என்கிற ஜ்ஞானம் ஸாங்க வேதாத்யயனத்தாலேயே உண்டாகிவிடுவதால் மோக்ஷத்தில் விருப்பமுண்டாவதன் பொருட்டு கர்மவிசாரம் பண்ணவேண்டியதில்லை. அதை அபேக்ஷிக்காமலேயே அல்பாஸ்திரத்வ ஜ்ஞானம் உண்டாவதினால் முமுக்ஷுத்வம் ஸித்திக்கிறது என்பதால் ப்ரஹ்மஜிஜ்ஞாஸையே செய்யத்தக்கது. தர்மவிசாரத்தினால் ப்ரயோஜனம் ஒன்றுமில்லை என்று தாத்பர்யம்.*

**ஏவம் தர்ஹி** - *என்னால் உதாஹரிக்கப்பட்ட வாக்யத்தினாலேயே கர்மாக்கள் அல்பாஸ்திர பலகங்கள் என்பதையறிந்து த்ருப்தியையடைந்திருப்பாயாகில் ஸ்பஷ்டார்த்தங்களையுடைய வேதாந்த வாக்யங்கம் கூட நம்மால் கூறப்பட்டுள்ளதால் அவைகளுடைய அர்த்தமும் மீமாம்ஸையின் அபேக்ஷயன்றிக்கே ஸாங்கவேதாத்யயனத்தினாலேயே அறியப்படுகிறதாதலால் அநந்த ஸ்திரபல ஜ்ஞானத்தின் பொருட்டு ப்ரஹ்மவிசாரமும் செய்யவேண்டியதில்லை என்று ஸித்தாந்தி ப்ரதிபந்தியாகக் கேட்கிறார்.*

*இதற்கு கர்மவிசாரம் வேண்டியதில்லை என்று ஆக்ஷேபிப்பவர் பதில் கூறுகிறார். ஸத்யம்-உண்மைதான். அர்த்தாங்கீகாரத்தில் ஸத்யம் என்கிறார். மேலே கூறிய ஆக்ஷேபத்தில் ஆபாதப்ரதீதி உண்டாகிறதென்னும் அம்சத்தை ஒப்புக் கொண்டுள்ள போதிலும் ப்ரஹ்மவிசார நைரபேக்ஷ்யை - ப்ரஹ்ம விசாரம் பண்ணவேண்டாமென்பதை ஏற்றுக் கொள்வதற்கில்லை. ஏனென்றால் ந்யாயாநுக்ருஹீத வாக்யத்தினால்தான் அர்த்த நிர்ணயம் பண்ணமுடியும். ஆபாதப்ரதீதியினால் வாக்யத்தின் அர்த்த ஜ்ஞானம் உண்டான*

போதிலும், அந்த அர்த்தஜ்ஞானமானது ஸம்ஶயவிபர்யயங்களோடு கூடியதாகவேயிருக்கும். இதை விவரித்துக் கூறுகிறேன் காரணவாக்யங்களிலுள்ள ஸத், ப்ரஹ்ம, ஆத்மா, ஆகாச, ப்ராண முதலிய ஶப்தங்களால் அர்த்ததத்துவம் நிச்சயிக்க முடியாமலிருக்கிறது. இவைகளில் எல்லாமே ஜகத்திற்குக் காரணங்களா? ஏதாவது ஒன்றா? ஒன்று என்றால் அது எது? என்பதை ஆபாதப்ரதீதியினால் நிச்சயிக்க முடிகிறதில்லை. ★விஜ்ஞாநகநஏவ ஏதேப்யோ பூதேப்யோ ஸமுத்தாய தாந்யேவ அநுவிநஶ்யதி★ ஜீவன் இந்த பூதங்களிலிருந்து உண்டாகிறான். அவைகளை அநுஸரித்து லயத்தையடைகிறான். இது முதலான வாக்யங்களால் ஆத்மாவிற்கு அநித்யத்வம் சொல்லப்பட்டதாகத் தெரிகிறது. ★அந்நவாந் அந்நாத: பவதி மஹாந் பவதி ப்ரஜயா பசுபி: ப்ரஹ்மவர்சஸேந★ இது முதலான வாக்யங்களால் ப்ரஹ்ம ஜ்ஞானத்திற்கு அல்பாஸ்திரத்வ பலன்கள் சொல்லப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இவ்வாக்யங்களால் ஸம்சய விபர்யயங்கள் உண்டாகக்கூடும். ஆக ஸாங்க வேதாத்யயனத்தால் ஸம்சயவிபர்யயங்கள் நீங்கா. ஆதலால் ந்யாயாநுக்ருஹீத வாக்யத்தால்தான் அவைகளை நிவர்த்திக்க முடியுமென்பதால் ப்ரஹ்மவிசாரம் செய்யவேண்டும் என்று சொல்லுகிறேன் என்றார். அவ்விதமே தர்மவிசாரமும் பண்ணத்தக்கதென்பதை நீ அறிவாயாக -ததைவ பஶ்யது பவாந். பவான் - உதாஹரிக்கப்படாத வாக்யங்களையும் பராமர்சிக்கிற நீ - ததைவ- இந்த ரீதியாகவே கர்ம விஷயத்திலும் ஸம்சய விபர்யயங்களின் நிரஸனம் பண்ண வேண்டுமென்று தெரிந்து கொண்டவனாய் முன்பு என்னால் உதாஹரிக்கப்படாத பல வாக்யங்களைப் பராமர்சிக்க வேண்டும். அவைகளால் கர்மாக்கள் அல்பாஸ்திரபலகங்களென்று நிர்ணயிக்க முடியாது. அந்த வாக்யங்களைக் கூறுகிறேன். ★அக்ஷய்யம் ஹ வை சாதுர்மாஸ்ய யாஜிந: ஸுக்ருதம் பவதி★ ★பூர்ணாஹுத்யா ஸர்வாந் காமாந் ஆப்நோதி★ ★ஸர்வாந் லோகாந் பசுபந்தயாஜ்யாபிஜயதி★ அபாமஸோம அம்ருதா அபூம ★அநந்தம் ஹவா அபாரம் அக்ஷய்யம் லோகம் ஜயதி। யோ க்நிம் நாசிகேதம் சிநுதே★ (சாதுர்மாஸ்யம் என்கிற யாகத்தினால் தேவதாராதனம் செய்பவனுக்கு அக்ஷயமான ஸுக்ருதம் உண்டாகிறது. பூர்ணாஹுதியால் எல்லா அபீஷ்டங்களையும் அடைகிறான். பசுபந்தத்தினால் தேவதைகளை பஜிப்பவன் எல்லா லோகங்களையும் அடைகிறான். ஸோமயாகம் பண்ணி மோக்ஷம் பெற்றவர்களாக ஆனோம். எவன் நாசிகேதம் என்னும் அக்நியை மந்த்ரத்தினால் ப்ரதிஷ்டை செய்கிறானோ அவன் முடிவில்லாததும் அக்கரையில்லாததும் நாசமற்றதுமான லோகத்தையடைகிறான்) இவ்வாக்யங்கள் ★அம்ருதத்வம் பஜந்தே★ ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந்★ ★இமாந் லோகாந் காமாந்நீ காமரூபி அநுஸஞ்சரந்★ (மோக்ஷத்தை அடைகிறான். அவன் எல்லா அபீஷ்டங்களையும் அடைகிறான். வேண்டிய போகங்களையனுபவிக்கிறவனாகவும் காமரூபியாகவும் இந்த லோகங்களில் ஸஞ்சரிக்கிறவனாகவும் ஆகிறான்) இவைமுதலான ப்ரஹ்மோபாஸநபல வாக்யங்களோடு துல்யங்களான வாக்யங்கள் காணப்படுகின்றன. ஆகையால் உபநிஷத் வாக்யங்களில் போல் உதாஹரிக்கப்படாத வாக்யங்களில் ஸம்சய விபர்யயங்கள் உண்டாவதால் அவைகளைப் போக்குவதற்காகக் கர்மவிசாரமும் செய்யத்தக்கதே. என்பதை அறிவாயாக. ததைவ கர்மவிசாரோபி கர்தவ்ய இதி பச்யது பவாந்.

☆★☆

# விண்ணப்பம்

ஸ்ரீ.உப. புரிசை ஸ்வாமி எழுதிவரும் ஸ்ரீபாஷ்ய வ்யாக்யானத்தை-ஸுகபோதினியை ப்ரசுரிப்பதற்காக 'ஸுகபோர்தினி' ட்ரஸ்ட் என்ற பெயரில் ஒரு ட்ரஸ்ட் ஏற்படுத்தியுள்ளோம்' ஸ்ரீ ஸ்வாமி முதல் அத்யாயத்தை பல ஸஞ்சிகைகளாக வெளியிட உத்தேசித்துள்ளார். இப்பொழுது முதல் ஸஞ்சிகை வெளிவந்துள்ளது. இதன் விலை முப்பது ரூபாய்தான். ஆஸ்திகர்கள் எல்லோரும் இந்த ஸ்வல்ப தொகையை செலுத்தி இந்த ஸஞ்சிகையை வாங்கி படித்து பயன் பெறுவார்கள் என நம்புகிறோம். விஶிஷ்டாத்வைத ரிஸர்ச் ஸென்டர் மூலம் முதல் அத்யாயத்தை வெளியிட ஆசைப்பட்டு அவர்களிடம் ப்ரார்த்தித்ததின் பேரில் அவர்கள் அங்கீகரித்துள்ளார்கள். அவர்களின் த்ரவ்ய ஸஹாயத்தைக் கொண்டு முதல் அத்யாயம் ப்ரசுரிக்கப்படும். ஸ்ரீ ஸ்வாமி எழுதிய தர்மஸாரம், ச்ராத்த ப்ரயோகம் முதலிய க்ரந்தங்களும் கூடிய சீக்கிரத்தில் வெளியிட உத்தேசித்துள்ளோம். ஆஸ்திகர்கள் புஸ்தகங்களை வாங்கிப் பயன்பெற வேண்டுகிறோம். விஶிஷ்டாத்வைத ரிஸர்ச் ஸென்டர் நிர்வாகிகளுக்கு எங்களது க்ருதஜ்ஞதையை தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த ஸஞ்சிகை ஆங்கீரஸ வருஷம் தை மாதம் அமாவாஸை உத்திராட நக்ஷத்திரத்தன்று திருவுள்ளூரில் ஸ்ரீவீரராகவன் ப்ரஹ்மோத்ஸவத்தில் பரமபதநாதன் திருக்கோலத்தில் அவன் திருவடிகளில் ஸமர்ப்பித்து இஞ்சிமேட்டு ஸ்ரீமதழகிய சிங்கர் திருநக்ஷத்திர மஹோத்வத்தன்று ப்ருந்தாவனத்தில் ஸ்ரீமதழகிய சிங்கர் திருவடிகளிலும் ஸமர்ப்பிக்கப்பட்டது. ஆகிலும் சில தவிர்க்கமுடியாத காரணத்தால் விளம்பித்து இன்று வெளியிடப்படுகிறது.

ஸுகபோதினி ட்ரஸ்ட்

நிர்வாகிகள்.